# திருமந்திர மாநாட்டு மலர்





திருவாவடுதுறை ஆதீனம்

வெளியீடு எண் 161.

உ

சிவமயம்

எட்டாவது

# திருமந்திர மாநாட்டு மலர்

[சார்வரி - தை]

2052

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-வது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள்

கட்டளையிட்டருளியபடி

வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம்

1962 – ஜனவரி] [பிலவ – மார்கழி

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்ருவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

2052

# பதிப்புரை

ஸ்ரீ பஞ்சாக்கரதேசிக மூர்த்திகளின் திருவருள் துணைக் கொண்டு, அவர்கள் குருபூசைத் திருநாளாகிய மகரத்தலை நாளையொட்டி, வழக்கம்போல் சென்ற சார்வரி ஆண்டிலும் எட்டாவது - திருமந்திர மாநாடு நடைபெற்றது.

மாநாட்டில் சொற்பொழிவாளர்கள், தம் நீண்டநாள் அநுபவத்தைக்கொண்டு வேதாகம சாத்திர தோத்திர வரம்பிலேநின்று திரட்டிய பல கருத்துக்களை, மக்களனை வரும் புரிந்துகொள்ளத்தக்க எளிய இனிய நடையிலே பேசுகின்றார்கள். அக்கருத்துக்களை அனைவரும் கேட்டுத் தமது வாழ்க்கை அநுபவத்தோடு ஒட்டிப் பயன் எய்து கின்றார்கள். இந்த அநுபவத்தை மாநாட்டில் கலந்து கொள்ளாத ஏனையோரும் அடைந்து உய்யவேண்டும் என்ற கருணைநோக்காலும், ஆண்டுதோறும் எத்தகைய புதுமையான கருத்துக்கள் - சிவாநுபவச் செல்வங்கள் வெளிவந்துள்ளன என்று திருமந்திர ஆராய்ச்சியின் உணர்ச்சிப்பெருக்கை அறிந்துகொள்ளும் நோக்குடனும் வழக்கம்போல் மாநாட்டுச்சொற்பொழிவுகள் அனைத்தும் தொகுத்து, மலராக வெளியிடப்பெறுகின்றது.

சைவத்தமிழ் உலகம் இந்த வெளியீட்டைப்பெற்று, போற்றி மகிழுமாக.

உ
சிவமயம்

## ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் தோத்திரம் :

இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின்
இறைவனை உயிர்க்கொலை செயாமை
அருள்பொறி அடக்கல் பொறைதவம் வாய்மை
அன்பு அறிவு என்னும் எண்மலர்கொண்டு
ஒருமையொடு அருச்சித்திடுக என்று அடியர்க்கு
ஒள்ளிய தீக்கைசெய்து உணர்த்தத்
திருஅமர் துறைசை உறையருள் குருவாம்
திருநமச்சிவாயர்தாள் போற்றி.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளுக்கு வணக்கம் கூறும் முறையில் ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகளால் பாடப்பெற்றது இச்செய்யுள். ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் திருவாவடுதுறை ஆதீனத்தை இன்றைக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்குமுன்னர்த்தோற்றுவித்த தெய்விக அருளாளர் ஆவர். இவர்கள் கண்ட ஆதீனம், தென்னாட்டில் பலகோடி மக்களுடைய ஞானத்தையும் சமய உணர்ச்சியையும் நன்னெறியையும் நிலைபெறச்செய்வதற்கும் வளர்ப்பதற்கும் துணையாக இருந்துகொண்டிருக்கிறது. இவர்களால் கட்டளையிடப்பெற்ற நற்செயல்களும் இன்றுவரை நடைபெற்றுவருகின்றன.

நாட்டிலும் மக்கள் உள்ளத்திலும் எத்தனையோ மாறுபாடுகள் தோன்றினும், குருமூர்த்திகளுடைய கட்டளையும் திட்டமும் எள்ளளவும் மாறியன அல்ல. எடுத்துக்காட்டாகத் திருமடத்தின் திருமடைப்பள்ளியை மூர்த்திகள் அமைத்து, அதில் பொருத்திய நெருப்பு அணையாமல் நின்று என்றும் அடியவர்களுக்கு அமுதளிக்கவேண்டும் என அருளிய திருமொழி இன்றும் உண்மையாக இருந்துவருவது உலகம் அறிந்ததே. இந்த ஐந்நூறு ஆண்டுகளில் நிகழ்ந்த மாறுதல்களும், பஞ்சமும் எவ்வளவோ ஆயினும் இத்திருமடத்திலும் இதன் கிளைமடங்களிலும் இன்றுவரை பசிப்பிணி ஒன்று உண்டு என்பதை எவரும் அறியார். இத்திருமடம் எந்த நல்லநோக்கங்களுடன் தோன்றியதோ அந்த நோக்கங்கள் இன்றும் இங்கே நிறைவேறிவருகின்றன.

ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள், சங்கரர் இராமாநுஜர் ஆகிய இவர்களுடன் வைத்து எண்ணக்கூடிய ஒருபெரிய தத்துவஞானி ஆவார்; இந்தத் திருமடத்தின் தம்பிரான்களில் ஒருவரும் ஆவர்.



திருவாவடுதுறை ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் ஆலயம்

## *தலச்சிறப்புக்கள் :*

சிவபெருமானுடைய ஆணையால் பசுவடிவத்தைப்பெற்ற உமாதேவியார் இந்தத் தலத்துக்கு வந்து, சிவபெருமானைப் பூசித்துப் பசுவடிவம் நீங்கப்பெற்றார். திருமூல நாயனார் மூவாயிரம் ஆண்டுகள் இத்தலத்திலே சிவயோகமிருந்து திருமந்திரமாலையை (மூவாயிரம் மந்திரங்களை) அருளிச்செய்தார். போகநாதசித்தருடைய மாணவராகிய திருமாளிகைத்தேவர், ஆசிரியருக்குத் தொண்டு செய்திருந்து அருள்பெற்று, சைவ ஸ்தாபனம் செய்து மேலும் பல அற்புதங்கள் செய்து விளங்கினார். தாம் தவஞ்செய்தமையினால் பிற்காலத்து நவகோடிசித்தபுரம் என வழங்கப்பெறும் இங்கு நவகோடி சித்தர்கள் சிவஞானம்பெறத் தவம் செய்தனர். சைவசமயாசாரியர்கள் நால்வருள் முதல்வரான ஆளுடையபிள்ளையார் தமது தந்தையார் யாகம் செய்யும்பொருட்டுத் தேவாரத்திருப்பதிகம்பாடி ஆயிரம்பொன் பெற்றனர். தமது கட்டளையின்படியே தேவர்கள் படரரசு மரங்களாக, சிவபெருமான் அம்மரநிழலில் எழுந்தருளினர். மகப்பேறு கருதி வந்து வழிபட்ட முசுகுந்தமன்னருக்கு இறைவன் இதனைத் திருவாரூராகவும், தம்மைத்தியாகேசப் பெருமானாகவும் காட்டிப் புத்திரப்பேறும் அளித்து, புத்திரத்தியாகர் என்னும் பெயருடன் வீற்றிருந்தருளினர். தருமதேவதை தம்மை வழிபட, பெருமான் அதனை இடபமாகக் கொண்டதன்றி, தம் சந்நிதியில் அரசமரநிழலில் கோயில்கொண்டிருக்கும்படி அதற்கு வரமும் தந்தார். தேவர்களும் முனிவர்களும் வேண்டிக்கொள்ள அந்த வேண்டுகோளை ஏற்றுப் போதியம்பலத்திலே சிவபெருமான் மகாதாண்டவம் புரிந்து அருளினர். சில முனிவர்களுக்குச் சிவஞானோபதேசம் செய்தருளினர். சில அந்தணர்களுக்கு வேதத்தை அருளிச்செய்தனர். போகநாத சித்தர், நவகோடி சித்தர் முதலிய சித்தர்கள் விரும்பிய வண்ணம் அவர்களுக்கு அட்டமாசித்திகளையும் பிறவற்றையும் அருளினர். இதுபோன்ற அற்புதங்கள் பல இத்தலத்திலே நிகழ்ந்தன. சித்தர்கள் பலர் இங்கே எப்போதும் வசிக்கின்றனர் என்று ஐதிகமும் உண்டு.



திருவாவடுதுறை ஆதீன மடாலயம்

## நாட்டில் மடங்கள் :

அன்றுமுதல் நாள்தோறும் நாள்தோறும் அண்ணல்
அடியரள விறந்தபெயர் வந்தவர்கள் எல்லாம்
சென்றுறையத் திருமடங்கள் திருமடங்கள் தோறும்
திருவிளக்கு அங்கு அவர்சாத்த உள்ளுடை மேற்போர்வை
துன்றியசெந் நெலின்அடிசில் கன்னல்நறுங் கனிகள்
தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன்
நன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுதம் அடைக்காய்
நரபதி ஏவலின் அமைச்சர் நாள்தோறும் நடத்த.

— ஸ்ரீ உமாபதிசிவாசாரியார்.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் போற்றிவருகின்ற சித்தாந்த உண்மைகளை உலகிற்கு உதவியருளிய சந்தானசாரியர்களுக்குள் நான்காமவராய் இன்றைக்கு அறுநூறு ஆண்டுகட்குமுன் எழுந்தருளியிருந்தவர் ஸ்ரீ உமாபதிசிவாசாரிய சுவாமிகள். பன்னிரண்டாம் நூற்றுண்டில் நிகழ்ந்தவரலாற்றை அடிப்படையாகக்கொண்டு அவர்கள் அருளிச்செய்த சேக்கிழார்புராணத்தில் உள்ளது இச்செய்யுள். சேக்கிழார் அருளிய பெரியபுராணம் சோழ அரசர்களின் உள்ளத்தை உருக்கிய காரணத்தால், சோழ அரசர்கள் சோழநாட்டில் பல திருமடங்களை நிறுவினர்கள். அந்தத் திருமடங்களெல்லாம், தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடுகின்ற முனிவர்கள் தங்கும் இடங்களாக ஆயின. முனிவர்கள் தாங்கள் ஆராய்ந்துகண்ட உண்மைகளையெல்லாம், தமிழ்நாட்டிற்குத் தத்துவசாத்திரங் களாகவும் சமயக்கோட்பாடுகளாகவும் வழங்கினர்கள். அவையே, நாட்டில் அரசியல் மாறுதல்களும் அமைதி இன்மையும் ஏற்பட்டகாலத்து மக்கள் மக்களாக வாழ்வதற்குப் பெரிதும் உதவிபுரிந்தன.



திருமூலதேவர் உத்ஸவம்

கயிலாயத்து ஒரு சித்தராய் நந்திதேவர் திருவருளைப்பெற்ற சிவயோகி, தலயாத்திரையாகப் பொதியமலைநோக்கி வருகிறபோது, திருவாவடுதுறைக்கு வந்து பெருமானை வழிபட்டு அருகிலுள்ள சாத்தனூரை அடைந்தார்; அங்கு இறந்து கிடந்த பசுமேய்ப்போனாகிய மூலன் என்னும் இடையன் உடலில் புகுந்து மூலராக எழுந்தார் என்பது வரலாறு. இப்படி மூலராக எழுந்தவுடன் எஜமான் இறந்த துக்கத்தால் கதறிய பசுக்கள், ஆனந்த மேலீட்டினால் மோந்தன; நக்கின; கனைத்தன; துள்ளிக்குதித்தன. எப்படி எப்படியோ சந்தோஷத்தைக் காட்டிக்கொண்டன. மூலராகிய சிவயோகியும் மகிழ்வோடு பசுக்களை மேய்த்தார்; அவைகளைக் காவிரித்துறையிலே நீர் அருந்தச்செய்தார்; வெயில் நேரத்தில் நிழலுள்ள இடத்தில் தங்கச்செய்து பாதுகாத்தார். மாலைநேரம் வந்ததும் பசுக்கள் கன்றுகளை நினைத்துக்கொண்டே வீடுகளை நோக்கி நடந்தன. அவை தத்தம் வீடுகளை அடையும்வரை மூலரும் பின்னே தொடர்ந்து சென்றார். இப்படி மூலர் அன்று மேற்கொண்ட பசுப்பணியும் முடிந்தது.

இப்படியாக பசுப்பணி முடிந்தபிறகு, திருவாவடுதுறையில் அரசமரத்தின்கீழ் மூவாயிரம் ஆண்டுகள் யோகத்திலிருந்து, அருந்தமிழ் மூவாயிரம் அருளினார்; திருமூல தேவநாயனார் என்று சிறப்பிக்கப்பெற்றார். அருந்தமிழும் திருமந்திரம் என்ற பெயருடன் திகழ்கிறது.

இத்தகைய மிகச்சிறப்போடுகூடிய திருமூலதேவநாயனாருக்கு, ஸ்ரீ கோமுக்தீஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறுகிற மகோத்ஸவ இரண்டாந்திருநாளில், தனிச் சிறப்புச் செய்யப்பெறுகிறது. அன்றுகாலை திருவீதியுலாவில் பெருமானுடன் திருமூல தேவநாயனாரும் எழுந்தருளுகிறார். அவர் மேற்கொண்ட பசுப்பணியின் நினைவாக அவருக்கு முன்பு ஒரு பசுமாடு கன்றுடன் கொண்டுசெல்லப்பெறுகிறது. திருவுலா முடிந்து ஆலயத்தை அடைந்ததும் சந்நிதியில் ஆதீன ஓதுவாமூர்த்திகளால் திருமூலர் வரலாறு வாசிக்கப்பெறுகிறது. உடனே கோபூஜை நடைபெறுகிறது. பிறகு தீபாராதனை தரிசனம். இப்படி நிகழ்கிற திருமூலர் உத்ஸவக்காட்சி இது.

சிவமயம்

## திருவாவடுதுறை ஆதீனம்

# எட்டாவது திருமந்திர மாநாட்டு நிகழ்ச்சிகள்

திருத்தொண்டத்தொகையில் 'பிரான்' எனச் சிறப்பித்துப்பேசப்பெற்றவர்கள் இருவர். ஒருவர் 'எம்பிரான்'; அவர் திருஞானசம்பந்தர். மற்றொருவர் 'நம்பிரான்'; அவர்தான் திருமூலதேவர். திருத்தொண்டர்கள் வரிசையில் திருமூலதேவர் பின்னவராக எண்ணப்படினும் காலத்தால் எல்லாரினும் முற்பட்டவர். இவர் சிவனுவடுதண்டுறையில் சிவபோதிநீழலில் அரனடி நாடொறும் சிந்தைசெய்து சிவாகமங்களைச் செந்தமிழில் ஆக்கியவர். இச்செந்தமிழே பன்னிரு திருமுறைகளுள் பத்தாந்திருமுறையாகிய திருமந்திரமாக விளங்குகிறது.

திருமந்திரம் இருக்குமிடம் தெரியாமையால் இதை யாரும் அறிந்துகொள்ள முடியவில்லை, பல ஆண்டுகள் சென்றன. தலயாத்திரையாகத் திருவாவடுதுறைக்கு வந்த ஞானசம்பந்தசுவாமிகளுக்குத்தான் திருமந்திரம் இருக்குமிடம் தெரியவந்தது. மாசிலாமணியீசர் பலிபீடத்தின் அருகில்வந்ததும் செந்தமிழ்மணம் வீசுவதை அவர் உணர்ந்தார்; பலிபீடத்தின்கீழ் மறைந்துகிடந்த மந்திரத்தை எடுத்து வெளிப்படுத்தினர், இந்த நிகழ்ச்சி ஏழாம் நூற்றாண்டில் நடந்ததாகப் பெரியோர் கூறுவர்.

இப்படித் திருமந்திரம் வெளிப்பட்டு ஒன்றிரண்டல்ல; சுமார் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குமேல் காலம் கடந்துவிட்டது. ஆயினும் இத்திருமந்திரத் திருமுறை வழிபாட்டுக்கு உரியதாக இருந்துவந்ததேயன்றி, திருமுறையுள் புகுந்து ஆராய்ந்து அறிந்து அநுபவித்துப் பிறரையும் அநுபவிக்கச்செய்வார் இதுவரையில் இவ்வுலகில் அரியராகவே இருந்துவந்தனர்.

'வளப்பில் கயிலை வழியில் வந்தேனே' என்று தன் வரலாற்றைச் சொல்லிக் கொள்ளுகிறுர் திருமூலர். ஆகவே அக்கயிலைபரம்பரையில் - மெய்கண்ட சந்தான உபதேசவழியில்வந்த அருட்குரவர் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள். இத்திருவாவடுதுறை ஆதீன ஆதிகுருமூர்த்திகள் அவர்களே. அவர்களுக்குப் பின்னே, இப்போது ஞான பீடத்தில் இருபத்தொராவது குருமகாசந்நிதானமாக எழுந்தருளி, அருளாட்சி செலுத்தி வருகின்றவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகபரமாசாரிய சுவாமிகள். இவர்கள் திருமந்திரத்தை அனைவரும் அறிந்து அநுபவித்து உய்யவேண்டும் என்ற திருவுள்ளம் கொண்டவர்கள், திருமந்திரம் நாடெங்கும் பரவப் பலவகையில் இவர்கள் பணி புரிந்து வருகின்றுர்கள் என்பதை இன்றைக்குச் சைவச்செந்தமிழுலகம் நேரில் கண்டு மகிழ்கிறது; திருமந்திரத்தைப் படித்து, நன்கு அறிந்து அநுபவித்தும் வருகிறது.

திருமந்திரப்பணிகள் பலவற்றுள் மாநாடு நடத்துவதும் ஒன்ருகும். இம்மாநாடு ஆண்டுதோறும் மகரத்தலைநாட் குருபூஜைவிழாத் தொடக்கத்திலே முதல் மூன்று நாட்களிலும் நடத்தப்படுகிறது. அதுவும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருமுன்பு நடந்துவருவது மிகமிகச் சிறப்புடையதொன்ரும். குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணைவழிநின்று பேரறிஞர்கள் திருமந்திர அமுதத்தை அன்பர்கள் உளங்கொள வாரி வழங்கி வருகிருர்கள். அந்தமுறையில் இவ்வாண்டு ஒன்பதாவது திருமந்திர மாநாடு நடைபெறுகிது.

எட்டாவது திருமந்திர மாநாடு சென்ற சார்வரி ஆண்டு தைத்திங்கள் முதல் நாள் (14—1—1961) சனிக்கிழமை தொடங்கி மூன்றுநாட்களிலும் மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்சள் அடியார்கூட்டங்களுடன் எழுந்தருளியிருந்தார்கள். அன்பர்கள் பலரும் குழுமியிருந்தனர். ஆதீனத்துத் தேவார இசைப்புலவர்கள் திருமுறை ஓத மாநாடு தொடங்கியது.

பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன்செட்டியார் அவர்கள் மாநாட்டுத் திறப்பாளராக இருந்து திறப்புரை நிகழ்த்திஞர்கள். தொடக்கநாளன்று டாக்டர் திரு. T. M. P. மகாதேவன் அவர்களும், இரண்டாம்நாள் சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்களும், மூன்ரும்நாள் பேராசிரியர், திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் தலைமை வகித்துப் பேருரை நிகழ்த்திஞர்கள். அவர்கள் எல்லோருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பொன்னுடைபோர்த்தி மலர்மாலைசூட்டி ஆசி அருளிஞர்கள்; புலவர்பெருமக்கள் பலரும் குறித்த தலைப்புக்களில் நின்று, அவ்வத்தலைப்புக்களில் அடங்கியுள்ள திருமந்திரப்பாடல்களின் கருத்தை விளக்கிப் பேசிஞர்கள்.

ஏழாவது ஆண்டு திருமந்திரமாநாட்டுச் சொற்பொழிவுகள் அடங்கிய மலர், திருமந்திரக்கட்டுரை - இரண்டாம்தந்திரம் முற்பகுதி என்ற இரண்டு வெளியீடுகளும் வழங்கப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்



திருமந்திரமாநாடு - தொடக்கநாள்

# தொடக்கநாள் பேருரைகள்

**திறப்புரை :**

*பேராசிரியர்,*

## திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

*அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.*

நமது பெருமதிப்பிற்கு உரிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுக்கு எனது வணக்கம் உரியதாகும்.

இன்று இத்திருமந்திர மாநாட்டிற்குத் தலைமை தாங்க இருக்கும் அன்பிற் சிறந்த டாக்டர் மகாதேவன் அவர்களே! அவையில் குழுமியிருக்கும் பெரியோர்களே! நமது குருமகாசந்நிதானம் அவர்களின் அருள் கட்டளைப்படி இந்த எட்டாவது திருமந்திர மாநாட்டைத் தொடங்கிவைக்கும் பேறு எனக்குக் கிடைத்தது குறித்து நான் மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

திருமூலர் திருமந்திரம், தமிழ்மொழியில் உள்ள ஞான நூல்களுள் முதன்மையானது; பழமையானது; பேரறிஞர்களும் பொருள் உணர்தற்கியலாத அரிய உட்கருத்துக்கள் பலவற்றை உடையது. இத்தகைய மெய்யுணர்வுக் கருத்துக்கள் எல்லாவற்றையும் கற்றோரும் மற்றோரும் நன்கு உணர்ந்து உய்தல்வேண்டும் என்னும் அருள் உள்ளம் கொண்ட நம்குருமகாசந்நிதானம் அவர்கள் இதுவரை ஏழு திருமந்திர மாநாடுகளைச் சிறப்புற நடத்துவித்து, இப்போது எட்டாவது மாநாடு நடைபெறச் செய்திருப்பது நாடுமுழுதும் போற்றுதற்கு உரிய நற்பணி ஆகும். திருவாவடுதுறைத் திருக்கோயிலில் திருமந்திர நூல் மறைந்திருந்த செய்தியை, கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர் அருள் உணர்வால் அறிந்து முன் வெளிப்படுத்திய நிகழ்ச்சியைக் கேள்வியுறுகின்றோம். அன்றுமுதல் திருமந்திர நூல் வெளிப்பட்டிருப்பினும் அந்நூற் செய்யுட்களின் அரும் பொருள்கள் பல புலனாகாமல் மறைந்து போய்விட்டன. இதனை அறிந்த நம் குருமகாசந்நிதானம் அவர்கள், அரும் பொருள்களை வெளிப்படுத்துதற்குப் பெரும் பொருட் செலவில் எட்டு ஆண்டுகளாகத் திருமந்திர மாநாட்டை நடத்துவிப்பதையும் அதுபற்றிய மாநாட்டு மலர்களையும் திருமந்திர விளக்கம்பற்றிய பல நூல்களையும் வெளியிடச் செய்து வருவதையும் நாம் எண்ணும்போது அன்று இந்நூலை வெளிப்படுத்திய திருஞானசம்பந்தரே பொருளையும் வெளிப்படுத்த இன்று தோன்றியருளியுள்ளாரோ என்ற எண்ணம் எழுகின்றது.

இந்த மாநாட்டில் கலந்துகொள்ளச் சிறந்த தலைவர்களும், நல்ல சொற்பொழிவாளர்களும் அழைக்கப் பெற்றிருப்பது நாம் வரவேற்றற்குரியது. நம்குருமகாசந்நிதானம் அவர்களின் கண்ணோட்டம் திருமந்திரத்தினிடத்தே சென்ற நாள்முதல், திருமந்திரப் பெருமையும், அதனைக் கற்போர்தொகையும் மிகவளர்ந்து கொண்டுதான் வருகின்றன. அண்மையில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்ட திருமந்திரக் கதர்ப் பட்டுக் கட்டட நூல் ஒன்றுக்கு அதன் கட்டடச் சிறப்புக்காக நமது இந்திய அரசாங்கம் முதற்பரிசு வழங்கியிருக்கும் செய்தியையும் மிக மகிழ்ச்சியுடன் இங்கே குறிப்பிடலாம் என்று நினைக்கிறேன்.

திருமந்திரத்தை இயற்றியருளிய நம் திருமூலரைப் பாராட்டிப்பாடிய பெரியோர்

பலராவர். சுந்தரமூர்த்தி நாயனர், தாம் இயற்றிய திருத்தொண்டத் தொகையில், "நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்" என்று போற்றியுள்ளார். நமது திருமூலரையும், திருஞானசம்பந்தரையுமே 'பிரான்' என்று அவர் குறிப்பிட்டுள்ளார்; திருமூலரை நம்பிரான் என்றும், திருஞான சம்பந்தரை எம்பிரான் என்றும் அவர் கூறியுள்ளார். பிரான் என்பதற்கு இறைவன் என்ற பொருள் உண்டு. திருஞானசம்பந்தர் இறைவனின் திருக்குமாரர் என்றுகூறும் மரபும், திருமூலர் கயிலாயத்தில் இருந்த சிவயோகிகளுள் ஒருவர் என்று கூறும் வரலாறும் இவ்விருவரையும் பிரான் என்று கூறியதற்குக் காரணங்களாகக் கருதலாம்.

அறுபத்துமூன்று அடியார்களில், முதலிலுள்ள ஆறு திருமுறைகளை இயற்றியருளிய திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திரு என்ற அடைமொழியுடன் சிறப்பாகப் பெயர் வழங்கப் பெறுதல்போலப் பத்தாம் திருமுறையை இயற்றியருளிய திருமூலரும் 'திரு' என்ற அடைமொழியுடன் பெயர் வழங்கப்பெறுவது குறிப்பிடத்தக்கதாம். அறுபத்துமூன்று அடியார்களில், திரு என்ற அடைமொழியுடன் பெயர் வழங்கப் பெறுவோர், இம்மூவரே அன்றி இன்னும் ஐவர் உள்ளனர். அவர்களாவார்-திருநீலகண்டர், திருநாளைப்போவார், திருக்குறிப்புத்தொண்டர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருநீலநக்கர் என்னும் ஐவராவர். இவர்களுள், திருநீலகண்டர், திருநாளைப்போவார், திருக்குறிப்புத் தொண்டர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆகிய இந்நால்வரும் திரு என்னும் அடைமொழியுடன் பெயர் வழங்கப் பெறுதற்குக் காரணம், இவர்கள் நால்வரும் தாழ்த்தப்பட்ட வகுப்பினராதலின் இவர்களை உயர்த்துக் கூறுதல்வேண்டும் என்று கருதியதாக இருக்கலாம். திருநீலநக்கர் அந்தணராயினும் தாழ்த்தப்பட்ட வகுப்பினராகிய பாணரைத் தம் நடுவீட்டில் வேதிகைப்பக்கத்தில் தங்கச்செய்து உயர்த்திய பெருமை கருதியே இவரும் திரு என்னும் அடைமொழியுடன் பெயர் வழங்கப்பெற்றிருக்கலாம். இந்த ஐவருடைய பெயர்களும், தொண்டுகளும் சுந்தரமூர்த்திநாயனர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகியோரால் திரு என்று சிறப்பிக்கப்பெற்றிருத்தலும் குறிப்பிடத் தக்கது. பின்வந்த தாயுமானர்,

*"சக்கர வர்த்தி தவராச யோகியெனும்*
*மிக்கதிரு மூலன்அருள் மேவுநாள் எந்நாளோ"*

என்று நம் திருமூலரை உளமாரப் பாராட்டியுள்ளார்.

மேலும், "மூலன்மரபில்வரும் மௌன குருவே" என்று தாயுமானர் கூறுவதிலிருந்து திருமூலர் வழியாக வந்த ஆசிரியர் மாணவர் மரபு இருந்த செய்தியும் நமக்குத் தெரிகிறது. திருமூலருடன் கல்வி பயின்ற ஒருசாலை மாணவர் இவர் உள்பட எண்மர் என்றும், திருமூலர், தாம் இயற்றிய திருமந்திரத்தின் மெய்ப்பொருளை மாலாங்கன் முதலிய தமது மாணவர்கள் எழுவருக்கு, அறிவுறுத்தினர் என்றும், அம்மாணவர்கள் எழுவரும் தனித்தனியே மடம் அமைத்துக் கொண்டு தம் குருநெறி பரவச்செய்தனர் என்றும் அகச்சான்றுகள் கூறும்.

நம் திருமூலர், மூலர் என்ற தம் பெயருக்கு ஏற்பச் சமய ஒழுங்குகட்கெல்லாம் மூலமாய் விளங்குபவர். மூலன் என்ற பெயர் பழமையானது. மூல நட்சத்திரம் காரணமாக முதலில் ஒருவருக்குப் பெயர் ஆகிப் பின்பு பலருக்குப் பெயராகியதோ, வேறோ என்பது ஆராய்தற்குரியது. சங்கப் புலவர் பெயர்களில் ஆவூர் மூலங்கிழார், ஐயூர் மூலங்கிழார், மாமூலனர், மூலங்கீரனர் ஆகிய பெயர்கள் காணப்படுகின்றன. தொல்காப்பியப் பொருளதிகார உரையில் ஓரிடத்தில் (சூத்திரம் 75) நச்சினர்க்கினியர், "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமும் உணர்ந்த மாமூலர் முதலியோர்" என்று

எழுதி இருப்பதும் நாம் நினைத்தற்குரியது. 'மாமரத்து அடியில் இருக்கும் ஏகாம்பர நாதன் பெயரே மாமூலர் என்று வழங்கியது போலும்' என்று டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கது. திருமூலருக்குச் சதாசிவ முனிகள் என்னும் பெயரும் உண்டு என்று கூறுவர். "சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே" என்பதற்குச் "சுந்தரன் ஆகமச் சொல்மொழிந்தானே" என்று பாடம் கொண்டு, இந்த அகச்சான்று காரணமாக மூலன் உடலிற் புகுவதன்முன் இவரது இயற்பெயர், சுந்தரநாதர் என்று கூறுவோரும் உள்ளனர்.

திருமந்திர நூலின் வரலாறும், இதன் ஆசிரியராகிய திருமூலதேவநாயனரின் வரலாறும் திருத்தொண்டத் தொகையுள் ஆளுடைய நம்பிகளாலும், திருத்தொண்டர் திருவந்தாதியில் நம்பியாண்டார் நம்பிகளாலும், பெரியபுராணத்துத் திருமூல நாயனர் புராணத்தில் சேக்கிழாராலும், திருத்தொண்டர் புராண சாரத்தில் உமாபதி சிவாச்சாரியாராலும், திருவாவடுதுறைப் புராணத்துள், துறைசை — சாமிநாதத்தம்பிரான் சுவாமிகளாலும் கூறப்பெற்றுள்ளன. மேற்கூறிய நூல்களுள் காணப்படும் வரலாற்றுப் பகுதிகளுள் பெரும்பாலானவை ஒற்றுமையுடையன. மேலும், பதினெண் சித்தர் நூல்கள் சிலவற்றிலும் திருமூலரின் வரலாற்றுக் குறிப்புகள் சில காணப்படுகின்றன. இவையன்றித் திருமந்திரமாலையில், பாயிரப் பகுதியுள் வரும் குரு பாரம்பரியம், திருமூலர் வரலாறு, திருமந்திரத்தொகைச்சிறப்பு, குருமட வரலாறு முதலியவற்றிலும் நாம் திருமூலர் வரலாற்றினை அறிதற்குரிய அகச்சான்றுகள் பல உள்ளன. பெரியபுராணத்துள் திருமூல நாயனர் புராணத்தில் சேக்கிழாரால் விரிவாகக் கூறப்பட்டுள்ள வரலாற்றுக் குறிப்புகள் பல, திருமந்திரத்தின் அகச்சான்றுகள் கொண்டு அமைந்துள்ளன.

"ஞானம் முதல் நான்கும்மலர்
நற்றிருமந் திரமாலை"

எனச் சேக்கிழார் கூறியிருப்பதிலிருந்து இந்நூலுக்குத் திருமந்திரமாலை என்றும் பெயர் இருந்தது என்பது தெரிகின்றது.

"மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்"

என்பதனல் இந்நூலுக்குத் திருமூலர் இட்ட பெயர் 'தமிழ்மூவாயிரம்' என்பர்.

திருமந்திரப் பாடல்கள்எல்லாம் ஒரே வகையான யாப்பில் அமைந்தனவே. அவையெல்லாம் கொச்சகம் என்னும் ஒருவகை யாப்பின்பாற்படும். பின்னர் வந்த நூலாசிரியர்கள், இதனைக் கலிவிருத்தம் என்று கூறுவர். இடையிடையே பலசெய்யுட்கள், அந்தாதித் தொடையாகக் காணப்படுகின்றன. குறிப்பாக நான்காம் தந்திரத்தில், பெரும்பாலான பாடல்கள், அந்தாதித் தொடையாக அமைந்துள்ளன. இவற்றை நோக்கும்பொழுது திருமந்திர நூல்முழுதும் அந்தாதித் தொடையாகவே அமைந்திருக்கலாமோ என்ற ஒரு எண்ணமானது நமக்கு எழுகிறது. ஏனைத் திருமுறைகளில் காணப்படாத சொல்நடையும் பொருள்நடையும் திருமந்திரத்தில் காணப்படுகின்றன. இக்காலத்து வழங்கப்படும் சித்தர்பாடல்களைப் போல் பல பாடல்கள் இத்திருமந்திரத்தில் உள்ளன. குருவின் உபதேசவாயிலாகவே உணருமாறு நம் சித்தர்கள் பொருள்களை மறைத்துக் கூறுவர். மணிமந்திர மருத்துவ நூல்களில் இம்முறையைக் காணலாம்.

திருமந்திரநூல், பாயிரப் பகுதியையும், நூலின் உட்பிரிவாகிய ஒன்பது தந்திரங்களையும், அவற்றின் உட்பிரிவாய்க் கடவுள் வாழ்த்து முதல் சர்வவியாபிவரை உள்ள இருநூற்று முப்பத்திரண்டு அதிகாரங்களையும், அவற்றில் அடங்கிய மூவாயிரம் செய்யுட்களையும் உடையது. சேக்கிழார், திருமூலநாயனர் புராணத்தில், "ஒன்றவன்றான் என எடுத்துப் பாடினர்" (செய்யுள்-26) என்று கூறியிருப்பதை நாம் நோக்கும் பொழுது, இப்பாடலுக்குமுன் இப்போது

காணப்படும் 'ஐந்து கரத்தனை' என்று தொடங்கும் விநாயகர் காப்பு, எப்போது தோன்றியதோ என்னும் ஐயம் எழுகிறது.

"மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றுமே"

என்றபடி பாடல்களின் தொகை, திருமூலர் தமிழ்த் திருமந்திரமாலை மூவாயிரமும், திருமூலர் திருமந்திரம் முந்நூறும், திருமூலர் திருமந்திர உபதேசம் முப்பதும் ஆகும். "சாத்திரத்தில் சிறந்தது திருமந்திரம்; தோத்திரத்தில் சிறந்தது திருவாசகம்; திருமந்திரம் மொத்தம் எண்ணாயிரம் செய்யுட்களை யுடையது; இதனை ஊன்றிக்கவனிக்கவும்" என்று வடலூர் அடிகள் குறித்துள்ளார். இவ்வாறே சித்தர்கள் பலரும் குறிப்பிட்டுள்ளனர். திருமூலர் பெயரால் இதுவரை வெளிவந்த நூல்களும் பலவாம். அவற்றை யெல்லாம் தொகுத்துக்காணின், திருமூலர் இயற்றிய செய்யுட்கள் சற்றேறக்குறைய ஆறாயிரம்உள்ளன. எஞ்சிய இரண்டாயிரம் செய்யுட்கள் இதுவரை வெளிவரவில்லை. அவையெல்லாம் அடங்கியதாகத் திருத்தமான திருமந்திரப் பதிப்பு ஒன்று வெளிவருவதற்கு நம் குருமகாசந்நிதானம் அவர்கள் ஆவன செய்தல் வேண்டும். திருமந்திரச் செய்யுட்கள் மூவாயிரம் மட்டுமே பத்தாம் திருமுறையிலே தொகுக்கப்பட்டு உள்ளன. மூலனுடைய உடலினுள் புகுந்து, ஆவடுதுறைப் போதியின்கீழ்ச் சிவயோகத்தில் இருந்து முடிவாக அருளியவை இம்மூவாயிரமே. ஏனைய ஐயாயிரம் செய்யுட்களையும் இதற்கு முன்னரே திருமூலர் அருளியிருத்தல் வேண்டும். அவை, மணிமந்திர மருந்துகளையும், வாதயோக ஞானங்களையும்பற்றியன. அவையும், ஏனைய சித்தர் நூல்களும் திருமந்திரத்தின் ஆராய்ச்சிக்கு மிக இன்றியமையாதனவாம்.

"வைத்த பரிசே வகைவகை நன்னூலின்
முத்தி முடிவிது மூவா யிரத்திலே
புத்திசெய் பூர்வத்து மூவா யிரம்பொது
வைத்த சிறப்புத் தருமிவை தானே" (100)

என்னும் செய்யுளும் இங்கு நினைத்தற்கு உரியது. திருமந்திரம் எண்ணாயிரத்தில், திருமந்திரமாலை மூவாயிரம், திருமந்திரம் முந்நூறு, திருமந்திர உபதேசம் முப்பது ஆகிய மூன்றும் மும்மணிகளாய் முக்கண்களெனச் சிறந்தனவாகும்.

திருமந்திரத்தில் வேத ஆகமக்கருத்துக்கள் பல உள்ளன என்பர். இதற்கு ஏற்ப,

"சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற் றேனே"
(73)

"தந்திரம் ஒன்பது சார்வுமூ வாயிரம்
சுந்தர ஆகமச் சொல்மொழிந் தானே"
(101)

"வேதமோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்
ஓதும் பொதுவும் சிறப்புமென்று உன்னுக"
(2397)

முதலியகுறிப்புகள் இருப்பதைக்காணலாம். திருமூலர், சைவ நெறியினர் எனவும், திருமந்திரம், ஞானம் முதலிய நான்கையும் பற்றிக் கூறும் நூல் எனவும் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

"சைவநெறி மெய்யுணர்ந்தோர்"
(திருமூலர், 16)

எனவும்,

"உள்ளுணர் வான ஞானம்
முதலிய ஒருநான் குண்மை
தெள்ளுதீந் தமிழால் கூறும் திருமூலர்"
(ஏயர்கோன், 409)

எனவும்,

"ஞானம்முதல் நான்குமலர்
நற்றிருமந் திரமாலை" (திருமூலர், 26.)

எனவும் உள்ள சேக்கிழார் வாக்குக்கள் இக்கருத்துக்களைப் புலப்படுத்துவனவாகும். திருமந்திரத்தில் கூறப்படும் செய்திகளைப்

பொதுவாகச் சைவ சித்தாந்தம், யோகப் பயிற்சி என இரண்டு பெரும் பிரிவாக நினைக்கலாம் என்பர்.

இந்தத் திருமந்திரத்தில் உள்ள ஒன்பது தந்திரங்களும் முறையே (1) நல்லொழுக்கம் (2) அறவாழ்க்கை (3) யோகப் பழக்கம் (4) மந்திர நுட்பம் (5) சமய ஒழுக்கம் (6) குருநெறிசிற்றல் (7) அகப்புற உணர்வு (8) அருள் நுகர்வு (9) பேராப் பெரு வாழ்வு என்னும் பொருள்களை விளக்கு கின்றன என்பர். இத்திருமந்திரம் ஒரு பெரிய கலைக்களஞ்சியமாகும். இதனை அறம் பொருள் இன்ப வீட்டுநூல், உளநூல், உடல் நூல், உணர்வு நூல், உயிர் நூல், சிற்ப நூல், கரு நூல், மருத்துவ நூல், நாடி நூல், தவ நூல், ஒழுக்க நூல், வேத ஆகம புராண நூல், சாத்திர தோத்திர நூல், வரலாற்று நூல், மூர்த்தி தலம் தீர்த்தநூல், இல்லற துறவற இயல் நூல், விலங்கு பறவை தாவர நூல், வழக்கு நூல், சமத்துவ சமரச நூல் என்று இன்னும் பலவாருகச் சொல்லலாம்; சுருக்கமாகச் சொன்னல், எல்லாப்பொருளும் இதன்பால் உள என்று கூறலாம்.

திருமூலர், பரந்த அருள் நோக்கமும் சாதி சமய வேறுபாட்டு எண்ணம் இல்லாத உயர்ந்த கொள்கையும் உடையவர்,

"நான்பெற்ற இன்பம்
பெறுகஇவ் வையகம்" (85)

"ஆர்க்கும் இடுமின்
அவரிவர் என்னன்மின்" (250)

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"
(2104)

"ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும்" (1588)

என்னும் திருமந்திரப் பகுதிகள், இதற்குச் சான்றுகளாகும். மேலும்,

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண் ணும் போதுஒருகைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க்கு இன்னுரை தானே.
(252)

என்னும் பகுதி, எல்லோரையும் ஒல்லும் வகையான் நல்லன செய்யத் தூண்டும் மிக அருமையான அறிவுரையாகும்.

சிறுவர்களுக்கும் ஏற்ற முறையில் ஔவையாரால் இயற்றப்பெற்ற நல்வழி என்னும் நூலில் உள்ள,

"தேவர் குறளும்
திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும்
முனிமொழியும் - கோவை
திருவா சகமும்
திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என்று உணர்"

என்னும் (நல்வழி 40) பாடலில் திருமந்திரமும் குறிப்பிடப்பெற்றிருப்பதிலிருந்து அக் காலத்தில் இளமையிலிருந்தே திருமந்திரத் தைக் கற்றல்வேண்டும் என்று ஔவையார் கருதினர் என்பது புலப்படுகின்றது. இதற் கேற்பத் திருமந்திரத்தில் இளைஞர்களுக்கும் விளங்கக்கூடிய மிக எளிய - தெளிவான அறிவுரைகள் இருப்பது குறிப்பிடத்தக்கது. எடுத்துக்காட்டாக,

கல்லாத மூடரைக் காணவும் ஆகாது
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன்அன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. (317)

என்னும் செய்யுளைக் காணலாம்.

இனி இந்தத் திருமந்திரத்தில் அரும் பொருள் உடையனவாக உள்ள செய்யுட் களில் இரண்டைக் காண்போம்.

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே. (571)

என்னும் பாடல், பிராணயாமம் பற்றியது. ஒருவருடைய மூச்சுக்காற்று மூக்கிலிருந்து 12 அங்குல தூரந்தான் வெளிப்படலாம் என்றும், அவ்வாறு கணக்காக வெளி வந்தால் அவர் நெடுங்காலம் வாழ இயலும் என்றும், இந்தக் கருத்துக்களை உளங் கொண்டே திருமூலர் இவ்வாறு பாடி யுள்ளார் என்றும் கூறுவர்.

சத்தியார் கோயிலில் இடம்வலம் சாதித்தால்
மத்தியா னத்திலே வாத்தியம் கேட்கலாம்
தித்தித்த கூத்தும் சிவனும் வெளிப்படும்
சத்தியம் சொன்னேம் சதாநந்தி ஆணையே.
(730)

மூச்சை இடப்பக்கமாக இழுத்து வலப் பக்கமாக விடப் பழகினால், புருவங்களின் நடு இடமாகிய நெற்றியில் ஓம் என்கிற ஓசையைக் கேட்கலாம் என்பது இந்தப் பாட்டின் முதல் இரண்டு அடிகளின் கருத்தாகும்.

திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு
வகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக்கன் றைந்து
பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே.
(2214)

இப்பாடலின்பொருள் நன்ருக விளங்க வில்லை. இதுபோல் பொருள் விளக்கமுருத அரியபாடல்கள் இன்னும் பல உள. இவை யெல்லாம் ஆராயப்பெறுதற்கு நம் குருமகா சந்நிதானம் அவர்களின் அருள் உதவும் என்ற நம்பிக்கையோடு; 'அன்பே சிவம்' என்பது திருமந்திரத்தின் உயிர்ப்பொருள் என்பதனை நினைவுபடுத்தி, இம்மாநாட்டை மகிழ்ச்சியுடன் தொடங்கிவைக்கிறேன்.

ஐய மாக்கடல் ஆழ்ந்த உயிர்க்கெலாம்
கையில் ஆமல கம்மெனக் காட்டுவான்
மையல் தீர்திரு மந்திரஞ் செப்பிய
செய்ய பொற்றிரு மூலனைச் சிந்திப்பாம்.

—பதிபசுபாச விளக்கம்.

**தலைமையுரை :**

## Dr. திரு. T. M. P. மகாதேவன் அவர்கள், M. A., Ph. D,

தத்துவத்துறைத்தலைவர், சென்னைப்பல்கலைக்கழகம்.

ஸ்ரீ - ல - ஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு எனது நன்றி கலந்த நமஸ்காரம். இங்குக் கூடியிருக்கும் பெரியோர்களுக்கு எனது வணக்கம். ஸ்ரீ இராமநாதன் செட்டியார் அவர்கள் கடைசியாகச் சொன்ன ஒருபாட்டிலே "மத்தியானத்தில் வாத்தியம் கேட்கலாம்" என்று கூறினர். இது நமக்கெல்லாம் மிகப் புனிதமான ஸ்தலமாகக் கருதப்படும் திருவேணி சங்கமமாகும். அதாவது, யமுனேயும் கங்கையும் அந்தர்வாகினியாகிய சரஸ்வதியும் கலக்குமிடம். இது பூமத்திய நிலத்திற்கு எடுத்துக்காட்டாக இருக்கிறதென்று கூறுவார்கள். இந்த இடத்திலேயே யோகப் பயிற்சி செய்தால் நாடியும் நாதமும் கேட்குமென்று யோகிகள் கூறுவார்கள். எப்படி திருவேணி சங்கமமானது இந்துக்களாகிய நமக்குப் புண்ணியஸ்தானமோ, யோகஅனுகுணத்தைக் காட்டுகின்ற இடமோ, அது போலவே இன்று இவ்விடத்தில் மூன்று இடங்கள் - புனித தத்துவங்கள் சேர்ந்து இருக்கின்றன.

இன்று பொங்கல் புண்ணிய காலம். இங்கு நாம் கூடியிருக்கின்ற க்ஷேத்திரமும் மிகவும் புனிதமானது. நாம் எந்த உத்தேசத்தோடு இங்கே சேர்ந்திருக்கின்றேமோ அந்த உத்தேசமோ உத்தமமானது. இந்த மூன்றும் திருவேணியாகச் சேர்ந்து நம்மை இப்பொழுது புனிதமாக்கிக்கொண்டு இருக்கிறது. பொங்கல் திருநாள் நமக்கெல்லாம் மிகவும் தலைசிறந்த ஒரு திருநாள். எந்த ஒரு பரம்பொருளின் கிருபையினலே, கருணைப்பிரவாகத்தினலே நாம் உயிர்வாழ்ந்து கொண்டிருக்கிறேமோ, அந்தப் பரம்பொருளுக்கு நன்றி செலுத்தும் திருநாள். பொங்கலுடைய தத்துவம் என்ன என்பதற்கு ஆதாரம் தமிழ்நூல்களிலே அநேகமாகக் காணக்கிடக்கின்றது. ஸ்ரீமத் பகவத்கீதையிலும் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. மூன்ருவது அத்தியாயத்திலே பக்த கோடிகளுக்கெல்லாம் கிருஷ்ணபரமாத்மா உபதேசம் செய்கின்ருர்.

"பிரஜைகளோடுகூட யக்ஞங்களைச் சிருஷ்டி செய்த, நம்மைப் படைத்த பிரஜாபதி சொல்கின்ருர் ; இந்த யக்ஞங்களினலே நீங்கள் மேன்மையடையுங்கள்; உங்களுக்கு வேண்டியவற்றை யக்ஞத்திலிருந்தே பெற்றுக்கொள்ளலாம். யக்ஞங்கள் மூலமாகத் தேவர்களை நீங்கள் திருப்தி செய்யுங்கள் ; அப்படி திருப்தி செய்யப்பட்ட தேவர்கள் உங்களுக்கு எல்லாவற்றையும் அளிப்பார்கள் ; தேவர்களினலே அனுக்ரகிக்கப்பெற்ற நன்மையை நீங்கள் பகிர்ந்துகொள்ளாவிட்டால், நீங்கள் திருட்டுத்தனத்தைத்தான் ஆச்சிரமிப்பவர்களாக ஆவீர்கள் ; யக்ஞங்களினலே நாம் ஈஸ்வர ஆராதனைசெய்து அவனுடைய சேஷத்தைப் புஜிக்கவேண்டும். அதுதான் புண்ணிய போஜனம் ஆகும்; நமக்காகமட்டும் நாம் சமைத்துக்கொண்டால் நாம் பாவத்தைத்தான் சாப்பிட்டவர்களாவோம்" என்று தொடங்கி, எவ்வாறு இந்த யக்ஞயம் நடைபெறுகின்றது என்பதை விளக்கமாகக் கூறுகிருர் கிருஷ்ண பரமாத்மா.

அன்னத்திலிருந்து சகல பூதங்களும் உண்டாகின்றன. அன்னம் மழையிலிருந்து உண்டாகின்றது. மழை யக்ஞத்திலிருந்து உற்பவிக்கின்றது. யக்ஞம் கருமத்திலிருந்து தோன்றுகிறது. கருமத்தை நாம் மறைகளிலிருந்து தெரிந்துகொள்கிறேம். மறைகள்

அட்சரங்களிலிருந்து உண்டாகின்றது. இது தான் சக்கரம். தரும சக்கரம். இந்தத் தரும சக்கரத்தை எவன் ஒருவன் பிரவர்த்தனம் செய்யவில்லையோ அவன்தான் பாவி என்று கூறுகின்றது பகவத்கீதை.

தரும சக்கரத்தை அடிப்படையாகக் கொண்டுதான் மகாத்மா காந்தி அவர்கள் சர்க்கா என்பதை அளித்தார் என்பது யாவரும் அறிந்த விஷயம். உழவு என்பதும் தருமசக்கரந்தான். உழவினாலேதான் தரும சக்கரம் நடக்கிறது. ஆகையினால்தான் பொங்கல் திருநாளிலே நாம் ஆனந்தமாக இருக்கின்றோம். இந்த ஆனந்தம் நமக்கு எவ்வாறு கிடைக்கின்றது என்று கேட்டால், நமக்கென்று மட்டும் வாழாமல் எல்லோரும் இன்புற்று இருக்கவேண்டுமென்ற ஆசையோடு நாம் இந்த ஒரு நாளிலாவது இருக்க முயலுவதனால்தான் நாம் ஆனந்தமுடன் இருக்கிறோம். மனுஷ்யர்களாக இருக்கும் நாம்மாத்திரம் அல்ல; பசுக்களும் பிராணிகளும் இன்புற்று இருக்கவேண்டும் என்ற உத்தேசத்தோடு மறுநாள் மாட்டுப் பொங்கல் திருவிழாவையும் கொண்டாடுகிறோம். ஆகவே, இதைவிட புனிதமான ஒருநாள் இருக்கமுடியாது.

இரண்டாவதாக, நாம் குழுமியிருக்கும் க்ஷேத்திரமே மிகவும் புனிதமானக்ஷேத்திரம். நமது நாயன்மார்கள்பாடிய ஸ்தலம் இது. ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தியின் திருமடம் இது. அவர் மரபில்வந்த இந்த தருமத்தை நமக்கெல்லாம் போதிக்கவேண்டுமென்ற ஒரே நோக்கத்தோடு இங்கு ஆட்சிபுரிந்தருளும் மகாத்மா நிவசிக்கும் ஸ்தலம் இது. திருமூலர் கோடியுகங்கள் இங்கு வாழ்ந்து தவம் புரிந்து லோகத்தை ஆசீர்வதித்த இடம். ஆகவே இதைவிட புனிதமான இடம் – ஸ்தலம் கிடைப்பது அரிது.

மூன்றாவதாக, நாம் திருமந்திரத்தைக் குறித்துச் சிந்திப்பதற்கு ஒரு அவகாசம் இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கிறது. பிரதிவருஷமும் திருமந்திரமாநாடு குரு அருளால் நடைபெற்று வருகிறது. இன்று எட்டாவது திருமந்திரமாநாடு ஆரம்பமாக இருக்கின்றது. திருமந்திரம், நூல்களுக்கெல்லாம் தலைசிறந்த தனிநூல் என்று ஸ்ரீ செட்டியார் அவர்கள் கூறினார்கள். மந்திரம் என்றாலே எதை நாம் தியானம் செய்தால் நாம் காப்பாற்றபடுவோமோ அதற்குத்தான் மந்திரம் என்று பொருள். நமக்குக் குறிக்கோள் என்னவென்றால் வீடு பெறுவது. எதைச் சிந்திப்பதினாலே நாம் வீட்டைப் பெறலாமோ - மோட்ச சாம்ராஜ்யத்தை அடையலாமோ அது மந்திரம் எனப்படுகிறது. திருமூலர் திருமந்திரம் நாம் மோட்சம் அடைவதற்கு உயரிய ஒரு சாதனையாகும். ஆகவே இந்த மூன்றும் சேர்ந்து திருவேணியாய் அமைந்திருக்கிறது. ஆகவேதான் பொங்கலன்று நீங்கள் வரக்கூடுமோ; இயலாவிட்டால் அடுத்த நாள் வரலாம் என்று கேட்டுக்கொண்டார்கள். பொங்கலன்றுதான் வரவேண்டும் என்று வந்திருக்கிறேன். இந்தத் திருவேணி சங்கமத்தில் ஸ்நானம் செய்பவர்கட்கு மோட்சம் நிச்சயம் கிடைக்கும். அந்த ஸ்நானத்திலே எனக்கும் ஒருபங்கு கிடைக்கலாம் என்று எண்ணத்தோடுதான் இங்கு வந்திருக்கிறேன். இந்த ஒருபேற்றை அருள்கூர்ந்து அளித்ததற்காக ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானத்திற்கு மீண்டும் நான் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நம்முடைய நாடு புண்ணியபூமி என்று புகழப்பட்டிருக்கிறது. சுவாமி விவேகானந்தர் ஒரு உபந்யாசத்திலே கூறுகின்றார் :- "சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஒரு மனுஷ ஜீவி மோட்சத்தைப் பெறவேண்டுமானால் இந்தத் தேசத்தில் அது பிறந்துதான் ஆகவேண்டும்" என்று கூறுகின்றார். அதாவது கடைசி ஜென்மம் இந்தத் தேசத்திலேதான் ஒரு ஜீவிக்கு ஏற்படவேண்டும். ஆகவேதான் பாரதநாடு புண்ணிய பூமி என்று பறைசாற்றி இருக்கின்றார் விவேகானந்தர்.

மற்றைய துறைகளிலே வேறுபாடு இருக்கலாம் மொழிச்சண்டை இருக்கலாம். இனச் சண்டைகள் இருக்கலாம். மற்ற பூசல்களும் இருக்கலாம். ஆனால் ஆத்மீக வாழ்விலே நம் பாரதநாடு ஒன்று என்பதை மறக்கக்கூடாது. இதை வற்புறுத்துவதற்காகத்தான் திருமூலதேவர் வடக்கிலிருந்து தெற்கே வந்ததாகப் புராணம் கூறுகிறது. மற்ற பேதங்கள் அநேகம் இருக்கின்றன. ஆனால் பாரதநாட்டின் ஆத்மா ஒன்றுதான். இமயமலை முதற்கொண்டு குமரி முனை வரையிலே ஒரே நாடு என்பதைத்தான் நம்முடைய பெரியோர்கள் ஒருமுகமாக நமக்குப் போதித்திருக்கின்றனர். இதை நாம் மறக்கவே கூடாது. ஆகவேதான் சிலநாட்களுக்குமுன்னால் இந்த ஆதீனத்தின் சார்பிலே நடைபெற்ற சைவ சித்தாந்த மாநாட்டிலே நம் சித்தாந்தசைவம் வடநாட்டில் விளங்கி வந்திருக்கின்றது என்று கூறினேன். வடநாட்டிலேயிருந்து தென்னாட்டிற்கு வந்தது என்று சொன்னேன் என்று தவறாகப் புரிந்துகொண்டார்கள்.

சைவம் நம்முடைய நாட்டினரின் பொதுச்சொத்து. சித்தாந்தசைவம் தென்னாட்டில் விளக்கமுற்றிருந்தது போலவே வடநாட்டிலும் விளங்கிவந்திருக்கின்றது என்பதை நான் எடுத்துக்காட்டினேன். அதுபோலவே சித்தாந்தம் நம் நாட்டின் எல்லாப் பாகங்களிலும் வளர்ந்து வந்திருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். வடநாட்டில் நாதலோகம் நாத சித்தாந்தம் என்று கூறுகிறார்கள். இந்த சித்தாந்தத்திற்கு ஆதிகுரு பரசிவமே என்றும், ஆதிநாதர் என்றும் குறிப்பிடுகின்றார்கள். இந்த ஆதிநாதராக உள்ள பரசிவத்தைத்தான் திருமூலர் மூலன் என்று குறிப்பிடுகின்றார். ஆதிநாதரிடத்தில் பத்தியேந்திரநாதர் இந்த உத்தம உண்மையைக் கற்றார். அவருக்குப் பிறகு கோரக்கநாதர் வந்தார். பிறகு ஜாலந்தர், மைனாவதி என்ற ஒரு அரசி, அவருடைய புத்திரர் கோபிசந்திரன் எனப்பட்டவர்கள் துறவு பூண்டு இந்த யோகவழியைக் கடைப்பிடித்தார்கள் என்றும் கூறுகின்றார்கள். வடநாட்டிலே கோரக்க நாதிகள் என்று நாத பரம்பரையிலே குறிப்பிடப்படுகிறார்கள். இந்தியிலே அதை "கான்பாட்" என்று கூறுகிறார்கள். கான்பாட் என்றால் காதுகளைத் துளைத்துக் கொண்டவர்கள் என்று பொருள். நாம் பரமசிவத்திற்கு எவ்வாறு பெரிய அழகிய குண்டலங்களை அணிவித்து மகிழ்கிறோமோ அதைப்போல நாதயோகிகள் காதுகளிலே நீண்ட துவாரங்களைச் செய்துகொண்டு குண்டலங்களை அணிந்துகொள்ளுகிறார்கள். அதனாலேதான் இவர்களுக்குக் கான்பாட் என்ற பெயர் வந்தது. பரமசிவத்தைச் சேர்த்து ஒன்பது நாதர்கள் என்று கூறுகிறார்கள். இந்த நாத சித்தாந்தம் வடநாட்டிலே மிகவும் பரவியிருந்த காலம் ஒன்று உண்டு. வங்காளத்திலும், பாஞ்சாலத்திலும், காமரூபத்திலும், உட்கலத்திலும், மகாராஷ்டிரத்திலும், ராஜபுதனத்திலும் அநேக நாத யோகிகள் இருந்ததாக நாம் கேட்டிருக்கின்றோம். ஆகவே, சைவமும் யோகமும் தாந்திரிக சாதனையும் ஆகிய இவையெல்லாம் ஒருங்குசேர்ந்து இந்த ஒரு சம்பிரதாயத்தில் நமக்கு உண்மைவழியைக் காட்டியிருக்கிறது.

சமீபத்திலே ஒரு பெரியவர் என்னுடன் பேசிக்கொண்டு இருந்தார். கல்வித்துறையிலேயே உயர்ந்த பதவிகளை ஆற்றி வந்தவர். அவர் கூறினார்; நான் சிறு பிள்ளையாக இருந்தபோது, இங்கிலாந்திலே கல்வியைக் கற்றுக்கொண்டிருந்த சமயம், ஒரு பொருட்காட்சி இங்கிலாந்தில் நடைபெற்றது. அதாவது, இந்த நூற்றாண்டின் ஆரம்பத்திலே, அந்தப் பொருட்காட்சியில் ஒரு பகுதியிலே இந்தியநாட்டின் சிற்பங்களெல்லாம் வந்திருந்தன. அவற்றை விளக்குவாயா என்று என்னைக் கேட்டார்கள். ஆனால், எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் எவ்வாறு இந்த ஒரு கஷ்டமான நிலையைத் தாங்குவேன்

என்று எண்ணிக்கொண்டிருந்தபோது, ஒரு கூலியாளாக இந்தியன் ஒருவன் காணப்பட்டான். அவனை நான் கேட்டேன், உனக்கு ஏதாவது இதுபற்றித் தெரியுமா? என்று. அவன் நீங்கள் கவலைப்படாதீர்கள் என்று பதில்சொன்னான். இந்தச் சிற்பங்கள், மற்றுமுள்ள பண்டைக்காலத்துப் பொருள்கள், அவற்றின் விளக்கங்கள்எல்லாம் என்னால் சொல்லமுடியும் என்றும் அவன் கூறினான். அப்படியானால், நீ வேலையாளாக இருக்க முடியாதே என்று எனது சந்தேகத்தைத் தெரிவித்துக்கொண்டேன். அதற்கு அவன் பதில் அளித்தான்; ஆமாம்; நான் கூலியாள் அல்ல; ராஜஸ்தாவிலே ஒரு பெரிய யோகி இருக்கின்றார்; அவர் என்னை இங்கு அனுப்பி வைத்திருக்கின்றார்; எதற்காக என்றால், இந்த இடங்களிலுள்ள மக்களை எவ்வாறு கடைத்தேற்றலாம் என்பதைப் பார்ப்பதற்காக. அதோடு தான் ஒரு ராஜ்யகுலத்தைச் சேர்ந்தவன் என்பதையும் கூறினான். இதிலிருந்து சித்தர்கள் இன்றும் மக்களைக் காப்பாற்றுவதற்காக இருந்துவருகிறார்கள் என்ற உண்மை தெற்றெனத் தெரியலாம்.

திருமூலதேவர் ஆகாச மார்க்கமாகக் கயிலாயத்திலிருந்து தெற்கே வந்தார் என்று சொன்னால், சரித்திர ஆசிரியர்கள் நகைப்பார்கள். இது சம்பவமா அல்லது இது ஏற்பட்டிருக்குமா என்று கேட்பார்கள். அவர் மூலன் என்பவர் தேகத்திலே புகுந்து, பிறகு தெய்வத்தின் கட்டளை இது என்று தெரிந்துகொண்டு இந்த க்ஷேத்திரத்திலே உள்ள அரசமரத்தின் அடியிலே அமர்ந்து ஆண்டுக்கு ஒரு மந்திரமாக 3000 மந்திரங்களை இயற்றினார் என்றால், சரித்திரக்காரர்கள் சிரிப்பார்கள். ஆனால் சரித்திரஉண்மையைவிட உயரிய உண்மை ஒன்று இருக்கிறதென்பதை நாம் மறக்கக்கூடாது.

மூன்று நாட்களுக்கு முன்னர்தான் ஜப்பான் தேசத்திலிருந்து ஒரு பெரியவர் சென்னைக்கு வந்தார். அவருக்கு 91 வயது. அவர் பல சாஸ்திர நூல்களை உலகமறிய இயற்றியவர். 1949ம் வருஷத்திலும், சமீபத்திலே 59ம் வருஷத்திலும் அவரோடு மேற்கு கிழக்கு தத்துவ சாஸ்திர மாநாடுகளிலே கலந்துகொண்டேன். அவர்சென்னைக்குவந்தபோது பல்கலைக்கழகத்திற்கு வந்தார். நம் மத்திய அரசாங்கம் அவருக்கு ஒருவிதமான உபத்திரவமும் கொடுக்கக்கூடாது என்றும் பேச்சுக்கள் வேண்டாம் என்றும் அறிவித்திருந்தது. அப்படியிருந்துங்கூட அவர் பேசவேண்டுமென்று வந்தார். அவர் அந்த பேச்சிலே குறிப்பிட்டார்: புத்தருடைய சரித்திரத்தை எடுத்துக்காட்டாகக் கூறி, "சரித்திர உண்மைதான் உண்மையென்று நாம் நினைக்கக்கூடாது; புராண உண்மை இதைவிட மேலானஉண்மை; புராணத்திலே காணப்படும் செய்திகளெல்லாமே பொய் என்று வாதிக்கக்கூடாது" என்று கூறினார்.

நம்முடைய சிற்றறிவைக் கொண்டு ஒருவர் மூவாயிரம் வருஷம் வாழமுடியுமா? ஆகாசமார்க்கமாகப் பறந்துவர முடியுமா? பரகாயப்பிரவேசம் செய்யமுடியுமா? என்று நாம் வாதிக்கின்றோம். ஆனால் நம்முடைய அறிவுக்கும் தாண்டி அப்பாலுள்ளதான உண்மையை மறந்துவிடுகிறோம். பௌதிக திருஷ்டியில் பாருங்கள். இருபது வருஷங்களுக்கு முன்னாலே சந்திர மண்டலத்தை எட்டிப்பிடிக்க முடியுமா என்று பரிகசித்திருந்த காலம். அதுமாறி இப்போது சந்திர மண்டலத்திற்கும் போவோம்; ஏன் சூரிய மண்டலத்தையுமே எட்டிப் பிடிப்போம் என்று கூறுகிறார்கள். இதைப் பார்த்து நாம் நகைப்பது கிடையாது. ஆகவே திருமூலர் ஒரு சித்த புருஷர். சித்த புருஷர்களெல்லாம் எப்பொழுதும் நித்தியர்களாக உள்ளவர்கள். அவர்கள் இருப்பதனால்தான் உலகம் நிலைத்து இருக்கிறது. அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றினால்தான் உய்யலாம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இந்தத் திருமந்திரம் தோன்றிய இடமே மிகஅழகான இடம். வால்மீகியின்

இராமாயணத்தைப்பற்றிச் சொல்லுவார்கள் அது சோகத்திலே பிறந்தது என்று. ஒரு வேடனுனவன் பட்சிகளைப்பார்த்து அம்பு எய்தான்; அவைகள் அடிபட்டு விழுந்தன; அதைப்பார்த்துச் சோகமுற்றுர் வால்மீகி; அந்தச் சோகமே சுலோகமாக மாறியது என்று கூறுவார்கள். சோகத்திலே ஆதி காவியமாகிய இராமாயணம் தோன்றியது. திருமூலர் திருமந்திரமும் சோகத்தில்தான் தோன்றியது.

என்ன சோகம்? நாளைக்கு மாட்டுப் பொங்கலல்லவா? பசுக்கள் அழுதுகொண் டிருந்தன. மேய்த்த இடையன் இறந்து போனுன். அவனுடைய சரீரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து பசுக்கள் அழுதுகொண்டிருந் தன. இந்தப் பசுக்களுடைய துக்கத்தைப் பார்த்தார், ஆகாச மார்க்கமாக வந்து கொண்டிருந்த சிவயோகி. உடனே உள் ளத்திலிருந்து அன்பு பெருகிற்று. அன்பே சிவம் என்ற உபதேசத்தை மறக்கவில்லை. அன்புதான் சிவம் என்பதைத் தன்னுடைய வாழ்க்கையில் காட்டினுர். பசுக்கள் இங்கு பரிதவித்துக் கொண்டிருந்தன. அவற்றின் சோகத்தை நிவாரணம் செய்வதற்கு மூல னுடைய சரீரத்தில் புகுந்துகொண்டார். இந்த சோகத்தின் காரணமாகப் பரகாயப் பிரவேசம்செய்தயோகி, இந்த லோகத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று பரமகருணை யினுல் திருமந்திரத்தை இயற்றினுர். ஆகவே, திருமந்திரம் சோகத்தில் பிறந்த ஒரு மகா காவியம் என்பதை நாம் மறக்கக்கூடாது.

இவ்வளவுநாளும் நாம் சுகமாக இருந் தோம் – இருக்கின்றோம் என்று எண்ணி னோம். நம்மை நாம் அறிந்து பார்த்துக் கொண்டால், நாம் துக்கிதர்களாக - துக்க முற்று இருந்தோம் என்பதை ஒருவரும் மறக்கமுடியாது. எவ்வளவு சுக சாதனங் கள் நமக்குக்கிடைத்திருப்பினும், எனக்குத் துக்கம் இல்லை என்று எவனுவது கூறு வானு? எவனும் கூறமாட்டான். இதைத் தான் புத்தர்பிரான் 'சர்வம் துக்கம்' என்று பறைசாற்றினுர்: எல்லாம் துக்கமயமானது என்ற ஒரு உண்மையைப் போதிமரத்தின் அடியில் கண்டார்.

போதிமரம் என்பது அரசமரம். திரு மந்திரமும் போதிமரமாகிய அரசமரத்தின் அடியில் திருமூலரால் இயற்றப்பட்டது. ஞான உதயமானது எந்த மரத்தினடியிலே ஏற்பட்டதோ அந்தமரந்தான் போதிமரம். புத்தர்பிரான் எப்படி போதிமரத்தினுடைய அடியிலே பேருண்மையைக் கண்டாரோ, அதைப்போலவே திருமூலரும் இங்குள்ள போதிமரத்தின் அடியிலேதான் புனித உண் மையைக் கண்டார். பசுக்களின் சோகத் தைப் போக்குவதற்குப் பரகாயப்பிரவேசம் செய்தமகாயோகி இந்த லோகம் முழுவதும் சோகத்திலிருந்து விடுபடவேண்டுமென்ற உத்தேசத்துடன் திருமந்திரத்தை இயற்றி னுர்: ஆகவே, இந்த க்ஷேத்திரத்திலிருந்தே திருமந்திரத்தின் உண்மை பரவவேண்டும். இந்த உண்மையை உணர்ந்தால் மக்கள் சுகத்தைப் பெறலாம் என்பதைக் காட்டு கின்றது இன்று துவங்கியிருக்கும் மாநாடு.

இம்மாநாட்டில் முதலாவது தினமாக இருக்கிற இன்று, திருமந்திரத்தின் மூன்று பகுதிகளைப்பற்றி நாம் சிந்திக்க ஏற்பாடு செய்யப் பெற்றிருக்கிறது. 'அன்புடைமை' 'அன்பு செய்வாரை அறிவன் சிவன்', 'கல்வி' என்ற இந்தமூன்று பகுதிகள். இந்தமூன்று பகுதிகளிலே சகல சாஸ்திரங்களினுடைய சாரமும் அடங்கிக் கிடக்கின்றது என்று நாம் ஒருவாறு கூறலாம். திருமந்திரத்தின் மூல மந்திரம் அன்பே சிவம் என்றே கூறு வர். அன்பே சிவம் என்ற மந்திரம் மூல மந்திரம் என்று நாம் கூறலாம். மத வேறு பாடுகள் இருக்கலாம். சமயச் சண்டைகள் கிளம்பலாம். ஆனுல், அன்புதான் கடவுள் என்ற விஷயத்தில் விவாதம் ஒன்றுமிருக்க முடியாது. இந்த அன்புதான் சிவம் என்று மக்கள் உணர்ந்தால், ஒருவரை ஒருவர் விரோதித்துக்கொள்ளமாட்டார்கள்; இம் சிக்கமாட்டார்கள். இந்த இம்சைகளுக்கும்,

இவ்விரோதங்களுக்கும், யுத்தங்களுக்கும் காரணம் என்ன என்று கேட்டால் அன்பை மறப்பதுதான். அன்புதான் உண்மை; அன்புதான் பரதத்துவம் என்று உறுதி கொண்டால் சுகம் நமக்குத் தானுகவே கிடைக்கும்.

இந்த அன்பு என்பது பிரிக்க முடியாதது. துண்டிக்கக்கூடாதது. எங்கே அன்பு துண்டிக்கப்படுகின்றதோ அங்கே அன்பு கிடையாது. எது துண்டிக்கப்படுகின்றதோ அது அன்பாக இருக்க முடியாது. கோபம், குரோதம் முதலியன ஒருவரை ஒருவர் வேறுபடுத்துகின்றன. ஆனுல், அன்புதான் ஒன்று சேர்க்கின்றது. நம்முடைய நாட்டிலேயே நமது துரதிருஷ்டவசமாக இந்த உண்மையை மக்கள் மறந்துவிட்டார்கள். மறக்காவிட்டால், சில சதுர மைல்கள் நம்முடைய பிராந்தியத்தில் சேரவேண்டுமா, மற்றப் பிராந்தியத்தில் இருக்கலாமா என்பதைக் குறித்து ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்ளுவார்களா ? கோபாவேசத்தோடு தூற்றுவார்களா ? இந்த ஒன்றுசேர்க்கும் அன்பை நாம் மறந்துவிட்டோம். திருமூலர் நமக்குக் கொடுத்த மந்திரம் அன்பை நாம் பெறவேண்டும் என்பதுதான்.

அன்பேதான் பரதத்துவம். தைத்திரியத்திலே அழகான மந்திரம் இருக்கிறது. பிரம்ம தத்துவத்தை ரசமென்றும், ஆனந்தமென்றும் அந்தச் சுலோகம் கூறுகிறது. அந்தப் பரம்பொருள் ஞானரசம். இன்பமயமானது, அன்பே வீடானது. ஜீவர்கள் ரசமயமான ஆனந்தத்தை - இன்பத்தை அடைந்துதான் ஆனந்தம் பெறுகிருர்கள். இந்த ஆனந்தமாய் இருக்கிற அவகாசம் இல்லாவிட்டால், எந்தப் பிராணன் ஜீவிக்க முடியும்? உயிர்வாழ முடியும் என்று கேட்கின்றது இந்தச் சுலோகம்.

இதைத்தான் பரம கருணைமூர்த்தியான திருமூலர் 'அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்; அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்' என்று கூறுகின்ருர். ஆகவே, இந்த அன்புடைமை என்ற தலைப்பிலே காணப்படும் பெரிய உண்மை இருக்கிறதே, இதுதான் நம்மைக் காக்கும் என்பதை மறக்கக்கூடாது. எவ்வாறு நாம் இறைவனை வழிபட வேண்டும்? அன்பினுலே என்று சகல ஜீவராசிகளுக்கும் அறிவுறுத்துகிருர். அன்புசெலுத்தினுல்தான் நாம் இறைவனைக் காணலாம்.

*ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை*
*ஈரம் உடையவர் காண்பர் இணையடி.*

என்று கூறுகின்ருர். ஈரம் இல்லாவிட்டால், நாம் இறைவனைக் காணமுடியாது. திருமூலருக்கே இந்தஈரம் இருந்தபடியால்தான், மூலனுடைய சரீரத்தினுள்ளே புகுந்தார். ஆகையினுல், நாம் இவைகளைக் காண வேண்டுமானுல் -அன்பு உருவாய் இருக்கும் பரதத்துவத்தை அறிய வேண்டுமானுல் அன்பு மயமாகப் பார்க்கவேண்டும்.

இந்த அன்புசெய்வாரைத்தான் சிவன் காப்பாற்றுவார். இந்த அன்பை நாம் செய்யாவிட்டால், ஈசனை எவ்வளவு காலம் ஆராதித்தாலும் நாம் அடைய முடியாது.

*கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு*
*மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே.*

அழியாத - அணையாத அன்பை நாம் செலுத்தினுல்தான் நாம் இறைவனுடைய அருளைப் பெறலாகும். அப்படிப்பட்ட அன்பைத்தான் இறைவன் அறிவன் என்பர். இறைவனை அன்பினுல்தான் அறியலாம் என்று திருமூலர் கூறுகிருர். இந்த அன்புத் தத்துவத்தை உணர்ந்து அதைக் கடைப்பிடிப்பதுதான் உண்மையான கல்வியாகும். சாஸ்திரத்தில் வித்தையைப் பராவித்தை, அபராவித்தை என்று இரண்டாகக் கூறுவார்கள். அபராவித்தை என்பது நாம் கற்கும் கல்வி. பராவித்தை, பரம்பொருளை உணர்வது. அபராவித்தையைக் கீழான வித்தை என்று கூறுகின்ருரேயல்லாமல் அதுவும் அவித்தை என்பதும் ஒன்றுதான்.

பரம்பொருளைப்பற்றிய வித்தை மேலானது. மற்றது எல்லாம் அபராவித்தை என்ற பரிபாஷையிலே கூறுகின்றார். ஆகவே பரம்பொருளைப் பற்றிய இந்த உயர்ந்த வித்தையைத்தான் கல்வி என்பார்கள். இதைத்தான் நாமும் அடையவேண்டும். நம்முடையதான சாஸ்திரங்க ளெல்லாம் - சமயங்களெல்லாம் இந்த ஒரு கல்வியை நாம் உயிர் வாழும்போதே கற்கவேண்டும் என்று கூறுகின்றன. ஆகவே நாம் வயது முதிர்ந்த பின்னர் பரலோகத்திலே இது பெறக்கூடியது அல்ல. இளமையிலேயே, சிறுவர்களாக இருக்கின்றபோதே இந்த ஜென்மத்திலே நாம் அடையவேண்டிய ஒரு தனம் இது. ஆகவேதான் திருமூலர்,

> நிற்கின்றபோதே நிலையுடை யான்கழல்
> கற்கின்ற செய்மின்,

என்று கூறுகின்றார். நாம் இந்த உலகிலே வாழும்போதே பராவித்தையை அடைய வேண்டும். இல்லாவிட்டால் இந்த மனுஷ ஜென்மாவுக்கு அர்த்தமே கிடையாது. மக்களெல்லாம் மாக்களாகத்தான் மதிக்கப் படுவார்கள். ஆகையால்தான் உயிர் வாழும் போதே இந்தப் பராவித்தையை அடைய வேண்டும் என்பதைக் கூறுகின்றார் திருமூலர். இதைத்தான் சத்வித்யா அதாவது நற்கல்வி என்பார்கள். அக்கல்வியால்தான் பரசிவத்தைப் பெறமுடியும்.

இந்தமூன்றையும் தெரிந்துகொண்டால் வேறு தெரிந்துகொள்ள வேண்டியதான விஷயமே இல்லை. அன்புதான் பரசிவம். அதுதான் பரதத்துவம். அந்த அன்பை நாம் எங்கும் பரவச்செய்யவேண்டும். அந்த அன்பை நாம் அனுஷ்டிக்கவும்வேண்டும். மக்களாகிய நம்முடைய நெஞ்சில் எப் போதும் ஈரம் இருக்கவேண்டும். எல்லாம் ஒன்றே என்று உணரவேண்டும். இந்த ஒருதத்துவத்தை உணர்ந்துகொள்ளுவதே நற்கல்வி என்பதை நாம் நன்கு தெரிந்து கொண்டால் நமக்கு மோட்ச மார்க்கம் கிடைக்க வேறு ஒன்றும் தேவையில்லை. ஆகவே இன்று இம்மாநாட்டின்முதலாவது நாளாக இருக்கின்ற இன்று இந்த மூன்று உபன்யாசங்களைக் கேட்க இருக்கின்றோம்.

நான் முதலில் கூறினேன், இந்த நாத சித்தாந்தம் என்பது, சித்த சித்தாந்தம் என் பது வடநாட்டிலேகூட இருந்தது என்று சொன்னேன். இந்தச் சித்த சித்தாந்தத்திலே வந்த பெரியோர்களில் கோரக்கநாதர் என் பவர் மத்தியேந்திரநாதருடைய சிஷ்யர் என்று கூறினேன். அவர் இயற்றிய பல நூல்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று சித்த சித்தாந்தபத்ததி என்பது. இதிலே யார் சிவயோகி என்று பார்த்தால் - சிரேஷ் டர்களுக்கெல்லாம் சிரேஷ்டர்யார் என்றால் சில ஸ்லோகங்களிலே சிவயோகிகள்தாம் சிரேஷ்டர்கள் என்ற லட்சணத்தைக் கூறு கின்றது. இந்த லட்சணம் திருமூலருக்கும் பொருந்துவதாகும்.

கோரக்கநாதர் இயற்றிய சித்த சித்தாந்த பத்ததியில், எவன் தீமை வந்தாலும் புகழ் வந்தாலும் உதாசீனனாக இருக்கிறானே, எவன் சாந்தமூர்த்தியாக விளங்குகிறானே, எவன் தன்னுடைய ஆனந்த ஸ்வரூபத்தை விளக்கிக்கொண்டு காணப்படுகின்றானே, எவன் மகா ஆனந்தமயமாய் திரனாய் இருக் கின்றானே அவன் பரிபூரண பிரசன்னனாய் சித்தயோகியாக விளங்குகின்றான்; அவன் ஒன்றை நழுவவிட்டாலும் அவனுக்குத் துக்கமோ சோகமோ கிடையாது; சோகம் எவனுக்கு இல்லையோ அவன் பரிபூரணனாய் யோகத்திலே லயிக்கின்றான்; அவன் காலத் தினாலே கட்டுப்படமாட்டான்; அவன் நித்திய நிரதிசய ஆனந்தத்திலே இருப்பான் என்று எடுத்துக்காட்டுகின்றார். அதுபோல் இன்றும் திருமூலர் அருள்புரிந்துகொண்டே இருக்கின்றார் என்பதை மறவாமல் நாம் இந்த மாநாடு பிரயோஜனப்படும்வகையில் நடக்கவேண்டுமெனப் பிரார்த்தித்து என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

---

'அன்புடைமை'

ஆதீன மகாவித்துவான்,

## திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்,

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய திருவடிகளுக்கு வணக்கம் தெரிவித்துக்கொண்டு இட்ட அருளாணையைத் திருவருள் துணைக்கொண்டு இனிதுமுடிக்கும் கடமைப்பாட்டில் நேரே இறங்கிவிடுகிறேன். இப்பொழுது உலகத்தில் சூரியன் உதிக்கிறான். சூரியனுடைய வெப்பமான கிரணங்கள் ஆங்காங்கே மூலைமுடுக்குகளில் இருக்கும் செடி கொடிகளையும், எல்லா ஜீவராசிகளையும் வளர்த்துக்கொண்டுதான் வருகின்றன. சூரியனுடைய கிரணத்தைக் கொண்டு எல்லா உயிர்களும் ஒளியைப் பெறுகின்றன. அதுபோலவே சிவசூரியன் பரநாதவெளியில் தன்னந்தனியாய் தனக்கு ஒப்புயர்வற்ற நிலையில் பேரொளிப்பிழம்பாய் விளங்கிக்கொண்டுவருகிறான்.

சிவசூரியனுடைய அருள்ஜோதியைப் பற்றி வடநாட்டில் இருக்கின்ற கோரக்க சந்தானமாகிய சித்த சந்தானம் என்ன, தென்னாட்டில் இருந்த திருமூல தேவரைத் தொடர்ந்து எட்டு சித்தசந்தானம் என்ன, எல்லாச் சித்தசந்தானங்களும் ஒரேமுடிவை உடையனவாக அமைந்திருப்பதைக் காண்கிறோம். சிவசூரியனுடைய ஒரு ஒளியைப் பெற்று அங்கங்கே இருக்கும் இட-வாழ்வுகளுக்கு ஏற்றவாறு ஓரளவு ஜீவராசிகள் வேறுபாடு அடைந்தாலுங்கூட, முடிந்த பயனைத் தருகின்ற வகையில் எல்லாம் ஒன்றாகவே அமைந்திருக்கின்றன. அதனாலே இந்தத் தென்னாட்டிலே திருமூலர் எழுந்தருளி வந்து, எண்மர் சித்தசந்தானத்தை நிறுவி, அதன்வாயிலாகச் சித்த சந்தானம் என்பதனுடைய மந்திரமும் தந்திரமுமாய இந்தஜால வித்தைகளோடு அமைந்து விடக்கூடாதே என்று அதனது அடிப்படையாக ஓரளவு மக்களைத் தன்வழிபடுத்துதற்குப் பயன்படுத்திக்கொண்டாலுங்கூட, அதனால் 'அன்பு' என்ற இக்குணம் நமக்கு என்றும் உடைமையாகியது.

இப்பொழுது அன்பு அன்பு என்ற ஒன்று எல்லா மக்களிடத்திலும் எளிமையில் பேசப்படுகின்றது. எல்லா மக்களும் ஒருவரையொருவர் கண்டபோது ஏதோ ஒருவிதமான தொடர்புபற்றி அன்பு செய்கிறார்கள். அந்த அன்பு விளைகின்ற இடம் எது என்று நாம் ஊன்றிப் பார்ப்போமானால், எங்கே நமக்குவிருப்பமானது நிகழ்கிறதோ அங்கேதான் அன்பு விளைகிறது. எந்தப் பொருளால் நாம் விரும்பப்படுகிறோமோ அந்தப்பொருளில் அன்பு கொள்ளுகிறோம். ஆகவே, அன்பு விளையும் இடமாக இருப்பது விருப்பம்.

விருப்பம் என்ற ஒன்று எவ்வாறு உண்டாகிறது என்று ஆழ்ந்து நோக்கினால் நமக்கு இன்பந்தரக்கூடிய பொருளெதுவோ நமக்கு இன்பமான பொருள் எதுவோ அங்கேதான் நமக்கு விருப்பம் நிகழ்கின்றது. தொடர்பே இல்லாத ஒன்றில் விருப்பம் நிகழ்வது இல்லை. ஆகவே, விருப்பமென்ற ஒன்று நமக்கு இன்பம்பயக்கக்கூடியதான ஒன்றினிடத்தில்தான் உண்டாகிறது. அன்பு அதற்கு நிலைக்களனுயிருக்கும் விருப்பம், அவ்விருப்பத்திற்குக் காரணமான இனிமை ஆகிய மூன்றும் ஒருசேர ஒத்திட்டுத்திகழும் போது நமக்கு இன்பம் தரக்கூடிய பொருள் எது என்ற ஆய்வு நமக்கு அவசியமாகிறது. தேவை ஏற்பட்டபின்னர் ஒன்றைப்பற்றி ஊன்றிநோக்குகின்ற திறம் மக்களிடத்திலே

வளருகிறது. அப்படி நோக்குகின்றபோது, இனிமை என்ற ஒன்று எங்கே இருக்கிறது? எது உண்மையான இன்பப் பொருள்? என்ற ஆய்வு பிறக்கத்தான் வேண்டும் ஒவ்வொருவனுக்கும். அப்பொழுதுதான் உலகத்திலேயுள்ள இனிமை எல்லாவற்றையும் தம் மனத்தராசிலேயிட்டு, அனுபவமென்ற உரைகல்லால் நன்கு உரைத்து, இதுதான் உண்மையான இன்பம் என்று ஆய்ந்து முடிவுகட்டத் தொடங்குவான். அப்படித் தொடங்குகிறபோது, அப்பர்சுவாமிகளிடம் போய், 'நீங்கள் ஆண்டில் முதியவர்கள்; அனுபவத்தில் சிறந்தவர்கள்; எல்லாச்சமய நுணுக்கங்களையும் சென்று பார்த்து வந்தவர்கள்; ஆகையால், எது உண்மையான இன்பப் பொருள்? எது உண்மையான அன்பு செலுத்தக்கூடிய பொருள்? என்று எங்களுக்கு அறிவிக்கவேண்டும்' என்று விண்ணப்பித்துக்கொண்டால், அந்தப் பெருமான் நம்மை அழைத்துக்கொண்டு சென்று எது உண்மையான, இனிப்பான பொருள் என்று காட்டத் தொடங்குவார்.

அவர் வயது வந்தவர், அனுபவத்திலே சிறந்தவர், உபதேசியாக இருக்க வல்லமை வாய்ந்த பெரியார் ஆகையால் அவர்கள் விளக்குவார்கள். 'நீ யாரை இனிமையென்று எண்ணுகிறாய்? எதை இன்பம் என்று எண்ணுகிறாய் என எதிர் வினவுவார்.

வினவப்பட்ட அவ்வொருவன் எனக்கு இன்பம் என்பது என்னைப் பெற்ற தாயும் தந்தையுந்தான் என்று சொல்வான். அப்பொழுது அவர், 'அவர்கள் உன்னிடத்தில் விருப்பம் உடையவர்களாக இருப்பதற்குக் காரணம் என்ன என்று எண்ணுகிறாய்? என்று கேட்பார். அப்பொழுது என்ன பதில் சொல்ல முடியும்? தாயும் தந்தையும் ஏதோ தொண்டினை எதிர்பார்த்து - வாய்ப்பினை எதிர்பார்த்து அடியேனிடத்தில் அன்பு கொள்கிறார்கள் என்று சொல்ல நேரிடும். ஆகவே, இப்படி உலகத்திலே காணப்படும் உண்மைப் பொருள்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக எது இனிமையான பொருளென்று ஆராய்ந்துகொண்டே சென்றால், கடைசியாக என்னைவிட எனக்கு மிகவும் இன்பமான பொருள் இல்லை என்ற முடிவு வரும்.

என்னைவிட இன்பமான பொருளில்லை என்ற முடிவுக்கு வந்தபோது சுவாமிகள் விளக்கி அருளுவார்கள். 'தம்பி! நீயே உனக்கு இன்பமான பொருள் என்றால், நீ இருக்கின்ற நிலைவேறுபாடுகள் எவைஎவை என்று தெரியுமா? ஒன்றும் தெரியாமலே ஆணவமலத்தில் நீ ஆழ்ந்து செயலற்று, கேவலநிலையில் இருக்கும்போது, உனக்கு நீ இன்பம் என்று உணரக்கூடிய ஆற்றல் உடையவனாக இருக்கிறாயா? அல்லது, அந்த இன்பத்தை உடையவன்என்ற அறிவாவது உனக்கு உண்டாகமுடியுமா? கேவலநிலையில் ஆழ்ந்து கிடக்கும்பொழுது அல்லது எடுப்பாரும் பிடிப்பாரும் இருந்து, எல்லா உலகியல் இன்பங்களையும் அனுபவித்துக் கொண்டே உண்மை இன்பத்தை அனுபவிக்கமுடியும் என்ற ஆற்றல் உடையவனா?' என்று வினவுவார். அப்பொழுதுதான் நமக்குக் கேவலநிலையிலும்சரி, அல்லது சகலநிலையிலும் சரி, நம்முடைய இன்பத்தை உணர்ந்துகொள்ள வாய்ப்பு இல்லையே என்று எண்ணிப் பார்ப்போம். நமக்கு உண்மையான இன்பம் எது என்று தேட விருப்பம் ஏற்படும். அன்பு உண்டாகும். அந்த அன்பைத்தான், எங்கும் விளங்குகிற பெருமானாகிய அந்தப் பொருளிடத்தில் செலுத்தவேண்டுமென்று அவர் சொல்வார்.

அன்பு என்பதுபற்றி இப்பொழுது எங்கெங்கோ கருவிநூல்களின் கருத்துக்கள் சில நம் மனக்கண்முன் நிற்கத்தான் செய்யும். அன்புடைமைக்கு வரையறை செய்யப் புகுந்த பரிமேலழகர், அன்பாவது என்ன? என்று மிக எளிமையாகச் சொல்லிவிட்டார்கள். அன்பாவது தொடர்புடையாரிடத்து - காதலுடையாரிடத்து உண்டாதல் என உலகியல்நிலையில் வைத்துச்சொன்னார்.

தொடர்பு உடையார் என்றால் அண்ணன் தம்பி, அக்காள், தங்கை, தாய், தகப்பன் ஆவர். நம்மிடத்தில் தொடர்புடையவர் களிடத்தில் மனக்கசிவு இருக்கும் தன்மை தான் அன்பு என்று அவர்கொண்ட இலக்க ணத்திற்கேற்ப வரையறை கூறிப்போந்தார்.

திருமூலர் சொல்லும் அன்பு அந்த அன்பு அல்ல. ஆனால், எங்கோ கிடந்த நம்மை இங்கே ஏற்றிவைத்து, நாயைச் சிவிகைமேல் ஏற்றிவைத்ததுபோல், ஆணவ மலமாகிய சேற்றுள்ளழுந்திக்கிடந்த நம்மைக் கைதூக்கிவிட்டு, தனு கரண புவன போகங் களைக் கொடுத்து, அதனோடு சிறிது அறிவு விளக்கத்தையும் கொடுத்து உலாவவிட்ட பரம்பொருள் செய்த உபகாரத்தை எண் ணும்போது நமக்கு அவருடைய இடையீடு இல்லாத, என்றும் மாறாத ஈடுபாட்டிலே அன்பு பிறக்கின்றது. அந்த அன்பேதான் திருமூலதேவரால் 'அன்புடைமை' என்ற தலைப்பில் அறிவிக்கப்படும் அன்பு. ஆகவே, அன்பு எழுத்தால் ஒன்றாக இருந்தாலும், வரைவு இலக்கணத்தால் ஒன்றாக இருந்தா லும், செலுத்தப்படும் இடத்தின் சிறுமை யும் இழிவும் நோக்கி அந்த அன்பு ஏற்றத் தாழ்வு உடையதாய் இருக்கிறது. இந்த அன்பை இறைவனிடத்தில் செலுத்துகின்ற பொழுது இறைவன் அந்த அன்பினாலேயே வெளிப்படுகிறார்.

அன்பினது இலக்கணத்தை என்ன என்று நாம் எப்படி அறிவது? உலகியல் கவிஞராக, உலகியலிலிருந்து ஞான இய லுக்கு உயர்த்தக்கூடிய பெருமானாக இருக் கும் திருவள்ளுவரிடத்தில் சென்று அன்பை அறிய முடியுமா என்றால், தலைவலி காய்ச் சல் வருமானால் கண்ணீர் விடுகிறாயே, அது தான் அன்பு வெளிப்படும் உபாயம் என் பார். அதாவது, 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்; ஆர்வலர் புன்கண்ணீர் பூசல் தரும்' என்று சுருக்கமாகச் சொல்லி விடுவார். அதுபோல், ஆண்டவனிடத்தில் அன்பு செலுத்தும்போது, அந்த அன்பை நாம் அறிவது எப்படி? அதற்கும் நாயன் மார்களிடம், சமயாசாரியர்களிடம் சென்று அதற்குரிய அளவுகோல் எது என்று கேட்க வேண்டும். அவர்கள் சொல்லுவார்கள்: 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' என்று மூன்று நிலைகளைச் சொல்வார்கள். இறைவ னுடைய பெருமையை எண்ணி, அவன் செய்த பரோபகாரத்தை எண்ணித்தொ டர்பு கொள்ளும்போது நம்மை அறியாமல் மெய் சிலிர்க்கும்; மயிர்க்காலில் வியர்வை அரும்பும்; கண்களிலிருந்து ஆனந்தக் கண் ணீர் தாரையாக வழிய ஆரம்பிக்கும்; இந்த மூன்று நிலைகளும் யாருக்கு உளதாகிறதோ அவர்களுக்கு அதற்குமேல் வாய் திறந்து பேசத் தொடங்கினால், இறைவன் புகழைப் பாடத் தொடங்கினால் நாத்தழுதழுக்கும்; குரல்வளை விம்மும். இப்படி அன்புநிலையை யாரிடத்திலே காண்கிறோமோ அவர்தாம் உண்மையில் இறை அன்பினை உணர்ந்தவர் என்று சொல்லுவார்கள். ஆகவே, உலகியல் அன்பு ஏதோ கொண்டும் கொடுத்தும் நமக்குக் குடிவழியாக உரிமையுடைய பெண்டு பிள்ளைகளிடத்தில் செலுத்தப்படுவ தாக இருக்கின்றது. இதைவிட இறைவ னிடத்தில் செலுத்தப்படும் அன்பு உயர்ந்த அன்பாக இருக்க, உயர்ந்த அன்பை அறியக் கூடியநெறி, காதலாதலும், கசிதலும், கண் ணீர் மல்குதலும், உடல் நம்மையும் அறியா மல் அடியற்ற மரம்போல் கீழே விழுந்து வணங்குதலும், சிவனடியார்களை - சிவகுரு நாதனைக் கண்டவுடனே நாம் யார்? நம் முடைய தகுதி என்ன? நம்முடைய நிலை என்ன? அந்தஸ்து என்ன? என்று எண்ணிப் பார்க்காமல், அடியற்ற மரம்போல் விழுந்து வணங்குதல் ஆகிய இவைதாம் உண்மை யான இறை அன்பு பூண்டவருடைய அன் பினை அறிந்துகொள்ளக்கூடிய வாயில்கள் என்று சமயாசாரியப் பெருந்தகை நமக்கு அறிவிக்கும்.

இந்நிலையிலுள்ள அன்பு எத்தனைவகைப் படும்? அன்பின் தரம் என்ன? என்பதைப்

பற்றியும் நமது பெருமக்கள் சொல்லாமல் இல்லை. அது மட்டுமல்ல. 'அன்பே சிவம்' என்றும், 'அன்பு சிவம் என்று இரண்டு என்பர் அறிவிலார்' என்றும் உடன்பாட்டு வாயிலாகவும், எதிர்மறை வாயிலாகவும் அன்புதான் சிவம் என்று ஏதோ சித்திரம் போலத் திருமூலதேவர் தெரிவித்துவிட்டா லுங்கூட, பின்னே சந்தானுசாரியபரம்பரை யிலே வந்தவர்கள் - நமது சைவசித்தாந்த சாஸ்திரங்களை அருளிச்செய்தவர்கள், அன்பு என்பது உயிர்ப்பொருளின் குணமென்றும், சிவம் என்பது உயிர்ப் பொருள்கள் பல வற்றையும் தான் ஆட்படுத்தி ஆளக்கூடிய இறைமை என்றும் சொல்கிருர்கள். ஆக, இறையாகிய பொருள் அன்பாகிய குணமே ஆகிவிட முடியுமா? குணத்திற்கும் குணிக் கும் உள்ள ஒற்றுமைதான் என்ன? என் றெல்லாம் ஆழ்ந்த ஆய்வுரையை எண்ணிப் பார்த்திருக்கின்ருர்கள். அப்பொழுதுதான் ஞானுசாரியப் பெருந்தகையாராகிய ஒருவர் சொல்லுகிருர் "யாரேனும் அன்பு செயின் அங்கே வெளிப்படும் காண்" என்று. யாராயிருந்தாலும்சரி, சாதியால் சமயத்தால் குணத்தால் உடலால் வேறுபட்டவர்களா யிருந்தாலும்சரி, உலகியல் கண்கொண்டு நோக்குவாரும் நோக்குக; அங்ஙனமின்றித் தீவிரம் அதிதீவிரம் முதலிய நால்வகையான பரிபக்குவம் உடையவர்கள் நோக்கினுலும் சரி இப்படியாக எந்தநிலையில் உள்ளவர்கள் அன்பு செய்தாலும் அங்கே வெளிப்பட்டு அருளுவர் என்பது. அன்பே கருவியாக இருந்து, ஆண்டவனை வெளிப்படுத்தச் செய்கிறது என்று கருவிக்கும் காரியத் துக்குமுள்ள இயைபுபற்றி எண்ணுக என்று ஞானசாஸ்திரம் உணர்த்துகிறது.

இந்த நிலையிலே "அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே" என்றவாறு அன்பை உடையவனுகிய ஆன்மா, அன்பாகிய கருவி யைக்கொண்டு ஆண்டவனை அறிகின்ருன் என்றில்லாமல், அன்பேதான் சிவமாக விளங்குகிறது என்று எண்ணிவிடுமானுல், அந்த ஒரு நிலையிலே நம்முடைய அனுபூதிச் செல்வர்கள் சிவயோகியர்கள் ஒருபோதும் சொல்லிவைக்கவே இல்லை. ஏன்? இந்தத் திருமந்திரத்திற்குத் துணைசெய்வன ஏனைய திருமுறைகளும் அவற்றின்வழியே வந்த சந்தானுசாரியப் பரம்பரையில் வந்த ஞான சாஸ்திரங்களுமே. சாவியைவைத்துவிட்டுப் பூட்டைத் திறக்க முற்பட முடியாது. ஆகவே, அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்; அன்பும் சிவமும் ஒன்றுதான்; அப்படி அறிந்தபின்பு அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே. அப்படியே இருக்கும் அனுபூதிநிலையினை முடிவாகக் காட்டியது திருமந்திரம். இதைத்தான் ஞானநூல்கள் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

வேறொரு மந்திரத்திற்குச் செல்லலாம். சூரபதுமன் யாரும் செய்யமுடியாத ஒரு யாகத்தைச் செய்தான். கள்ளைப்போன்று எல்லோரையும் மயக்கி, தான் மயங்காது இருப்பவள் தாயாகிய மாயை. அவள், தன் மூன்று பிள்ளைகளையும் அழைத்து, அசுரர் குலத்தை ஈடேற்றுவதற்காக ஆட்சித்திறம் வேண்டுமென்று சொல்லி, அதற்குரிய விதி முறைகளையும் உபாயங்களையும் சொல்லிக் கொடுத்தாள். அவள் சொல்லிக்கொடுத்த வுடனே, அவளுடைய ஆணையின்வழி, எங்கோ பெரிய சமுத்திரத்தின் மத்தியிலே ஆயிரம் யோசனை மத்தியிலே யாகசாலை அமைத்தார்கள் மூன்றுபேர்களும். அவரவர் களுடைய நிலைக்கு ஏற்ப, கடுமையாக யாகம்செய்தார்கள். சூரபதுமனுக்கு ஆயிரத் தெட்டு அண்டங்களையும் தான் ஒருவனே இருந்து அரசாளவேண்டுமென்ற பேராசை. அதற்குப் பெருமுயற்சி வேண்டும். முயற்சி என்ன? யாகத்தீயை வளர்த்து, யாகத் தீயின்வாயிலாக இறைவனை வரவழைத்து அவரிடத்திலே எல்லா வரங்களையும் நாம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்பதே.

யாகத் திரவியங்களை மாயை சிருஷ்டித் துக்கொடுத்தாள். அத்தனை பொருள்களையும்

யாகம் செய்தாய்விட்டது. அந்த யாகப் பொருள்களால் இறைவன்வரவில்லை. சரீரத்தைத் துணையாகக்கொண்டு பேரரசாக வர வேண்டுமென்று எண்ணுகின்ருன். ஆகையால், சதைகளை அறுத்து, எலும்பையெல்லாம் வெட்டி யாகம் செய்ய, அதன்பிறகு இறைவன் வெளிவந்து, அவனுக்கு ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசாளும்படியான ஒரு வரத்தைக் கொடுத்தார். இப்படி எலும்பையெல்லாம்வெட்டி, கடுமையான பெரிய கோரயக்ஞத்தைச் சூரபதுமன் நடத்தினன். அவன்நெஞ்சில் தடவிப்பார்த்தால் கொஞ்சங்கூட ஈரம் என்பதே இல்லை; அன்பு என்பதும் இல்லை. அன்பு என்பதை விட்டுவிட்டு, ஆண்டவன் இந்த யாககருமாவிற்காக வந்து கூலி கொடுக்கக் கடமைப்பட்டவன் என்று சூரபதுமன் எண்ணினன். அங்கே உண்மையான அன்பு இல்லை. இந்தக் கந்தபுராண வரலாற்றை மனதில் வைத்துக்கொண்டுதான் சொல்லுகிருர்.

> என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
> பொன்போல் கனலில் பொரிய வறுப்பினும்

என்பது அப்படிப்பட்ட அழகான பகுதியாகும். அபஸ்மார யாகமாகச் சூரபதுமன் போன்றவர்கள் அன்பு இல்லாதபடி யாகம் செய்கிருர்கள். அவி உணவாகச் சதையை அறுத்து அங்கே யக்ஞத்தில் இடுகிருன். நெருப்பு பொன்போல் எரிகிறது. அதில் அறுத்து இட்டான். அதில் தசைநார்கூடப் பொரிந்து போகும்படியாக வறுபடுகிறது. இந்தப்பாடல் அடிகள் இரண்டும் நமக்குச் சூரபதுமன் அன்பில்லாமல் செய்த அந்த யாகத்தை நினைப்பூட்டுகிறது.

> அன்போடு உருகி அகங்குழைவார்க் கன்றி
> என்போல் மணியினை எய்தஒண் ணுதே.

ஆடம்பரமான யாகத்திலே எல்லாம் இருந்தும் அன்பு என்றஒருபொருள் இல்லை. இயற்கையொளியுள்ள, எங்கும் நிறைந்த மணியாகிய இறைமணியை – சிவமணியை நாம் எய்தவேண்டுமாளுல், தன்னையே ஒரு லட்சியமாகக் கொள்ளவேண்டும் என்று திருமூலர் காட்டுகிருர். தன்னை ஒரு லட்சியமாக, தான் அடைந்த நிலைக்குத் தக்கவாறு எடுத்துக்காட்டி, அந்த நிலையில் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கிச்செல்லுவதே சித்த மரபு. அன்போடு மனம் குழையவேண்டும். புறச்சூழலில் போர்த்திருக்கும் போர்வைகளை நாம் களையவேண்டும். பொருமை, கொல்லாமை முதலியவைகளினுலே மனம் கல்லைக்காட்டிலும் மிக இறுகிவிடுகின்றது. அதைக் குழைக்கவேண்டுமாளுல் அன்பு என்ற ஒன்றுதான் குழைக்க இயலும். ஆண்டவன் நமக்கு உடலையும் உலகையும் தந்து, இவற்றில் உலவிவந்து இன்பங்களைத் துய்க்க வாய்ப்பு அளித்திருக்கிருர் என்று எண்ணும்போதுதான் அன்பு உண்டாகும். அதைத்தான் இங்கு 'அன்போடு உருகி அகம் குழைவார்க்கு அன்றி என்போல் மணியினை எய்தவொண்ணுதே' என்கிருர்.

இப்படி இறைவன் அன்பினுலே அகம் குழைந்து அடையத்தக்கவன்; அதுமுற்றிய நிலையில் அன்பேசிவமாகஅமர்ந்திருப்பதைக் காணுகின்ருேம் என்ற இம்முடிபைத்தான் திருமூலர் முடிந்த முடிபாக - திருமந்திரத்தின் மூலமாக நமக்கு அருளுகிருர் என்று தெரிவித்துக்கொண்டு அமைகின்றேன்.

> தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
> வானொரு காலம் வழித்துணை யாய்நிற்கும்
> தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
> தானொரு வண்ணம்என் அன்பில்நின் ருனே.

—திருமூலர்.

'அன்புசெய்வாரை அறிவன் சிவன்'

## சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்,

பழநி.

கருணைக் கடலாகிய மகாசந்நிதானம் அவர்களுடைய கருணை என்றும் நம்மாட்டு இடையறாது பெருகி வருதலால் இன்று நாம் இங்கே கூடி அவர்களது உள்ளத்தில் எழுகின்ற எழுச்சியின் பயனாக, அதற்கு ஒரு சிறந்த கருவியாக இந்தத் திருமந்திரச் சிந்தனைகளை வைத்து, இதன்வாயிலாகச் சிந்தனை செல்வதாக என்று, அந்நெறியிலே பல ஆண்டுகளாக நம்மைச் செலுத்திவருகின்ற மகாசந்நிதானம் அவர்கள் இவ்வாண்டிலும் நம்முடைய சிந்தனைக்கு அரிய பொருளாய், சிந்தனைக்குரிய பொருள் ஆதலினாலே, சிந்திக்க முயலுக என்ற திருவுள்ளத்துக் கருணைப் பெருக்கினாலே இம்மாநாட்டிலே நாமெல்லாம் கூடி இந்த அரிய கருத்துகளைச் சிந்திக்கும் பேறுடையவர்களாக இன்று இருக்கிறோம்.

இப்போக்கிலே ஒருப்பட்டுச் செல்கிற நாம், இங்கே அன்பினுடைய இயல்பினை எடுத்து முன்னே புலப்படுத்தி, அந்த நெறியிலே நின்று, அன்பு நம்மிடத்திலே வளருமாறு முயன்றால் பலன்தருவார் யாரென்று சொல்கிற கேள்வி நம்மாட்டு எழும். ஏதேனும் பயனை நோக்காமல் பிரவர்த்திப்பவன் உலகத்திலே இல்லை என்பது நியதம் ஆதலாலே, அப்படி அன்பு செய்தால் நாமே அவரைச் சென்று அடைவதா? அவரே நம்மை வந்து அடைவரா? நாம் செய்கிற அன்பை நாமே பிரகாசப்படுத்திக்கொள்ளுவதா? அல்லது அவர் அதனை அறிந்து பயன் தருவாரா? என்ற ஒன்றுக்கு, 'அன்பு செய்வாரை அறிவன் சிவன்' என்று இப்படி அன்புடைமைக்கு இலக்கணம் கொடுத்து, அப்படி அன்பு செய்வாராயின் அவரைச் சிவன் அறிவார் என்ற கருத்து சிந்தனைக்கு உரியதாக அமைந்தது ஆதலினாலே அந்தப் போக்கிலே இங்கே அமைந்து கிடக்கும் திருமந்திரங்களிலே சிலவற்றை நினைவுக்குக் கொண்டுவந்து அந்தக் கருத்தினையும் நாம் சிந்திப்போம்.

அன்பினுடைய ஒரு இலக்கணத்தைக் கூறியபோது, நமக்கு எடுத்துக்காட்டுக்கள் மீளவும் ஒருமுறை நம்முடைய நினைவுக்குக் கொண்டுவரத் தக்கவை. அன்பு என்று சொல்கிற ஒன்று, அறிவுடைப் பொருளினிடத்து நிகழும் நிகழ்ச்சி விசேஷம். அறிவுடைப் பொருளுக்கேயன்றி அறிவில்லாத பொருளின்பால் நிகழ்கிற நிகழ்ச்சியன்று. அறிவுடைப் பொருள்கள், அறிவு இல்லாத பொருள்கள் என உலகத்தில் பொருள்கள் இரண்டு வகைப்படும். அறிவுடைப்பொருள் இரண்டு வகைப்படும். ஒன்று - அறிவித்தால் அறிந்துகொள்ளும் தன்மை; இரண்டு- அறிவிக்கவேண்டாது ஆராய்ந்து அறிந்து கொள்ளக்கூடிய உயிர்களுக்கு அறியுமாறு நெறிப்பட நிறுத்தி அறிவிப்பது. பொருள்களை அறியத்தலைப்பட்டபோது பதி, பசு, பாசம் என்று சைவசித்தாந்தப் பரிபாஷையினாலே நாம் புலப்படுத்தினால், அது அந்த எல்லைக்குள்ளே உட்பட்டவர்கட்கு அன்றி பரிபாஷையாயிருக்கும் சொல்லை மற்றவர் எளிதில் விளங்கிக்கொள்ளுதல் இயலாது.

இங்கே அறிவித்தால் அறிந்துகொள்கிற உயிருக்கும் அறிவிக்கும் தன்மையுடைய அந்த இறைவனுக்குந்தான் அன்பு என்று சொல்கிறதாயிருக்கிற ஒன்று தலைப்படுவதற்கு வாய்ப்பு உடைய பொருளாகும். இரண்டு இடத்திலும் அந்த அன்பு தலைப்படுமாயின் அந்த இரண்டும் ஒருசொல்லால்

வழங்கப்படாமல் மிகநுண்ணிய நுட்பமான வேற்றுமையோடு விளங்கிவிடும். தனக்கு உயர்ந்தார்மாட்டுச் செய்வதும், இழிந்தார் மாட்டுச் செய்வதுமான வேறுபாட்டினுல் அது அன்பு எனவும் அருள் எனவும்படும். நாம் நம்மினும் மேலான பொருளிடத்தில் வைப்பது அன்பு எனவும், ஒப்பற்ற பரம்பொருள் தன்னினும் கீழான பொருள்களாகிய நம்மிடம் வைப்பதற்கு அருள் எனவும்படும். அன்பு என்று சொல்லுவது பிழையாகாது. மிகநுண்ணி ஆராயப்படின் நாம் ஒப்புயர்வற்ற ஒரு தலைவனிடத்திலே வைக்கும் ஒரு விசேஷ விருப்பத்திற்கு அன்பு என்றும், ஒப்புயர்வற்ற தலைவன் நம்மாட்டு வைப்பதற்கு அருள் என்றும் சொல்லப்படும்.

அன்பும் அருளுமாகிய இந்த இரண்டும் பயன் நோக்காமலே செய்வதும், பயன் நோக்கிச் செய்வதும் என இரண்டு வகைப்படும். நாம் செலுத்துகிற அன்பெல்லாம் பயன் நோக்கி எழுவது. இறைவனிடத்தில் எழுகிறதாயிருக்கின்ற அந்த அருள் என்ற ஒன்று, இறைவனிடத்திலிருந்து பிரிக்க முடியாததாக இருக்கும் குணவிசேஷம். ஆன்மாக்களாகிய நம்மிடத்தில் அறிவு தலைப்படுதலே அரிதாக இருத்தலினுலே அன்பு தலைப்படுதல் என்பது அத்துணை சுலபம் அல்ல. மற்றும் அறிவு தலைப்படுதலே தடையாக இருக்கும்போது அன்பு தலைப்படுதல் என்பதும் சுலபம் அன்று.

பரமேசுவரனுடைய அறிவோ தடைப்படாத பேரறிவு. ஆதலினுலே அனுதியே அமலனுகிய அறிவன் அவன் ஆதலினுலே, அவருடையஅருள் எப்போதும்தலைப்படும். நம்முடைய அறிவு ஆணவாதி மலங்களால் தடைப்பட்டிருத்தலால், அன்பு தலைப்படுவதற்கு அடிநிலையாகிய அறிவு தலைப்படுதலே இப்பொழுது அரிதாக இருக்கிறது. அறிவு தலைப்பட்டபின் நமக்கு அன்புதலைப்படும். ஆகவே, முதலிலே அறிவு தலைப்படுல்பற்றி இங்கு நாம் நினைவுகூர்தல்வேண்டும். அறிவு தலைப்பட்டபின்புதான் அன்பு எழும்.

நாமெல்லாம் அறிவுடைப் பொருளே. ஆனுல், நம்முடைய இந்த அறிவானது, ஆணவாதி மலங்களினுல் மறைக்கப்பட்டுள்ள அறிவு. சிவபெருமான் அறிவோ அனுதியே அமலனுகிய அறிவு. நாம் மலங்களால் தடைப்பட்டவர்கள். செம்புக்குக் களிம்பு எப்போது வந்தது. பளிங்கு எந்த நாள் தொடங்கி பரிசுத்தமாய் இருக்கிறது என்பதை வரையறுக்கமுடியாது. இவையெல்லாம் தொன்மையானவை. அனுதியே இயற்கை. இந்தப்பெயர் அதற்குக் காலத்தால் வந்த பந்தம் அன்று. பரமேஸ்வரன் சுயம்பிரகாசமாக உள்ளவர்; ஜோதியாக உள்ளவர். ஆதலினுலே அவரிடத்திலே அருள் தலைப்பட எப்போதும் சந்தர்ப்பம் இருக்கிறது. நம்மிடத்தில் அன்பு தலைப்பட சந்தர்ப்பம் இல்லை. ஆனுல், நம்மிடத்தில் அன்பு இல்லையா என்றுசிந்தித்தால் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்று சொல்லுகிறது. நம்மிடத்தில் அன்பு தலைப்படுவதற்கு ஒரு சந்தர்ப்பம் இருந்தால்தான் அன்பு வெளிப்படுமாறு முயற்சிக்கலாம். அன்பு தலைப்படுவதற்குச் சந்தர்ப்பம் இல்லையென்றுல், அது தலைப்படுவதற்கு முயலுவது வியர்த்தமாகும். அறிவு விளங்கித் தோன்றுகிறதா என்றுல் விளங்கித் தோன்றவில்லை. ஆனுல் அறிவுஇல்லையா என்றுல் அறிவுஇருக்கிறது. ஆனுல், விளங்கித் தோன்றுமல் இருக்கிறது. ஆகையால், இனி அன்பு தலைப்படுவதற்கு நாம் மேற்கொள்ளவேண்டிய செயல் என்ன என்றுல், அறிவு தலைப்படுமாறு முயலுதல்.

அறிவு அறியாமையில் கட்டுண்டு கிடக்கிறது. ஆதலினுலே நமக்கு அறிவு விளங்க வேண்டும். அறிவு உண்டாகவேண்டும் என்பதல்ல. அறிவு வெளிப்படவேண்டும் என்பது. எப்போதுமே இல்லாத ஒன்று உண்டாவதில்லை என்பது அறிஞர் உலகம் கண்ட முடிபு. 'உள்ளது சிறத்தல்' என்ற முறையில் நமக்கு உள்ள அறிவு மலத்தினுல்

தடைப்பட்டிருப்பதால் அறிவுவிளங்குமாறு நாம் முயற்சிக்கவேண்டும். ஆனால், அது நம்முடைய பிரயத்தனத்தில் ஆவது இல்லை. நம்முடைய இந்த அறிவு அறியாமையில் கட்டுண்டிருக்கிறது. எவருடைய அறிவு ஆணவாதி மலங்களினாலே கட்டுப்படவில்லையோ அத்தகையவர்தான் ஆணவாதி மலங்களில் கட்டுண்டு இருக்கும் உயிர்களுக்கு மலநிவர்த்தி செய்யக் கடமைப்பட்டவர். அவர் எல்லா உயிர்களுடைய மல சம்பந்தத்திற்குக் காரண காரியங்களை அறிகிறவராக இருக்கவேண்டும். மறைக்கப்படாத அறிவு ஆதலால் நன்றாக அறிகிறவர். சர்வசக்திமான். அவர் மிகப்பெருங்கருணை உடையவர். அவருக்குப் பேசப்படுகின்ற இலக்கணம் மூன்று. பேரறிவு, பேராற்றல், பெருங்கருணை. இந்த மூன்று குணங்களும் அவருக்கு இருக்கும் காரணத்தால் அவர் படைப்பாதி தொழில்களைச் செய்கிறார்.

படைப்பாதி தொழில்களைச் செய்கிறார் என்பதற்குத் தாத்பர்யம் என்ன? மாயை என்ற மூலப்பொருளிலிருந்து மாயாகாரியம் ஆகிய தனு, கரண, புவன போகங்களைத் தோற்றுவித்து ஆன்மாக்களை இசைவித்தார். அதுதான் சிருஷ்டி. அத்தனையும் சூனியத்திலிருந்து தோன்றுவதில்லை. உள்ள பொருள்கள். துணைப்பொருள்களோடு ஆன்மாக்களைக் கூட்டுவித்தல். அடுத்து, போக போக்கியங்களைத் துய்க்கும்வகையிலே செய்தல். பிறகு, அதனினின்றும் பிரித்தல். அதாவது சம்ஹாரம். ஒடுக்குதல். போக போக்கியங்களில் ஆழ்ந்து, அவற்றினுடைய பயன் இன்மை தெரியும்வரையில் போக்கியப் பொருளில் உள்ளதாக இருக்கும் நிலைபேறு இல்லாத தன்மையை நாம் அறியவொட்டாது அங்கு அதிலே பரமசுகம் இருக்கிறது என்று எண்ணி ஆழ்ந்துவிடுதல். அப்படி அழுந்தியபோது நமக்கு வரும் அனுபவத்தினால் நமக்கு உவர்ப்பு வாராமல் செய்து, அதிலிருந்து மீட்பித்தல். இந்தச் செயல்களையெல்லாம் இறைவன் செய்கிறான். அப்படி இறைவன் செய்யாதுபோனால், இந்த உயிர்களுக்குத் தனு, கரண, புவன போகத்தின் தொடர்புகள் உண்டாகமாட்டாது.

இதற்கப்பால் வேறொரு அபாரமான சக்தி இருக்கிறது. அதுதான் கருணை என்று சொல்லப்படுவது. இப்படி எண்ணில்கோடி காலமாக, இன்னது என்று காலவரையறுக்கப்படாதது அந்தக்கருணை. நாம் வினைகளை அனுபவிக்கும்பொழுது நம்முடைய அறியாமை நீங்காது. 'மேலைக்கு வித்துமாகி' என்றார். முன்வினை அனுபவிக்க மேல்வினை தொடர்ந்து இருக்கும். அப்படியானால், அதற்கு ஏதேனும் உபாயம் உண்டா? கருமம் ஒழியவேண்டுமாயின் அது எதிலேயிருந்து விளைகிறது என்பதைத் தெரிந்து கொண்டால் அந்த விளைவைத் தடுக்கலாம். நான் செய்தேன் பிறர் செய்தார் என்னும் போது யான்என்ற முனைப்பு நீங்கவேண்டும். முனைப்புத் தவிர்ப்பதுதான் உய்வதற்கு வழியாகும். முனைப்பு எப்படி நீங்கும்? உலகத்திலே நம்முடைய பிரயத்தனம் இல்லாமல் இறைவன் உலகத்திலே ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கிறார். அவருடைய கலப்புத் தன்மையை இந்த உலகத்தில் வைக்காமற் போனால் இந்த உலகம் நிலைபெறமாட்டாது. அவர் உடனாக இருந்தாலல்லாமல் இந்த உயிர்கள் ஒன்றினையும் அனுபவிக்கமாட்டா. அவர் வேறாக இருந்தாலல்லாமல் அனுபவம் நமக்குச் சித்திக்காது. நிலைத்தல், அறிதல், அனுபவித்தல் என்ற இந்த மூன்றுவித செயல்களுக்கு இறைவன் இந்த உலகோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கிறார். திருஞானசம்பந்தர்,

> ஈறாய்முதல் ஒன்றாய்இரு
> பெண்ஆண் குணம் மூன்றாய்...
> வேறாய்உடன் ஆனான் இடம்
> வீழிம்மிழ லையே

என்று கூறி, ஒன்றுதல் வேறுதல் உடனாதல் இந்த மூன்றும் நிலைத்தல், அறிதல், அனுபவித்தல் என்று சொல்கிற மூன்றுக்காகஅவர் உடன் நிற்கிறார் என்றுசொல்கிறார். இப்படி

இருக்கிறதிலேயிருந்து இந்த உலகத்தைப் படைக்கிற ஆதிகாலத்திலே மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளை அமைத்திருக்கின்றார் என்று தணிகைப்புராணத்தில் கச்சியப்ப சிவாசாரியார் எடுத்துக்காட்டியிருக்கிறார். அப்படி எந்த இடத்தில் மிகுதியாக இந்தக் கலப்பும், அதை முயன்று காணச் சந்தர்ப்ப மும் நிறைந்திருக்கிறதோ அத்தேசத்திற்குப் புண்ணிய தேசம் என்று பெயர். இதை உணர்ந்த சேக்கிழார்சுவாமிகள்,

மாதவம் செய்த தென்திசை

என்றருளினார்கள். இதுபோன்று சிவஞான சித்தியாரிலும், இப்படிப்பட்ட கலப்பை முயன்று காண்பதற்கு வாய்ப்பான தேசம் புண்ணியதேசம் என்று கூறினார். முயன்று காணச் சந்தர்ப்பம் உடைய தேசமும், காணச் சந்தர்ப்பமில்லாத தேசமும் உண்டு. எல்லாத் தேசங்களிலும் கலப்பு இல்லாமல் இராது. எல்லாத் தேசங்களிலும் பொருள் களிலே சில நுட்பப்பொருள்கள் உள்ளன. அதைப் பெற முயன்று சில இடங்களிலே வியர்த்தமாகப் போய்விடும். உமிகுத்திக் கை வருந்துவார் போல. எங்கே எப்பொருளைச் சுலபமாகப் பெறலாமோ அந்த இடத்திலே அதைத் காண முயலுவோம். எங்கேயிருந்து அதைத் கண்டு எடுக்க முடியும்? கலப்பு எல்லா இடங்களிலும் எல்லாப்பொருள்களி லும் உண்டு என்பது உலகநூல் வல்லுநர் கண்ட ஒரு உண்மை. எங்கேயும் அந்தப் பரமேசுவரனுடைய விளக்கம் உண்டு. ஆனால், முயன்று காண்பதற்குச் சந்தர்ப்பம் உடைய தேசம் இந்தத் தேசம். ஆகையால் இதற்குப் புண்ணியபூமி என்று பெயர்.

இந்த இடத்திலே எப்படி விளங்குகிறார் என்று சொல்லுகிற ஒன்றை முயன்று காணுமாறு, மிக முயன்று காணுமாறு, மிக மிக அரிதில் முயன்று காணுமாறு என்று சொல்கிற இந்த மூன்று உவமை களில் வைத்து எடுத்துக்காட்டி அதை நமக்குப் புலப்படுத்துகின்றார்கள். பாலில் நெய்போல, விறகினிடத்து நெருப்பைக் காண்பதுபோல, அப்படி இந்த நாட்டிலே பரமேசுவரன் முயன்றவர்களுக்குப் புலப் படக்கூடிய வாய்ப்பிலே அவர் அமைந் திருக்கிறார். உயிரும் அறிவுடையது. சிவன் அறிவுடையவர்; ஆற்றல் உடையவர்; கருணையுடையவர். ஆதலாலே அவருடைய ஆணைக்குட்பட்டு இந்த உலகம் முயன்று காண்பதற்கு உரிய வாய்ப்பாக அமைந்தது.

எந்தப்பேறு முயன்றுகாண இயலாதோ அது பேறு அல்ல. எது சுலபமாக அடையக் கூடியதாக இருக்குமோ அதை அடைவதில் பயன் இல்லை. இந்த இரண்டு உண்மைகளை மனதில் நாம் வாங்கிக் கொள்ளவேண்டும். முயற்சியின்றி காணக்கூடும் என்றால், அது பயனற்றது. முயன்றாலும் காணமுடியாது என்றால் அந்தப் பொருள் இல்லாததே. அது இருக்குமானால் முயற்சித்துக் காணச் சந்தர்ப்பம் இருக்கவேண்டும். அது இல்லா விட்டால், அந்தப்பொருளுடைய இருத்தல் அவசியம் இல்லாதது. ஆகையால்தான்,

முயன்றவர் அருள்பெறும் முதுகுன்றம்

என்று பேசப்பட்டிருக்கிறது.

முயன்றவர்கள் அந்த அருளைப் பெறு மாறு அந்தப்பொருள் அமைந்திருக்கிறது ஆகையால் முயன்று காணவேண்டுமாயின், அறிகிறபொருளைவிட அறியத்தலைப்படுகிற பொருள் வலியுடைய பொருளாக இருக்க வேண்டும். வலிமையுடைய ஒரு பொருள், வலிமையில் இழிந்த பொருளாக, அறிவு இருக்கும் உரிமைநோக்கி பேராற்றலுடைய பொருள் சிறிய பொருளின்மேல் இருக்கும் கருணையால் தன்னை அறிவிக்கிறது. அப்படி அறிவிக்கிற செயல்கள் பஞ்சகிருத்தியம். அதுமட்டுமல்ல; அவர் உலகத்தில் வைத் திருக்கும் கலப்பும், முயன்று காணுதற்கு அவருடைய அருள்விளக்கமும் இருத்தலே. முயன்று காண உரிமையுடையது இந்த உயிர். ஆகையால், இந்த உயிர் இப்படி முயன்று காணவேண்டும். இப்படிப்பட்ட

கடமைப்பாடு வாய்ந்திருக்கும் இந்த உயிர் இந்த நாள்வரையில் என்னதான் செய்தது? என்றதொரு கேள்வி எழலாம். எந்தநாள் இறைவற்கு ஞானம் என்பது அமைந்தது? அவர் ஆற்றல் உடையவராக எப்பொழுது ஆனுர்? அவருக்குக் கருணை விளைந்தநாள் ஏது? என்ருல் நாம் சொல்லமுடியாது. எப்பொழுதுமுதல் அவர் நம்மை ஆளத் தொடங்கினுர் என்றும் சொல்லமுடியாது. "உருத் தெரியாக் காலத்தே உள்புகுந்து" என்றதுபோல அவர் பலகாலமாக, ஆரம்ப மில்லாத காலந்தொட்டு, எத்தனையோமுறை திருத்தித் திருத்தி இப்படிப்பட்ட அரிய செயலை, பயன் நோக்காமலே செய்து வருகிருர். இப்படி அவர் செய்துவந்தும், நீ என்னசெய்தாய்? என்ருல் இதுவரை நான் செய்த செயலைச் சொல்லுவேன் என்கிருர் திருமூலதேவர்.

இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்.

நான் எவ்வளவுதூரம் அந்த அரிய செயலை இகழ்ந்துவிட்டேன் என்பதும், நான் அதிலே என்ன பிரயோஜனத்தை அடைந்தேன் என்பதும் கூறத்தெரியாது. சொல்லத் தெரிந்திருந்தால், நான் தவறு செய்யமாட்டேன். என்னைப்பற்றி எனக்குத் தெரியாது என்று சொல்கிற தோஷம்வரும். நான் இதுவரை இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும். இதுவரையில் எனக்குத் தெரியாது. சென்ற காலத்தின் செய்கையில் ஒருசிறிது அறிவேனேயல்லாது, முன் பிறப்புக்களில் எண்ணில்கோடி காலமாக, எனக்குத்தெரியாமல் இகழ்ந்ததை நான் அறியேன் என்று சொல்லுகிருர்.

இப்படிப்பட்ட பரமேஸ்வரன் ஒருவன் இருக்கவும், அவன் அங்கீகரித்துக்கொண்டு வரவும், ஒருசிறிதும் அதிலிருந்து நாம் பயன் பெருமல் இகழ்ந்ததும், ஏதேனும் நிலைபெறு இல்லாத பொருளைப் பெற்றதும் என்னுல் வரையறை செய்யப்படுபவை அல்ல. 'ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே' என்று சொல்லுகின்ற குறிப்பை நினைவு கூர்ந்தால், 'அவ்வளவு பெரிய கருணையைப் பொருட்படுத்தாது நான் அப்படி வியர்த்தமாக ஆக்கினேனே' என்று சொல்லுவது விளங்கும். 'வீணே எனக்குத் தரவேண்டி' என்று உமாபதி சிவச்சாரியார் சொல்லியருளுகின்ருர். ஒருயோக்கியதையும் இல்லாத எனக்குத் தரவேண்டி என்று சொல்லுகிருர். இப்படி இருப்பதினுலேயே எப்படிப்பட்டவருக்கு அவன் அருள்புரிகிருன் என்று திருமூலர் கூறத்தொடங்கி,

உகந்தருள் செயதிடும் உத்தமநாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல்லார்க்கு

என்று எடுத்துச் சொல்கிருர். காலத்தை ஏன் வீணுக்க வேண்டும்; விரைந்து செல்லும் என்று சொல்வார்போல, கொழுந்து அன்பு செய்து அருள்கூர வல்லார்க்கு – கொழுந்துபோல் வளர்க்கும் அன்புசெய்து, அவர் அருள்கூருமாறு முயல வல்லார்க்கு; உகந்தருள் செய்திடும்-அந்தச் சிவன், உத்தம நாதன், அந்த உத்தமநாதன் உகந்து அருள் செய்திடும். யாருக்கு? கொழுந்தன்பு செய்து அருள்கூர வல்லார்க்கு என்று சொல்கிருர். இவன் செய்கிற அன்பினுலே அருள்கூர்தலை உடையது. கூர்தல்-இங்கே வெளிப்படுதல்; சிறத்தல். அது சிறப்பதற்கும், நிலைபேருக உள்ளுக்கு இருந்தும், அது நமக்கு வெளிப்படுவதற்கு என்ன வழி? 'கொழுந்தன்பு செய்க' என்று சொல்கிருர். நம்முடைய அன்பு திளைக்குமாயின், அவருடைய அருளும் மேன்மேலும் திளைக்கும் என்று காட்டுகிருர். 'கொழுந்தன்பு' என்று சொல்கிறது தான் மிகமிக ஜீவநாடியான சொல். 'அன்பு செய்க' என்று கூறி, அன்பு 'இன்னேசெய்க' என்று கூறி, அதன் பிறகு, 'கொழுந்தன்பு செய்க' என்று கூறுகிருர். அதை அப்படிச் சொல்வது சொல்பல்காமைப்பொருட்டு.

இப்பொழுது என்னசிந்திக்கவேண்டும் என்ருல், உயிர் அறிவுடையது ஆதலாலே உயிரினுடைய குணம் என்னஎன்று ஆராய

வேண்டும். அன்பு பெருகுதலேயன்றி அறிவு உள்ளுதல் அன்று. உள்ள அறிவு தடை நீங்கி விளங்குதல். அறிவு உண்டு என்று சொன்னால் அன்பும் உண்டு. அந்தத் திசையிலே புகுந்த திருவள்ளுவர் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்றார். உயிருக்கு நிலைக்களன் இருக்குமாயின், அது அன்பின் வழி அமைந்ததாக இருக்கும் என்று காட்டு கிறார். முன்னமே அமைந்தது உயிர். அது அறிவுடையது ஆதலாலே, அன்புடையது. ஆகையினால், அன்பு விளங்குமாறு செய்ய வேண்டுமென்று சொல்லுகின்றார். அன்பின் நிலைக்கு ஒப்பரிய ஒரு பெரிய எடுத்துக் காட்டாக உள்ளவர் நம்முடைய சைவ சம்பிரதாயத்திலே ஞானிகளெல்லாம் போற் றத் தகுந்த பரம ஞானியாகிய கண்ணப்பர். இங்கே சொல்கிற அன்பு உண்டாவதா? வெளியாவதா? என்ற கேள்விக்கு அந்த லோகத்திலே சஞ்சாரம்செய்த சேக்கிழார் சுவாமிகள்,

ஏகநாயகரைக் கண்டார் எழுந்த பேருவகை

என்கிறார். 'எழுந்த' என்று சொல்கிறார். எழுந்தது என்றால் முன்பே இருந்திருக்க வேண்டும். உயிர் இருந்தது. அதற்கு உடம்பு படைக்கப்பட்டது. உயிர் உள்ள போதே அறிவு உள்ளது. அறிவு உள்ள போது அன்பு உள்ளது. உயிர் விளங்காமை யால் அறிவு விளங்கவில்லை. அறிவு விளங் காமையால் அன்புஇருந்தும் அதுபிரகாசிக்க வில்லை. ஆகையால், அன்பு எப்படி உண் டாகும்? இங்கே சொல்லப்படுகிற அன்பு அறிவு விளங்காமல் உண்டாகிற அன்பு. அதுதான் பற்று என்று சொல்கிற அன்பு. தன்னைப்பற்றித் தெரியாமல் பிறரைப்பற்றி உண்டாவது. நம்மைப்பற்றி நமக்குத் தெரியாமல் நாம் பிறரிடத்திலே அன்பு செலுத்துவோம். அப்படியிருக்கக்கூடிய அன்புக்குப் பற்று என்று பெயர்.

நம்மை நாம் தெரிந்துகொள்ளவேண்டு மானால் அவன் அறிவித்தாலன்றி நம்மை அறியமாட்டோம். அறிவித்தாலன்றி அறி யாத உள்ளங்கள் நம்முடையவை. நமது பெருமானார் நம்முடைய அறிவு விளங்கும் வண்ணம் அனுக்கிரகித்தால் நம்முடைய அறிவு விளங்குகிறது. விளங்கிய அறிவி லிருந்து அன்பு எழுகின்றது. இருக்கும் அன்பு கொழுந்துபோல் மேன்மேல் கிளைப்ப தாக இருக்கவேண்டும் என்கிறார். காரணம் என்ன? இன்ப வடிவாகிய பெருமானிட மிருந்து எழுகிற அருள் எல்லைக்கு உட் பட்டது அன்று, அவர்களிடத்திலிருந்து எழுகிற ஒரு பெரிய கருணை. அவரிடத்தி லிருந்து உண்டாகும் ஆனந்தமயமான இன்பம் அந்தமிலா ஆனந்தம். உபநிடதத் தில் கூறியபடி, ஒன்றுக்கு நூறுபங்கு அதிக மாக இன்பம் இருக்கிறது. அந்தமிலா ஆனந்தம் ஆதலினாலே, அந்தமிலா ஆனந் தத்தை அனுபவிக்க நமக்கு மேலும்மேலும் அன்பு இருக்கவேண்டும். எல்லைக்குட் பட்ட ஆனந்தத்தை அனுபவிக்க அன்பு எழுதல் போதும். எல்லைக்கு உட்படாத ஆனந்தத்தை அனுபவிக்க மேலும்மேலும் அன்பு விளைந்துகொண்டே இருந்தால்தான், அந்தப் பொருளை அது சாரக்கூடும். ஆகை யால், 'கொழுந்தன்பு செய்யின்' என்று சொல்கிறார். கொழுந்தன்பு செய்து அருள் கூர வல்லார்க்கு உகந்து அருள்செய்திடும் உத்தமநாதன் என்ற பெயரை முதலிலே தெரிவித்தார்கள். அன்பு சாதனம் என்று சொல்லிவிட்டார். அந்த அன்பு எல்லைக்கு உட்படாதது; மேலும் மேலும் எழுகிற அன்பு என்று சொல்லுகின்றார். எழுந்தபே ருவகையாகிய அன்புசெய்தால் உத்தம நாதன் உகந்தருள் செய்திடும்.

முதலிலே நூலைச்செய்யும்போது, இலக் கணங்களைத் தொகுத்துரைப்பது நூல்செய் வானுடைய காருண்ய விசேஷம். அன்பு இதுவரையில் நம்பால் நிகழாமையை நினைத் துப் பார்த்தாலே நம்மாட்டுவைத்த கருணை யும் அவருடைய அருமையும் புலனாகும்.

'கல்வி'

## வித்துவான் திரு. தி. சா. தியாகராஜ தேசிகர் அவர்கள்,

கடலூர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய திருவடிக் கமலங்களை முதலில் வணங்கி, அடுத்து, தலைவர் அவர்களுக்கும் ஏனையோர்களுக்கும் எனது வணக்கத்தைச் செலுத்திக்கொள்ளுகிறேன்.

மனத்தைத் தீயவழியிலே புகவிடாது நல்வழியில் செலுத்தி மாட்சிபெறுவிப்பது கல்வி. மனிதரிடத்துள்ள மிருகத்தன்மையை மாற்றி அவர்களுக்கு மனிதத்தன்மையைக் கொடுக்கவல்லது. உடலோடு அழியும் குலச் சிறப்பினும் மிகச் சிறப்புடையது. மற்று எப்பொருளினும் அழியாப்பொருள் கல்விப் பொருளே. "கேடில் விழுச்செல்வம் கல்வி" என்றார் வள்ளுவர். "ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு, எழுமையும் ஏமாப் புடைத்து" என்றவாறு ஒரு பிறப்பின்கண் பயின்ற கல்வியானது அப்பிறவி ஒழியினும் தான் ஒழியாது உயிருடன் எழுமையும் தொடர்ந்து சென்று உதவும் தன்மையது.

பஞ்சேந்திரியங்களால் அறியப்படுகிற பொருள்கள்பற்றிய சவிகற்பவுணர்ச்சிக்கும் கல்வி வேண்டப்படுவதாயின், எங்கும் நிறைந்தும் யாவர்க்கும் தோன்றாது எள்ளினுள் எண்ணெய்போன்று நிற்கும் இறைவனைப்பற்றி அறியவேண்டின், கலைஞானம் இன்றியமையாதென்பது கூறுமலே அமையும். மாயா வலையில் சிக்கி உழன்று எண்ணிலாப் பிறவிகளை எடுத்தெடுத்து உழலும் ஆன்மா, இறைவனை அறிந்து பிறவிப்பெருங் கடல் நீந்தி அழியாப்பேறு பெற்றுய்தற்கு முக்கிய துணையாயுதவுவது கல்வியேயாம். 'உவமையிலாக் கலைஞானம்' எனச் சிறப்புற ஓதும் ஸ்ரீ சேக்கிழார் திருவாக்கும் ஈண்டுச் சிந்திக்கற்பாலதாம்.

ஞானம் என்பது, உண்மை இன்பத்திற்கு ஏதுவாகும். தண்ணீரே தாகத்தைத் தணிக்கும்; பிற பானங்கள் அங்ஙனம் தணிக்கமாட்டா. அப்படித்தான் முத்திக்கு ஞானம் தேவைப்படுகிறது. ஞானம் என்ற மாத்திரத்தில் சாதார்ண அறிவுடைமையை நாம் நினைத்துவிடக்கூடாது. இத்தகைய அறிவுடைமை உண்மை ஞானம் ஆகாது. ஆகவே, ஞானம் எனப்படுவது, "எதை அறிவதால் ஒருவனுடைய அறிவு பூர்த்தியாகிவிடுகிறதோ அதை அறிவதுதான்" என்று நாம் உணரத்தக்கது.

சிவானந்தப்பேறே நமது முடிந்த குறிக்கோளாயினும் அதனை அடையச்செய்கின்ற இன்றியமையாத லக்ஷியம் ஞானப்பேறு தான் என்று நாம் துணியலாம். இதனால், நாம் இந்தப் பிறப்பின்பயனாக ஞானத்தை அடைதற்கு முயற்சிக்க வேண்டுமென்பது தெரியலாம். ஞானம் இவ்வளவு முக்கியமானது என்பதை "ஞானம் ஞானவதாம் அஹம்" என்னும் கீதை வாசகத்தாலும் உணரலாம். ஞானமே, வாழ்வின் குறிக்கோளை விளங்கவைக்கின்றது. பிறவிவேரற வீழ்த்தவல்லது ஞானமேயாம்.

மாந்தர்கள், அறிவு விரிவதற்காகவும், அனுஷ்டான அறிவினை விரைவில் அடைவதற்காகவும் நூல்களை ஓதுவர். நூல்கள் யாவும் உலகநூல், கடவுள்நூல் என்ற இந்த இரண்டு பிரிவினுள்ளே அடங்கும். பொதுப்படக்கூறின், உலகநூல்கள் யாவும் மனிதனுடைய உள்ளத்தை வெளிப்பொருளிலே செலுத்தி, மேன்மேலும் ஆசையைப் பெருக்கும் உணர்ச்சி அறிவை வளர்க்கும். அடுத்து கடவுள் நூல்கள் எனப்படுமவை,

மனிதனுடைய உள்ளத்தை அகமுகமாகத் திருப்பி எல்லாப்பொருட்கும், எல்லாச் செயற்கும் மூலகம் எதுவென அறிவித்து அந்தப் பொருளோடு ஒன்றும் பிரேமை கொண்ட ஞானத்தை விளக்கும். இதனுல் தான் உலகநூல்களை எல்லாம் ஓதுவதிலேயே காலங்கடத்திவிடாமல், ஞானநூல்களையே ஓதுமாறு நீதிநூல்களும் அறிவுறுத்துகின்றன.

"ஞானமாவது வீடுபயக்கும் உணர்வு" ஆதலால், மெய்ப்பொருள் காண்பது இன்றியமையாததாயிற்று. இந்த மெய்ப்பொருள் காணுகின்ற முறைமையினையே சாத்திரம் (வேதாகமங்கள்) சாற்றுவதாகும். சமயநூல்கள் இங்ஙனம் பெறப்படும் ஞானத்தினை அபரஞானம் எனவும், பரஞானம் எனவும் பாகுபடுத்தி உரைக்கும். இரண்டையுமே பொதுப்படச் சிவஞானம் என்றும் செப்புவதுண்டு. இந்த இரண்டு ஞானங்களும் சிவத்தையே உணர்த்துவதுபற்றி இங்ஙனம் அழைப்பர். அபரஞானம் என்பது வேத - ஆகம - சாத்திரங்களால் உண்டாவதாகும். இந்த அறிவு - ஞானம் பரஞானம் எனப்படும் அனுபூதி ஞானத்தைப் பயக்க உதவுவதாம். அனுபூதிஞானம் எனப்படும் பரஞானம் குரு திருவருளால் விளைவதாகும். ஆகவே, ஞானமானது உலகநூல்களால் அமைவதன்று எனவும், வேத உபநிடத ஆகமங்களால் உணரப்பட வேண்டுவது எனவும், அங்ஙனம் உணரப்புகுமிடத்தும் சற்குருவின் திருவருளாலே உணரப்பட வேண்டுமென்பதும், இன்றேல் யாவும் நீர் மேல் எழுத்துக்கு நிகராகுமெனவும் நாம் தெரிதல் நன்று.

இந்தக் கருத்தினை நமக்கு உணர்த்தும் பொருட்டே திருமந்திரத்தில் மெய்ஞ்ஞானக் கல்விபற்றிக் கூறும் கல்வி என்ற அதிகாரம் அமையலாயிற்று. இத்தகைய மெய்யுணர்வுக் கல்வி - கலைஞானம், இறைவனிடத்தே இடைவிடா அன்பு பூண்டார்க்கு அவனருளால் எய்தப்பெறும் என்பதற்கு இக்கல்வியதிகாரம் அன்புபற்றிய அதிகாரங்களின்பின் அமையலாயிற்று என்ற ஒரு குறிப்பும் உணரத்தக்கது. இனி, திருமந்திர நூலில் கல்வி என்னும் தலைப்பில் காணப்படும் செய்திகளைக் காண்போம்.

குறிப்பறிந் தேனுடல்; உயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்;
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே.

சிவபெருமான் யான் செய்த வினைக்கீடாக எனக்கு உடலைத் தந்ததன்குறிப்பை அதாவது எடுத்த இந்த உடல் இருக்கும் போதே, ஆணவத்தின் நீங்கி அருட்டுணை கொண்டு நீ சிவானந்தப்பேறு எய்துக என்னும் குறிப்பை அறிந்தேன். இறைவன் உயிர்க்கு உயிராக இருக்கும் தன்மையை உணர்ந்தேன். அவனே என்னுயிர்க்கு உயிர் என்று அறிந்ததும் தேவர்களுக்கெல்லாம் தலைவனுகிய மகாதேவன் தடையின்றித் தானே வந்து உள்ளத்தில் எழுந்தருளினன். பிறகே நான் உயர்ந்த அருள்ஞானக் கல்வி கற்றேன் என்று இம்முதல் திருப்பாடலில் கூறுகிருர்.

மற்றொருபாடலில், உடலில் உயிர் நிற்கின்றபோதே அநாதிநித்தியனுகிய சிவபெருமான் திருவடியைப்பற்றி அறிவிக்கும் மெய்ஞ்ஞானக் கல்வியைப் பயிலுங்கள்! பாவங்கள் ஒழியும்; என்றும் சொற்குற்றம் இல்லாமல் இறைவனைத் தொழுங்கள்; தொழுதபின், இறைவனே எல்லாமாய், தானன்றி வேறில்லாத் தன்மையனுய், நமது அறிவைத் துலக்கும் மணிவிளக்காய் நம் உள்ளத்தில் விளங்குவானென்று கூறுகிருர்.

அடுத்து, மெய்யுணர்வுக்கல்வி கற்றவர் கல்வியின்பயனுகிய இறைவன் மலரடியைக் கருதுவர்; அக்காலத்தில் அத்திருவடியைக் காண அவர் கருத்தில் ஒரு கண் உண்டாம். அதுவே அகக்கண் என்றும் ஞானவிழி என்றும் மெய்யறிவாளர் ஆய்ந்து புகழ்ந்து

உரைக்கப்படுவது. ஆகவே சிவஞானக் கல்வி பயின்றதன் பயனாக ஞானக்கண் காட்ட நமது உள்ளத்தடத்திலே கயல் போலத்துள்ளும் திருவடிக்காட்சி எய்தும். ஆகவே, ஆனந்தக்காட்சிக்கு இந்த அகக் கண்ணே வேண்டும் என்பதை, "அகத்துக் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்" என்று மற்றோரிடத்தில் குறிப்பிடுகின்றார். புறக்கண்ணால் திருவடிக்காட்சி எய்தாது என்றும் சிவஞானக்கல்வியின் சிறப்பைப் புலப்படுத்துகிறார் திருமூலர்.

கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி உரைசெய்யும்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே.

இத்தகைய அருட்கல்வி உடையவர் இருவினைத் தொடர்பினின்றும் கழிந்து விரைந்து செல்கதி சேர்ந்திடுவர். உடம்பின்கண் பற்றுடையார் பதிஞானவிருப்பில ராய், யோகநெறி நின்று குண்டலிசத்தியை வருத்தி எழுப்பி அமுதமருந்தி வாழ்ந்து இருப்பர். இத்தகைய துன்பம் வேண்டாம் உங்களுக்கு. இரவும் பகலும் இறைவனைத் துதியுங்கள். குளிகையால் செம்பு பொன்னானாற்போலத் திருவருட்சத்தியால் உங்கள் உடல் அழியா உடல் ஆம். ஆகவே, யோக நிலையிலிருந்து வருந்தவேண்டாம் என்று அறிவிக்கின்றார்.

சண்டேசுர பதவிபெற்ற விசாரசருமர் திருவருட்பொலிவால் தெய்வ உடல்பெற்றமை உணரத்தக்கது.

கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்;
பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்;
எல்லியும் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே.

பல்லி- பல்குதலையுடையதாகிய உடல்; தொடர்பாக ஒன்றன்பின் ஒன்றாகப் பல்கு வதற்கு இடனாக இருப்பதால், உடலுக்குப் பல்லி என்று பெயர். பாம்பு - குண்டலி. வல்லி - திருவருள். வாதித்த - இரசவாதம் செய்த. அரிந்து - வருத்தி.

இதனால் ஞானநூற் கல்வியொழுக்கம் உடையார் சிவானந்தப் பேறு பெறுவர் என்று உணரலாம்.

சிவானந்தப்பேற்றிற்குச் சிவஞானக் கல்வியே துணை என மற்றொரு செய்யுளில் அறிவிக்கின்றார். மேலும் அச்செய்யுளில் ஆன்மாக்களின் பரிபாகநிலைகளுக்கு ஏற்பத் தூய - பேரொளிப்பிழம்பான இறைவன் ஞானாசாரியனாகத் தோன்றித் துணைநிற்பான் என்றும், ஆசாரியனிடமிருந்துவரும் மாயா தீதமான சொல்லாகிய திருவைந்தெழுத்து நல்ல துணையாம் என்றும், அதுதான் ஆன் மாக்களை வாசனாமலம் தாக்காதவாறு துணையாய் பாதுகாத்துவரும் என்றும், அதனால் தூய சிவமணம் கமழும் என்றும் கூறி, இத்தனையும் நிகழ்தற்கு வாயிலாக – துணையாக நிற்பது சிவஞானக் கல்வியாகிய தூயகல்வியேயாகும் என்கிறார். 'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்' என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

அடுத்து ஞானநூற் பயிற்சியை மேற் கொண்டு மெய்ஞ்ஞானம் துலங்கப் பெறு தாரைக்குறித்துத் திருவுள்ளம் இரங்குதலை அறியலாம். அப்பாடல்;-

நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினால் பண்பின் பயன்கெடும்;
கோலொன்று பற்றினால் கூடா பறவைகள்;
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே.

மிகவும் உயரத்தில் ஏறவேண்டுமானால் கயிற்றைக்கட்டித் தொத்தி மேலேசெல்லு கின்றனர். அதுபோல ஞானநூலை – அருள் நூலைக் கற்று நின்று நுட்பமான (நுனி) சிவஞானம் மேலோங்கிச் செல்லவேண்டும். அவ்வாறு செய்யாதவர், உலகிலே புறச் சமயங்களுள் ஒன்றைப் பற்றினால், உயிர்ப் பண்பின் பயன் கெட்டொழியும்.

புனத்தில் ஒரு கோலைப் பற்றிநின்றால், பறவைகள்கூடிக் கதிரை உண்ணு; அது போலவே திருவைந்தெழுத்தாகிய மந்திரக் கோலைப் பற்றிநின்றால் புலன்களாகிய பறவைகள் அல்லது தீவினைகள் கூடாமலொழியும்; அங்ஙனமின்றித் திருவருள் துணையில்லாமையால் மாயையில் அழுந்தி மயங்குகின்றார்களே எனக் கூறுகின்றார்.

சூரியன் முன்னிலையில் தூய்மையான சூரியகாந்தக் கல்லிலிருந்து நெருப்பு வெளிப்படுதல் போல, அருட்கல்வி முற்றப்பெற்றோர்க்கு (ஆன்மாவுக்கு)த் திருவருளால் சிவம் வெளிப்பட்டருள்வான். சஹஸ்ராரத்திலுள்ள இளமதி மண்டலத்தை நாடி, தாரணையால் எட்ட வல்லார்க்கு மனம் உறுதியாக நின்று நிலைக்கும். அவ்வாறு நிலைத்த மனம் மேலேறிச் செல்லுவதற்கு நூலேணிபோல உதவுந்தன்மை உடையது அருட்கல்வியாகும் என்று அது பயன்படும் வகையையும் குறிக்கின்றார்.

சிவஞானக்கல்வியைப் பயின்றவர்கள், நன்னெறிக்கண்ணே உய்க்கும் வழித்துணை யாவார். மேலும் பிறவிப்பிணிக்கு மருந்தும் ஆவார்களென்றும், அத்தகைய திருவருட் கல்வியுடையார்முன்பு அந்த அருட்கல்வி இல்லாதவர் ஒதுக்குந்தன்மையராவர் என்றும், அந்த அருட்கல்வியாளர்க்குப் பெருந் தன்மைவல்லானாகிய பரமன் மனம் அடங்குதற்குரிய துணைவனுவான்; மேலான ஏழு உலங்களையும் கடந்து பேரின்பநிலை பெற வழித்துணையாயிருப்பவனும் இறைவனே என்றும் அறிவிக்கிறார்.

நீங்கள் பற்றுக்கோடாக ஒருபொருளைப் பற்றவேண்டுமாயின் சிவபரம் பொருளையே பற்றுங்கள்; முழுமுதற்கடவுளாகிய இறைவன் திருவருளைப் பெற்றால் எல்லாம் மிக எளிதாய் முடியும்; உபாயத்தில் வல்ல (அறிவு) ஒளி விளங்கும் தேவராயினும் ஞானநூல்களைக் கற்றவர்தாம் பேரின்பம் அடைந்து சிவதுரிய நிலையில் நின்றவர் ஆவார் என்கிறார் திருமூலர். எனவே சிவ ஞானக்கல்வி பயின்றவரே பேரின்பமுற்று நின்றார் என்று நாம் உணரலாம்.

திருமந்திரத்தில் கல்வி என்னும் இந்தத் தலைப்பில் இறுதியாகக் காணப்படுகின்ற பாடலில், திருமூலதேவர் சிவபெருமானைக் கடலுடையான்; மலையான் என்றும், உலகமே உருவமாக உடைய இறைவன் பஞ்சபூதங்களையும் தனது திருமேனியில் ஒருகூறாக உடையவன்என்றும், பல்லூழி காலமாகப் புண்ணிய வண்ணமாம் வலிமை மிக்க இடபத்தை ஊர்தியாகச் செலுத்தும் அமரர்கள் தலைவன் என்றும், இத்தகைய இறைவன், திருவடி ஞானமுடையவரின் புனித உள்ளத்தில் உறைவான் என்றும் கூறுகின்றார். அப்பாடல்:

> கடலுடையான் மலையான் ஐந்து பூதத்து
> உடலுடை யான்பல ஊழிதொ றூழி
> அடல்விடை ஏறும் அமரர்கள் நாதன்
> இடமுடை யார்செஞ்சத் தில்லிருந் தானே.

கல்வி என்ற தலைப்பில் காணப்படும் பாடல்களால் அடியேன் மிகச் சுருக்கமாக உணர்ந்துகொண்ட செய்திகள்: ஞான நூற்கல்வியே மிகமிக இன்றியமையாதது; இதனால் அகக்கண் எனப்படும் பதிஞானம் உண்டாகும்; ஞானம்பெறுதலின் பயன் இறைவனது திருவடி தொழுதலேயாம். ஞானக்கல்வியால் உடலும் பொன்னாகும்; தூயஞானக் கல்வியே நல்ல துணையாவது; அனுகதம்வரையில் மனம் உயர்தற்குரிய நூலேணிபோன்றது திருவருட்கல்வியே; திருவருட்கல்வியுடையாரே நன்னெறியிலே உய்க்கும் வழித்துணையாவார்; மேலும் பிறவிப்பிணிக்கு மருந்தும் ஆவார்; அருட் கல்விகற்றவரே பேரின்பம் உற்றுநின்றவர்; கற்றவர்நெஞ்சிலேதான் சிவன் இருப்பான் என்பனவாம்.



திருமந்திரமாநாடு - இரண்டாம் நாள்

# இரண்டாம்நாள் பேருரைகள்

தலைமையுரை :

## சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள்,

*பழநி.*

கருணைக்கடலாகிய குருமகாசந்நிதானம் அவர்களுடைய அருளாணையால் நாமெல்லாம் இந்த நேரத்தில் திருமந்திர சிந்தனையில் ஈடுபடுவதற்கு இங்கே கூடியிருக்கின்றோம்.

நம்முடைய பாரததேசம் புண்ணியபூமி. இங்கேதான் சிறப்பான அறங்கள் முறையாக நடந்துகொண்டிருப்பதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கின்றது. மனிதப் பிறப்புக்கு வருகிற கௌரவம் ஞானத்தினாலேதான். அறிவு விளக்கமே, விடுபடுவதற்குச் சிறந்த சாதனமாகும். அதற்கு விளக்கம் பெறுவதற்குச் சந்தர்ப்பம், பிறப்புக்கள் அத்தனையிலும் மனிதப்பிறவி சிறந்தது என்பது. அறிவின் விளக்கமெல்லாம் மறைவு நீங்க நீங்கப் பிரகாசமுறுதல்போல, நாமெல்லாம் அந்த நிலையிலே பொருந்தவேண்டியவர்கள். அப்படிப்பட்ட ஒரு பொதுவான பேறு பரம ஞானிகளுக்கு நிரம்புகிறது. அப்படிப் பட்ட பரமஞானிகளை இரண்டு தொடர்களினாலே ஆன்றோர்கள் புலப்படுத்துகிறார்கள்; "கோடி சூர்யப் ப்ரதீகாசம், கோடி சந்திர சீதளம்" என்று. கோடி சூரியன் உதயமானாற்போல் ஞானவிளக்கம் பெற்றவர்கள். அப்படிச் சொல்லும்போதே, அவர்களுக்கு அமைந்திருக்கும் அமைப்பை நோக்கி ஓர் அளவு அஞ்சத்தக்கதாக இருக்கும். குருசிவ வடிவமாய், சதாசிவ மூர்த்தியாய் முருகப் பெருமான் தோன்றினார் என்று சொல்லுகின்றபோது, அனந்தக்கண்ட ஐம்பெரும் பூதங்களும்நிலைகுலைந்தன என்றுசொன்னார். ஆனால், அது அழிவுசெய்ய வந்தது அல்ல; காப்பாற்ற வந்தது. அதனுடைய பேரொளி மற்றவர்களை அஞ்சச்செய்தது. அதுபோல் கோடி சூரியனுடைய வெப்பத்தைத் தாங்க மாட்டாமல் அச்சமுண்டாகிறது. ஆயிரம் கோடிசந்திரர்கள் உதயமானாற்போல் தண்ணொளி உடையவர்கள். அவர்கள் கோடி சூரியப் பிரகாசம் ஆனவர்கள். ஆகையால், கதிரோனைப்பார்க்கக் கோடி பங்கு ஞான விளக்கம் பெற்றவர்கள் அவர்கள்.

கதிரோனுக்குப்பன்னெடுங்காலமாக ஒரே தன்மைத்தாக இலக்காகயிருப்பது இருள். நாடோறும் வளர்ந்தோங்குகிறது இருள். சூரியனுடைய கிரணம் எல்லைக்கு உட்பட்டது. உயிர்களினுடைய அறிவுநிலையைத் துரத்திக்கொண்டிருக்கும் இருளானது ஒரு தன்மைத்தானது அல்ல. நாள்தோறும் வளருவது. ஆகையால், வளருகின்ற இருளைப் போக்கும் ஞானிகள் ஒரே தன்மைத்தாக இல்லாமல், மேன்மேலும் என்னென்னவெல்லாம் நம்முடைய அறிவில் ஆணவம் வந்துசெறிந்து நம்மைஅடர்த்தல்செய்யுமோ அவ்வப்போதெல்லாம், அவர்கட்கு ஞானம் உதயமாகி நம்மையெல்லாம் உய்விக்கும். அத்தகைய ஞானந்தான் நமது புண்ணிய பூமியின் பெரும் சிறப்பான ஒருபேறு. அதனால்தான் நம்முடைய பாரம்பரியத்திலே மெய்ஞ்ஞானிகளும் கௌரவப் புருஷர்களாகக் கருதப்படுகிறார்கள்.

ஞானம் என்று சொல்லுகிற ஒன்று, எல்லாத்தேசாந்திரங்களிலும், எல்லாச் சமய பேதங்களிலும் காணப்படுகின்றது. நம்முடைய சமுதாயத்திலே அந்த ஞானத்தைப்

பெறுவதற்கு உரிய வாய்ப்பை முறையாக அமைத்திருக்கின்ற காரணத்தாலேயே நம்முடைய சமுதாயம் சிறந்ததாக ஆகின்றது. ஞானமே உயிர்களுக்குப் பரம லட்சியம். அதையடைவதற்கு உபாயங்கூறும் சமயம் உயர்ந்த சமயம். ஞானத்தை லட்சியம் என்று கூறி, எல்லாச் சமயமும் அதற்கு உபாயம் கூறுவதை நோக்கும்பொழுது நமது சமயமே சிறந்தது என்பதை நாம் அறிவோம்.

நோய்க்குப் பரிகாரம் தேடவந்தவன் மருத்துவன். ரோகநிவாரணத்தைப்பற்றிப் பேசிவிட்டு, 'போய் வா' என்று சொல்லிவிட்டால் அந்த ரோகி நோய் நீங்கமாட்டான். பல மணிநேரம் பேசிக்கொண்டு இருப்பதால் நோயினால் துன்பப்படுகிறவன் நோய் நீங்கி இன்பப்பேறு அடையமாட்டான். அதைப்பற்றிப் பேசாமல் மருந்து தரும் வைத்தியன் ரோகத்தை நிவர்த்திக்கிறான். அதுபோல், உயிரின் நோய் நீங்குவதற்கு உபாயங்களையும், ஏதுக்களையும் எடுத்துக்காட்டுவது அதன் வளர்ச்சியை நமக்குப் புலப்படுத்துகிறது. உபாயத்தை மட்டும் கேட்டுக்கொண்டிருப்போமானால், அறியாமை நம்முள்ளே வளருவதை எடுத்துக்காட்டுகிறது. இருளை விட்டுவைத்து இருப்போமானால், அது ஒரு காலவெல்லைக்குள்ளேநீங்கும். அறிவாகிய இருளை விட்டு வைத்திருந்தால், அது கால எல்லைக்குள் நீங்குவதில்லை. ஆகவே, ஒரே தன்மைத்தாக இருக்கும் இருளைநீக்குவதற்கு நாமெடுத்துக் கொள்ளும் முயற்சியைவிட வளர்ந்தோங்கி இருக்கும் இருளை நீக்குவதற்கு அறிவிலே எழுச்சியுள்ள எல்லோரும் மேற்கொள்ள வேண்டியது பெருமுயற்சியாகும். அந்த முயற்சியை இருளிலே கிடக்கின்றவர்கள் செய்துகொள்ள இயலாது. இருளிலிருந்து நீங்கியவர்களே அம்முயற்சியைச் செய்யக் கூடியவர்கள். அப்படி இருளிலேயிருந்து நீங்கியவன் அநாதியாகிய பரமேஸ்வரன் ஒருவர்தான். மற்ற எல்லா உயிர்களும் அவர் அருளினாலே இருள் நீங்கினவர்கள்; முன்னமேயே இருள் நீங்கப்பெற்றவர்கள் அல்ல. ஆதலால், 'அநாதியே அமலன்' என்றது சித்தியார். அநாதியே அதிலிருந்து நீங்கிய பெருமானின் அருள்பெற்றவர்களைக் குருபரம்பரை என்று சொல்வார்கள்.

குரு பரம்பரையினர் - குரு, அபரகுரு, பராபரகுரு என மூவகையர். குரு என்பவர் சிவனிடத்தில் அணுகியிருப்பவர். அபரகுரு என்பவர் நம்மை அணுகியிருப்பவர். பராபர குரு என்பவர் இரண்டுபேருக்கும் இடையிலே இருப்பவர். சரியையும் கிரியையும் எல்லா மதத்தினராலும் மேற்கொள்ளப் படுவன. யோகமென்பது அத்துணை எளிது அன்று. ஞானம் என்பது பரம லட்சியம். அந்தஞானத்தை அடைவதற்கு ஆரம்பமாக அமைவது சரியையும் கிரியையும் ஆகும். 'சரியையும் கிரியையும்தான் செய்கின்றிலர்' என்று திருமூலர் சொல்கிறார். ஏனென்றால், சரியையை மேற்கொள்ளாதபோது கிரியையிலே பிரவேசித்தலும் பயன் அடைதலும் இயலாது. இந்த இரண்டிலும் பிரவேசித்தவருக்கு அல்லாது யோகநெறியில் தலைப்படுதல் அறிவீனம் அல்லவா? சரியை, கிரியையிலே தலைப்படுகின்ற நம்மவர்கள், தங்கள் அளவிலே பயன் உடையவர்கள் ஆவார்கள். யோக நெறியிலே தலைப்பட்டவர்களுக்கு விளங்கும் விளக்கந்தான் பரிபூரண ஞானம் என்று பேசப்படுகிறது. அவர்களெல்லாம் யோகிகளாக இருந்தார்களா என்ற கேள்வி நமக்கு எழும். அந்த யோக நிலையைப்பற்றி நினைவுகூர்கின்றதபோதெல்லாம், அவர்கள் சீலத்தால் அன்றி கோலத்தாலும் வேறுபாடு உடையவர்களாயிருக்க வேண்டுமென்றும், உலக இயலுக்கு அவர்கள் முற்றிலும் மாறுபட்டவர்களாக இருக்க வேண்டும் என்றும், நாமும் அப்படிக் கருதவேண்டும் என்றும் பலர் நினைக்கிறார்கள். இந்த விபரீத உணர்ச்சி தலையெடுத்து நம்மவர்கள் மறுத்தல் செய்த காலத்தில்தான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தோன்றினார். 'யோகத்து நெறியிலே சுந்தரம்' என்று சொல்லுவதுண்டு.

பன்னெடுங்காலமாக யோகத்தைப்பற்றி நினைவுகூர்ந்தவர்களெல்லாரும், சீலத்தால் அன்றி கோலத்தாலும் மாறுபட்டிருக்க வேண்டும், உலக இயலுக்குப் பெரிதும் மாறுபட்டவர்களாக இருக்க வேண்டும் என்றும், அப்படியிருந்தால் யோகத்திலே பிரவேசிக்கச் சந்தர்ப்பம் உண்டாகும் என்றும் கருதினர்கள். அந்தக் கருத்தை நம்முடைய மனதிலே வைத்துக்கொள்வோமாயின் அந்த யோகம் என்று சொல்லும் ஒரு பெரும் சாதனத்தில் நம்மவர்களுக்குப் பிரவேசம் இல்லாமல் போகும். சரியை, கிரியை என்ற இரண்டு நெறிகளையும் பின் பற்றுகிறவர்கள் அதற்கு அப்பால் செய்யும் நியமத்தில் மட்டுமல்லாமல், ஞானநெறியில் தலைப்படவேண்டியவர்கள் ஆகின்றார்கள். ஞானத்திலே தலைப்படுகிறபோது ஏற்படும் விளைவை நோக்கினுல், யோகம் என்று சொல்வது சீலத்தால்மட்டும்மேற்கொள்ளத் தக்கது அன்று, சீலமே யோகத்திற்கு ஒரு ப்ரகாரம் என்றுபுலப்படுத்தவேண்டுமென்று அனாதி மல பக்குவனுகிய பெருமானுகிய பரமேசுவரன் கருதினர். அதனுல் இல்லற தருமமாக இப்படிப்பட்ட ஒருஉணர்ச்சியை வளர்த்தல் செய்ய வேண்டுமென்று திருவுள்ளம் அருள்கூர்ந்தது. ஆகையால், சுந்தர மூர்த்திசுவாமிகள் அதற்கு இலக்காக, அவர் வாயிலாக யோகத்தை உண்டாக்கவேண்டுமென்ருல் அதிர்ச்சி உண்டாகவேண்டும். ஆனுல், அப்பொழுது நாம் சாந்தமாகவே இருந்தோம். இத்துணைகாலம் பொறுத்தும் அதன் பலன் அப்படியே இருக்கிரேம்.

இல்லற நெறியிலே, யோகத்திலே நின்று உணர்த்துவது என்று சொல்லப்படுகிறதே; அப்பொழுது அப்படித் தலைப்பட்டவருக்கு இல்லறந்தான் சிறந்த வாய்ப்பு, சுந்தரர் இலக்காக இருந்தார் என்பது எவ்வளவு வியப்பான விஷயம் என்றும் நாம் எண்ண வேண்டும். எத்தனையோ பல விஷயங்களில் மாறுதல் என்றும், அதிர்ச்சி என்றும் நாம் இப்படியெல்லாம் பேசப் பழகுகின்ற இந்த சகாப்தத்திலேகூட, சுந்தரமூர்த்திசுவாமிகள் யோகத்திற்கு எடுத்துக்காட்டாக இருந்தார் என்று சொல்லும்போது, நாம் அதிர்ச்சி கொள்ளவில்லை. காரணம் என்ன? பன்னெடுங்காலமாக யோகநிலை என்ற ஒன்று, இன்றுவரை கோலத்தால் வேறுபட்டவர்களுக்கு - ஒவ்வொரு எல்லையைக் கடந்து தமக்கு உரிய நாட்டையும் ஊரையும்விட்டு அவர்கள் காட்டுக்குச் சென்றவழி அல்லாது யோகத்தைப்பற்றிச் சிந்தையிலே இயலாத ஒன்று என்று கருதிவந்த கருத்து மேலோங்கிய காலத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகள், யோகநிலைக்கு எடுத்துக்காட்டாக இருக்கத் திருவருள்சுரந்தது.

யோகம் என்று சொல்கிறதாயிருக்கும் நெறி, சரியை கிரியையிலே தலைப்பட்டவருக்குச் சமீபத்திலே உள்ளதாக இருக்கும் லட்சியம். லட்சியம் பரம லட்சியம், அவாந்தர லட்சியம் என்று இரண்டு வகைப்படும். அப்படிப் பார்க்கும்போது, ஒன்று ஏதுவும் பயனுமாக இருப்பது என்று அமைத்துக் கொண்டால், சரியைக்குக் கிரியையும், கிரியைக்கு யோகமும், யோகத்திற்கு ஞானமும் என்று நம்முடைய சைவசித்தாந்த பரம ஞானசாரியர்கள், நம்மவர்களெல்லாம் வணங்கும் தெய்வமாக இருந்த சிவஞான சுவாமிகள், சரியையின்றி கிரியையும் கிரியையின்றி யோகமும், யோகமின்றி ஞானமும் இல்லை என்று எடுத்துக் காட்டினர்கள். ஆகையால் சரியை, கிரியை, யோகம் என்று சொல்வதாயிருக்கும் நெறி நம்மால் மேற்கொள்ளத் தக்கதல்ல; அதற்குக் காட்டை அடையவேண்டும்; வீட்டைத் துறத்தல் வேண்டும்; அந்த நிலையிலேதான் பயிலப்படுவது என்றெல்லாம் கருதிவந்தோம். அந்த சிந்தனையில் நமக்குப் பிரவேசம் இல்லாமல் போக, அந்தக் காலத்திலே இங்கேயிருந்து யோகங்கள் வேறுபலதேசங்களுக்குப்போய், அங்கிருந்து வந்திருக்கிறது. இப்படியாக, யோகம் என்று சொல்லும் ஒன்றை இங்கே சாமான்யமான பொருள், விழுப்பொருள்

என்று கருதி அந்த யோகத்தை எடுத்து நம்மவர்களுக்குப் போதிப்போர் போன்று, அந்த நாளிலே அருணகிரி சுவாமிகள் வந்தார்கள். அவர்கள், அடிநிலை என்ன என்று ஆராயத் தலைப்பட்டார்கள். அந்த யோகமெல்லாம் பிரணவத்தை முன்னாகவைத்து எழுந்த யோகம் என்பதை நினைவு கூர்ந்தார்.

யோகத்தின் அடிநிலைதான் யோகம் என்று அவர் எடுத்துக்கூறி, அடிநிலை தெரியாது நீங்களெல்லாம் மருளாதீர்கள் என்று புலப்படுத்துவாராய், அவர்களுடைய இந்தக் கருத்திலே இந்த உத்வேகம் இருந்ததா, இல்லையா என்று கேட்கிற கேள்வி இருக்கின்றது. இது உள்ளத்திலே இருந்திருக்க வேண்டும் என்பதைப்பற்றி இன்னொரு இடத்தில், 'அசட்டு யோகிகள்' என்று அவர் சொல்கிறார். அப்படியானால், அடிநிலையற்று, பேச்சளவிலேயிருப்பது யோகம் அன்று. யோகம் என்பதன் பொருளைத் தெரிந்த பின்பு யோகத்தைப்பற்றிப் பேசுவோம் என்று அதற்காகவே ஒரு பெரிய துவஜத்தை நாட்டுகின்றார் இந்த நூலிலே திருமூலர். இதைப்பற்றி நம்முடைய சமயத்தில் பேசுதல், அதைப் புலப்படுத்தத் தலைப்படும்போது அவற்றின் அடிநிலை இன்னது என்று நாம் தெரிந்துகொண்டு, அவற்றைத் துணையாகக்கொண்டுதான் நூல் எழுத வேண்டுமென்பது வைதிக பரம்பரையும், கௌரவமான பரம்பரையும் ஆவாருடைய பாரம்பரியம் என்பதுதான் அதனுடைய தாத்பர்யம். வைதிக பரம்பரை என்று அந்தக் கூட்டத்தினுடைய பரம்பரையைக் கருதக்கூடாது. "உலகியல் வேதநூல் ஒழுக்கம்" என்று சேக்கிழார் சொல்கிறார். உலகம் என்பதற்குப் பொருள் சொல்வது அவசியம். உலகமென்பது உயர்ந்தோரைக் குறிக்கும். அவர்களுக்குரிய பொதுமைக்கு வைதிகம் என்றும், சிறப்பு உணர்ச்சிக்குச் சைவம் என்றும்பெயர். 'உலக இயல்' என்ற சொல்லும் வேதாகமங்கள் வழிவந்த நூல்கள்தாம் நூல்கள் என்று சொல்லப்படும்.

சிவாகமங்களிலே யோகபாதம் பேசப்படுகின்றது. எண்ணில்கோடி ஆகமம் என்றார். அந்தப் பரம ரகசியத்தை எடுத்து உணர்த்தப் புகுந்த திருமூலர் 'யோகம்' என்றசொல்லை முதலிலே வாங்கிக்கொண்டு, அது கூடுதல் என்ற பொருள் உடையது ஆதலாலே, எது கூடுதல்? எதைக்கூடுதல்? என்ற இரண்டு கேள்விகளை எழுப்பிக்கொண்டு, இதுவரை கிடைக்காமைக்குக் காரணம் என்ன? என்ற கேள்வியை வருவித்துக்கொண்டு, மலசக்திக்கு வலிமை கூடாமையே காரணம் என்று தெளிவு செய்து, இதனால் செலுத்துவது ஞானம் என்று புலப்படுத்தி, அந்த யோகத்திற்குச் சந்தர்ப்பம் என்ன என்று தொடங்கி, அந்த முறை அமைப்பினாலே யோகத்திற்கு இடம் தந்து, சரியை கிரியை பயின்ற நெறியிலே மேற்கொள்ளப்படுகிற சாதனம் யோகம் என்றுகூறி, ஞானாசிரியனுடைய கடைக்கண் பார்வையினாலே மலம் நீங்கப்பட்டிருப்பவர்க்குச் சரியையிலும்கிரியையிலும் அதிகாரம் எனவும் அவைகளின்வழியே நின்றோர்களுக்கு யோகத்திலே பிரவேசம் எனவும், அந்த நெறியிலே தலைப்பட்டு அடைகிற பயன் ஞானம்என்று நெறிப்பட உணர்த்தினார் திருமூலர். அப்படி உணர்த்துவதற்கு மூலப்பொருளாக இருந்த பரம சாதனம் ஆகமம் என்பதை அந்தப் பெருமானார் எடுத்துக்காட்டுகிறார். அந்த இயல்பைச் சேக்கிழார்புலப்படுத்துகிறார்.

இத்தகைய பேற்றினை நமக்கு அந்த ஆசிரியர் வழங்குகின்றபொழுது ஆகமங்களெல்லாம் சிவபேதம், ருத்ரபேதம் என்னும் இரண்டில்அடங்கி, சிவனால்சொல்லப்பட்டு, கேட்ட சிவன்கள், சொன்ன சிவன்கள் என்று இருவகைப்படுவார்கள். சிவஞான போதத்திலே சொல்லப்பட்டவை சொன்ன சிவன்கள். அவனுடைய அருளினால்கேட்ட சிவன்களாக இருக்கும் ருத்திரர்கள், ரிஷி பரம்பரையினருக்கு வரும். அது சிவாகமங்களிலே சொல்லப்பட்டிருக்கிறது.

சிவாகமங்களின் சாரங்களை இங்கே நமக்கு அனுக்ரகிக்க எழுந்துள்ள திருமூலர் பரமாகாசம் என்று சொல்கிறார். சிதாகாசப் பெருவெளியில் உள்ளவர்களுக்கு அருளிச் செய்யப்பட்டதாயிருக்கும் சிவாகமங்களின் சாரமாக இந்த யோகபாதத்தை எடுத்துச் சொல்லும்போது, தானும் அந்த நெறியில் நின்றால் அல்லாது அந்தப் பெரும்பொருள் பற்றிப்பேசுதல் அரிதாதலால், அந்தநிலையில் என்றென்றம் நிற்கும் திருமூலதேவர் அந்த லையிலேநின்று அருளுவார். எம்மனோரும் றிந்துகொள்ளுதற்பொருட்டு அவர் திருக் யிலாயத்திலிருந்து வருகிறார் என்பதைக் கயிலாயத்து ஒரு சித்தர் பொதியில் சேர் ார்' என்று ஊரும் பேரும் நம்மவர்போல் வைத்து, கயிலாயத்து ஒரு சித்தர் என்று பயர் சொல்லக் காரணம் என்ன? வினை சத்தால் வந்து, ஊரும் பேரும் ஒன்றும் ல்லாததால் தனியாக அவருடைய பெய ரச் சொல்லுவதற்குக் காரணம் என்ன? ரமேசுவரன் கயிலாயத்திலிருந்து எழுந்து ந்தது கி. பி. யா? கி. மு. வா? என்று சால்லி, அவர் காலத்தால் வரையறுக்கப் ட்டவர் அல்ல. காலம், இடம், திக்கு வைகளைக் கடந்தவர்தாம் பரமஞானிகள். ானிகளுக்கே அப்படிப்பட்ட நியமம் ல்லையாயின் அது பெரிய பரமஞானியாகிய மேசுவரனுக்கு எங்ஙனம் பொருந்தும். கவே, கயிலாயத்தில் ஒரு சித்தர் என்று றுகின்றார். அப்படிப்பட்ட திருமூலர் தம்பரத்தில் வந்து நடேசப்பெருமானின் பரானந்தத்திலே தோய்ந்தவராகி, அதன் பின்னர் திருமந்திரத்தை அருளிச்செய்தார் என்று அவருடைய இயல்பை உணர்ந்த சேக்கிழார் எடுத்துக்காட்டுகிறார்:

வவ்வியமெய் யுணர்வின்கண்
வரும் ஆனந்தக்கூத்தை
அவ்வியல்பில் கும்பிட்டு.

பரம சாதனங்களை மேற்கொண்டவர் களுக்கு அந்தத்திருவருள் தானே வவ்விக் கொள்ளும் இயல்பை உடையது. இவர்கள் போய்ச்சென்று பற்றும் இயல்பு உடையது அன்று. அப்படித் திருவருளிலே தோய்ந்த வர்களாகி, திருவருளால் தூண்டப்பட்ட வர்களாகி நின்று இந்தத் திருமந்திரத்தை அருளிச்செய்தார் என்பது இத்திருமந்திரத்தி னுடைய பிறப்பை நாம் உள்ளூர உணரத் துணைசெய்யும். இந்நிலையை அவர் அறிதல், அதை வழங்கிய சிவன் அறிதல் என்போன்ற வர்களுக்கு மன எழுச்சி செய்தற்பொருட்டு என்று நாம் அதை சிந்தித்துக்கொள்ளுதல் வேண்டும். இப்படிப்பட்ட பாரம்பரியத் திலேவந்த ஒருபெரியார் அருளிச்செய்தநூல் திருமந்திரம் என்பதாகும்.

இந்தத் திருமந்திரம் என்ற ஒன்று, 'மந்திரம்' என்ற பெயரால் அமைந்திருப்ப தால் மந்திரம் என்ற சொல்லை அதனுடைய பொருளையுணர்ந்து நியமனம் பண்ணவல்ல வராய் இருக்கும் ஒப்புயர்வற்ற ஒரு தலைவ னுடைய இயல்பைப் புலப்படுத்துவது திரு மந்திரம் என்று திசையை மாத்திரமாவது தெரிந்துகொள்ளவேண்டும். திருமந்திரம் என்ற இடத்தில் மந்திரம் என்ற சொல்லை நியமனம் பண்ணுவாரையும், அவருடைய ஆற்றலையும், அதற்கு கௌரவம்இருக்கிறது என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும்.

ஞானம் என்ற ஒன்று எல்லோராலும் விரும்பப்படுகிறது. அது இரண்டு படியாய் இருக்கிறது. நமக்குத் தொலைவில் ஒருபடி இருக்கிறது. அதனையடுத்து இடையிலே ஒரு படி இருக்கிறதே அந்தப் படி நிலைகுலைந் திருக்கும். நம்மை அந்த ஞானநெறியில் தலைப்படுமாறுசெய்கிறவர் நம்முடைய அரு ளாசானாகிய திருமூலதேவர் ஆவார். அத்த கைய அபூர்வநெறியிலே நம்மைச் செலுத்து கிறவர்கள் ஞானசாரியர் ஆவார்கள். அவர் கள்தாம் நமது கருணாமூர்த்தியாக விளங்கு பவர்கள். எத்தனையோகாலமாக நம்முடைய சைவ பாரம்பரியத்தில் செய்த ஒரு விசேஷ புண்யத்தின் பயனாக, கிருபாசமுத்திரமான மகாசந்நிதானம் அவர்கள் திருவுள்ளத்தில் புகுந்து, ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளுடைய

திருவருள் இவர்கள் திருவுள்ளத்தில் நின்று நமக்கு அனுக்கிரகிப்பதற்கு இன்றைக்கு வேறு சான்றுகள் வேண்டாம். இதை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எண்ணும் போது - இந்நூலிலே பிரவேசிக்கிறவர்கள் பிரவேசியுங்கள், அதற்கெல்லாம் அடிப் படைகளும் எத்தனையோ உள்ளன, இந்த நாளிலே நாம் அஞ்சி அஞ்சி புத்தகஉருவிலே இடம்பெற்று, நமது சித்தத்திலே இடம் பெருத திருமந்திரத்தை நம்மையெல்லாம் சிந்திக்கும்படிச் செய்தார்கள் என்பதை நினைக்கும்போது, அதற்கெல்லாம் அவர்க ளுடைய பெருங்கருணைதான் காரணம். என்போன்றவர்களுக்கு இப்படிப்பட்ட ஒரு பெரிய தகுதி தந்து இங்கே இந்தப் பொறுப்பு வகிக்குமாறு செய்த கருணைத் திறத்தை என்றென்றும் சிந்தித்துக் கொண் டிருக்கிறேன். இத்தகையதொரு பேற்றினைத் தந்த அந்தத் திருவருளை வழுத்திக்கொண்டு, இனிமேல் நல்ல கேள்வியைக் கேளுங்கள் என்று அருளுமாறுகூறி, கேட்டு அதன்படி அமைந்து ஒழுகுங்கள் என்பதைப் புலப் படுத்துமாறுகூறி, இங்கே 'கேள்விகேட்டு அமைதல்' என்ற ஒரு பெரிய விஷயத்தை நம்முடைய சிவகுமார் உதவுவார். அப்படி இன்றைக்கெல்லாம் சிவகுமாரர்களாகவே அமர்ந்திருக்கின்றூர்கள் என்பதையும் நாம் சிந்தித்துக்கொண்டிருப்போம்.

போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகழ் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தைப்
போற்றுகின் றேன்எம் பிரானென்று நானே.

—திருமூலர்.



திரு. சிவகுமார் விரிவுரை நிகழ்த்துகிறார்

'கேள்விகேட்டமைதல்'

## திரு. ச. சிவகுமார் அவர்கள் M. A.,

சென்னை.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவடிகட்கு வணக்கம் செலுத்துகிறேன். இங்கே குழுமியிருக்கின்ற அனைவருக்கும் என்னுடைய தாழ்ந்த வணக்கத்தை இங்கு தெரிவித்துக்கொள்கிறேன். பரமன் ரொம்ப கருணை உடையவன். தகுதியற்றவனாகிய என்னையும் ஆட்கொள்ளுகின்ற பெருந் தகைமை அவனிடத்திலே உண்டு. இன்று அமைந்திருக்கிற தலைவர்கள் மிகச் சிறந்தவர்கள். மற்றும் அமைந்துள்ள பேச்சாளர்களையெல்லாம் பார்க்கும்போது எனக்குப் பூர்வ புண்ணியத்தின் பயனாகவே இந்த வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்று எண்ண வேண்டியிருக்கின்றது. அதன் பலனாகவே நான் இதில் கலந்துகொள்ள நேர்ந்துள்ளது.

இப்போது அடியேனுக்குக் கொடுக்கப் பட்டிருக்கிற பொருள் "கேள்வி கேட்டு அமைதல்". கேள்வி என்றிருக்கிறதே, இது சில மாணவர்களுக்கு மிகுந்த பயத்தைக் கொடுக்கக்கூடியது. அந்தக் கேள்வி அல்ல நாம் நினைப்பது. "கேள்வி முயல்" என்று ஒரு பழமொழி சொல்வதுண்டு. "கற்றலின் கேட்டலே நன்று" என்றும் ஒரு பழமொழி உண்டு. ஆகவே, இப்படி கேள்வி என்பது ஒரு சிறந்த கருத்தோடு அமைந்திருக்கிறது. இராமாயணத்திலே அனுமனை "சொல்லின் செல்வன்" என்று சொல்கிற அமைப்பிலே கேள்விச் செல்வத்தை நாம் ஞாபகத்திற்குக் கொண்டுவர வேண்டும். இந்தக் கேள்வி என்பது நமக்குச் செவிச்செல்வமாக அமைகிறது. செல்வங்கள் பலவாக இருக்கின்றன. அவற்றுள் மிகச்சிறந்தது செவிச்செல்வம். "செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்" என்பது திருவள்ளுவர் வாக்கு. அந்தச் செவிச்செல்வத்தை நாம் 'கேள்வி' என்று சுருக்கமாகக் கொள்ளலாம். காது இருந்தும் நல்ல சொற்களைக் கேளாதவர்கள் செவிடர்கள். கண் இருக்கிறது; படிக்கத் தெரியாதவர்களிடம் ஒரு புத்தகத்தைக் கொடுத்து அதனைப் படிக்கச்சொன்னால் அவனால் படிக்கவே முடியாது. படிக்கத் தெரிந்தவனுக்கு விளக்கு திடீரென்று நின்று விட்டவுடன் கண்ணிருந்தும் படிக்கமுடியவில்லை. கண் இருந்தும் குருடர் என்று சொல்வதுபோல, காது இருந்தும் கேள்விப் பயன் பெறாதுபோனால், காது இருந்தும் செவிடர் என்று சொல்லக்கூடிய நிலைதான் வருகிறது. 'கேட்பினும் கேளாத்தகையவே' என்ற குறள்தான் இச்சமயத்தில் ஞாபகம் வருகிறது. சொல்லுவோருடைய அறிவு, அவர்களுடைய அளவு, அவர்களுடைய ஆற்றல், அவர்களுடைய ஆன்மீகவளர்ச்சி, அவர்களுடைய பேச்சு நமக்குப் பலவகைகளில் பலன் தருகின்றன. எனவேதான், சிறந்த கருத்தைக் கேட்கிறதிலேகூட, சிறந்த கருத்தைச் சிறந்தவர்கள் வாயினாலே கேட்பது சிறந்த பயன் தரும். அதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். நல்ல விஷயத்தை நல்லவர் வாயினாலே கேட்பது ரொம்ப ரொம்ப நல்லது. அது நமக்கு நல்ல ஆன்மீகபலம் பெற உதவும். அதனால்தான் 'கற்றிலனாயினும் கேட்க' என்று சொல்லப் படுகிறது.

இப்படிக் கேட்கும்போது, அதைக் கவனமாகக் கேட்கவேண்டுமென்று பெரியவர்கள் சொல்லி வைத்திருக்கின்றார்கள். அதோடு, அப்படிக் கேட்பதையும் பக்தி சிரத்தையோடு கேட்கவேண்டும். அப்படிக் கேட்ட பின்னர், சிந்தனைசெய்து பார்க்க வேண்டும். கற்றல், கேட்டல், சிந்தித்தல்,

தெளிதல் என்று இதை வரிசைப்படுத்திச் சொல்லியிருக்கிருர்கள். அப்படிச்சொல்லும் போது, கேட்பதை இரண்டு காதுகளினுலே கேட்க வேண்டுமென்று சொல்லுகிருர்கள். எல்லாப் பக்கங்களிலிருந்தும் வரக்கூடிய நல்ல விஷயங்களைக் கேட்க வேண்டும். ஆண்டவன் நமக்குக் கண்களையும், காதுகளையும் தலையிலே வைத்திருப்பதற்குக் காரணம், நம் கண்ணும் காதும் ஒன்ருகச் செயல்படுவதற்காகத்தான். இதைத்தான் 'செவிமடுத்தல்' என்று சொல்கிருர்கள். இப்படிச் செவி மடுக்காமல், போகின்ற போக்கிலே பேச்சை ஒரு காதாலே கேட்டு, இன்னெரு காதாலே விட்டுவிடுவது செவி மடுத்தலாகாது. கேட்பவற்றைக் கவனமாகக்கேட்டு, கொள்வனவற்றைக்கொள்ள வேண்டுமென்று கூறப்படுகிறது. இதிலே நாம் பேசுகின்றவர்களின் திறனைப்பற்றி எடைபோடாமல், அவர்கள் பேசஇருக்கும் பொருளைப்பற்றித்தான் சிந்திக்கவேண்டும். எல்லோரும் சிறந்தபேச்சாளர்கள் ஆகிவிட முடியாது. ஆகவே சிறந்தபேச்சாளராகவும் இருந்து, பேசுகின்ற அப்பொருளும் சிறந்த பொருளாக அமைந்தால், அது ரொம்ப விசேஷம். தாடகையின்மீது இராமபிரான் விட்ட அந்த அம்பு அவள் மார்பைத் துளைத்துக்கொண்டு எப்படி வெளிச்சென்றதோ, அதுபோல் ஒரு காதால் கேட்டு, இன்னெரு காதால் விட்டுவிடுவது கூடாது. கேட்பதை நன்கு கேட்டு, மனதில் வாங்கிக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால், புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள்போல ஆகிவிடும்.

ஒரு பொருளைச் சொல்கிறவர் ஆசான். கேட்கிறவன் மாணவன். ஆக இரண்டு பேர். சொல்கிறவர்களைப் பருந்துக்கு உதாரணமாகக் கொள்ளலாம். கேட்கிறவர்களை நிழலுக்கு உதாரணமாகக் கொள்ளலாம். அதே போல் இயலும், இசையும் ஒப்பிடலாம். இந்த இரண்டும் ஒன்றுசேரும்போதுதான் நாடகம் உண்டாகின்றது. அதுபோலவே, கேட்பவர்களின்விருப்பத்திற்குத் தகுந்தாற்போல்தான், சொல்லிக் கொடுக்கிறவருக்கு ஆசையும் ஏற்படும். பணம் கொடுத்து விடுவதால் மட்டும் சொல்லிக் கொடுக்கிற ஆசிரியருக்கு ஆசையை உண்டாக்கிவிட முடியாது. ஏழை மாணவனுக இருந்தாலுங் கூட, அவன் பாடம் கேட்டுக்கொள்ளும் விதத்திலே இருந்தால் ஆசிரியருக்குத் தனி விருப்பம் ஏற்படும். அப்போதுதான் அவனுக்குச் சொல்லிக் கொடுப்பதைப் பார்க்கலாம். ஆசிரியர் தன்னுடைய அறிவையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கிவைத்துவிட்டு, எப்படி மாணவன் நிலைக்கு இறங்கிவந்து, அவனுடைய நிலையிலேயே நின்று சொல்லிக் கொடுக்கின்ருர் என்பதை ஆர்வத்தோடு பாடம் கேட்கும் மாணவன் விஷயத்தில் காண்பதை நாம் மனதிலே நன்ருகப் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். சிறந்த கல்விஞானம் உள்ளவர்கள் கிடைக்கமாட்டார்கள். கேள்விஞானம் உள்ள மக்களுடைய அருள்வாக்குகளை நன்கு கேட்கவேண்டும். அவர்களை நன்கு படிக்கும்படிச் செய்து கேட்கவேண்டும். இப்படிப் பழங்காலத்தில் பற்பல அரசர்கள், பிரபுக்கள் இருந்திருக்கிருர்கள். நல்ல கல்விஞானமுள்ளவர்களைத் தங்களது சபையிலே வைத்துக்கொண்டு அவர்கள்வாயிலாகக் கேட்டுப் பயனடைவார்கள். திருமூலர் சொல்லுகிருர் :

*அறம் கேட்டும்அந்தணர் வாய்மொழி கேட்டும்*
*மறம் கேட்டும் வானவர் மந்திரம் கேட்டும்*
*புறம் கேட்டும் பொன்னுரை மேனிஎம் ஈசன்*
*திறம் கேட்டும் பெற்ற சிவகதி தானே.*

இம்மாதிரி இருந்தால் சிவகதி விளையுமென்று அப்பர்சொல்கிருர். இப்படிப்பட்ட கேள்விஞானத்தை அனுபவம் பெற்றவர்களுடைய வாயிலாகக் கேட்பது மிகவும் நல்லது. எப்படி பி. ஏ. பட்டத்தை ஏழு வயது சிறுவன் திடீரென்று அடைய முடியாதோ அதேபோல நல்ல கேள்விஞானத்தைப் பெறவேண்டுமானுல் அன்பு முதிர்ச்சி பெற்றவர்களுடைய வாயிலாகக்

கேட்பதே நல்லது. இப்படிப்பட்டவர்கள் வாயிலாக நாம் சிவஞான அனுபவத்தைக் கேட்டால் சிவகதி கிடைக்கும். அதை எப்படிக் கேட்கவேண்டும்?

செவிகாள் கேண்மின்களோ - சிவன்
எம்இறை செம்பவள
எரிபோல் மேனிப்பிரான் திறம் எப்போதும்
செவிகாள் கேண்மின்களோ.

அதாவது, நம்முடைய செவிகளில் நன்கு வாங்கி, தேக்கி வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லுகிறார். அப்படியானால், கேட்பதோடு நில்லாமல் அவைகளை நன்கு உணரவும் வேண்டும். இதை "உலகெலாம் உணர்ந்து" என்று சொல்வதிலேயிருந்து நாம் புரிந்துகொள்ளலாம். இப்படி உணர்ந்து ஒருபொருளைக் கேட்கும்போது, உயிரும் உடலும் எப்படி ஒன்றுபடுகிறதோ அதுபோல் நம்முடைய வாழ்க்கையில் இந்நிலைகளைவைத்து வாழவேண்டுமென்ற ஒரு சிறந்த குறிக்கோளைக் கூறுகிறது. இப்படியிருக்கக்கூடியவர்கட்குச் சிவன் உறுதுணையாக நிற்பார் என்று கூறுகிறார். அதாவது, மீண்டும் பிறவாநெறி நமக்கு அருளப்படும். இப்படி சிறந்தவற்றைக் கேட்டு, சிந்தித்து அமைவதாலே, இத்துணை நன்மைகள் நமக்குக் கிடைக்கின்றன என்று சொல்லியிருக்கிறார். இப்படிப்பட்ட சிறந்த ஒரு கருத்துள்ள பொருளை விளக்கும்வகையிலே ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுத்த, குருமகா சந்நிதானம் அவர்களுக்கு என்னுடைய நன்றியை மீண்டும் தெரிவித்துக்கொண்டு, அவர்களுடைய திருவடிகளுக்கு எனது வணக்கத்தைச் செலுத்திக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே.

— திருமூலர்.

'கல்லாமை'

திரு. அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள், M. A..
சென்னை.

ஸ்ரீ நமசிவாயப்பெருமானின் திருவடிகளுக்கும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் பொன்னார் திருவடிகளுக்கும் வணக்கம். பெரியோர்களாகிய உங்களுக்கும் எனது வணக்கத்தைத் தெரிவித்து ஒருசிலவற்றைப் பேச நிற்கின்றேன்.

'பெறுவான் தவம்' என்று பெரியோர்கள் சொல்லுவதுண்டு. இவ்வளவு பெரிய திருமந்திர நூலில் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள தலைப்பை நினைக்கும்போதெல்லாம் உண்மையாகவே என்மனம் வியப்பு அடைகின்றது. குருமகாசந்நிதானம் அவர்கள் மிக நன்றாக ஆராய்ந்து, இவனுக்கு இதுவே பொருத்தமானது என்று கருதிப்போலும் இந்த அழகான தலைப்பை எனக்குத் தந்துள்ளார்கள். உண்மையிலேயே பல இடங்களிலும் சுற்றிவந்த பிறகு, கல்வியைக் காட்டிலும் மிக ஆபத்தானது வேறு ஒன்றும் இல்லை என்ற முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. பல சமயங்களில், கல்லாத பேர்களே மிகவும் நல்லவர்கள் என்று தாயுமானவர் சொன்னது எவ்வளவு பொருத்தமுடையது என்று சிந்திக்கவேண்டியிருக்கிறது. என்ன காரணத்தாலோ கல்வி என்பதற்கு மாணிக்க வாசகர் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்று கருதிவிட்டார். இப்படியாக நாம் நினைந்து பார்க்கும்பொழுது, இக்கல்வியைக் காட்டிலும் கல்லாமை தேவலையோ என்று நினைக்க நம்மை அறியாமலே நமது உள் எண்ணம் தூண்டுகிறது. காரணம் எதுவாயிருத்தல்கூடும் என்று பலகாலம் சிந்திக்கும் போதுதான் கல்லாமையினுடைய சிறப்பை நாம் நன்றாக அறிகிறோம். வயிறு மிக மிக இன்றியமையாததாக மனிதனுக்கு இருப்பினுங்கூட, மனிதன் அதுபற்றிச்சிந்திப்பதே இல்லை. ஆனால், வயிற்று வலி வருகின்ற போது வயிற்றை நினைப்பதுபோல், கல்வியினால் ஏற்படும் தொல்லையை அனுபவிக்கும்போதுதான் இந்தக் கல்வியும் நமக்குத் தேவையோ என்று நம்மையும் அறியாமல் நாம் நினைக்கின்றோம்.

இதுவரையில் உலகம் இந்தக் கல்வி என்ற சொல்லினால் எந்தப்பொருளைக் கருதி வந்ததோ, பெரும்பாலும் அந்தப் பொருளினையே நாம் மனதில் வாங்கிக்கொண்ட காரணத்தினால்தான் கல்வி அல்லாத ஒன்றைக் கல்வியாகக் கருதிக்கொண்டு, பொருளல்லாத ஒன்றைப் பொருளாகக் கருதிக்கொண்டு, இப்படியெல்லாம் அறிவினால் உந்தப்பட்டு அல்லலுக்கு உள்ளாகிறோம். மனிதனுடைய அறிவுவளர்ச்சியின் அடிப்படையிலே இருப்பது கல்வி என நினைத்து மேல்நாடுகள், அந்தக் கல்வியின் பயனை இன்று மனிதனை மனிதன் அழிக்கக்கூடிய ஒரு சக்தியை மிக விரைவில் தேடிக்கொண்டிருக்கிறது. அவற்றையெல்லாம் நினைந்து பார்க்கின்றோம் ஒருபுறம். இனிக் கீழை நாட்டுப்புறங்களைப் பார்த்தால் அங்கேயும் அறிவின்வழி சென்று அறிவு ஒளிவீசித் திகழக் காண்கின்றோம். அறிவு ஒளிவீசித் திகழ்ந்தாலும், அந்த அறிவினால் உண்மைப் பயன் ஏற்படாது என்று நாம் சிந்தித்துப் பார்க்கும்போது மறுபடியும் தாயுமானவர் நினைவுக்கு வருகிறார்.

இந்த முறையிலே இன்றைய உலகில் ஒருவரையொருவர் தோல்வியடையச் செய்யக்கூடிய அளவக்குக் கல்வியின்மேம்பாடு இருக்கிறதே தவிர - இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் ஒருபெரியவர் கூறிச்சென்றாரே



திரு. ஞானசம்பந்தம் விரிவுரை நிகழ்த்துகிறார்

'கற்பவை கற்க' என்று. அதிலிருந்து 'கற்க' என்ற ஒரு பகுதியைத்தான் இன்றைய உலகம் எடுத்துக்கொண்டதேதவிர, அதற்கு முன்னாலே இருக்கின்ற 'கற்பவை' என்ற சொல்லை என்ன காரணத்தாலோ மறந்து நிற்கக் காண்கின்றோம். கற்கவேண்டுவன வற்றைக் கற்கவேண்டுமேதவிர, கற்கவேண் டாதனவற்றையெல்லாம் நன்றாகக் கற்று, அதனாலே எஞ்சிய 'ஆணவம்' ஒன்றேவிளங் கக் காணுகிறோம். இதை நினைந்து பார்க் கின்றார் கருணை வள்ளலாகிய திருமூலர். அதுபோல் திருவள்ளுவரும் நினைந்து பார்க் கிறார். 'கல்வி' என்ற அதிகாரம் அமைத்து, அதன்பின், 'கல்லாமை' என்னும் அதிகா ரத்தை வள்ளுவப் பெருந்தகை வைத்துள் ளார். கல்வியினால் ஏற்படும் நன்மையையும் கல்லாமையினால் ஏற்படும் துன்பத்தையும் சொன்னார். ஆனால், இங்கே திருமூலர் கல்வி யைப்பற்றிச் சொல்லி, அதன் பின்பு 'கேள்வி கேட்டு அமைதல்' என்ற தலைப்பைவைத்து அதன்பிறகு கல்லாமையைப்பற்றிப் பேச வேண்டிய ஒற்றுமை என்ன என்று சிந்தித் துப் பார்க்கவேண்டும். இதற்குத் திறவு கோல் வள்ளுவரிடத்தில் காணப்படுகிறது. 'துறவு'க்குப்பின் 'அவா அறுத்தலை' வைத் திருக்கிறார். பரிமேலழகருக்குச் சந்தேகம் வருகின்றது. எல்லாவற்றையுமே துறக்க வேண்டுமென்று சொன்னபிறகு, அவா அறுத்தல் என்ற ஒரு அதிகாரம் எப்படி ஏற்பட்டது என்று சிந்திக்கிறார். "வேதனை பற்றி ஒரோவழித் துறக்கப்பட்ட புலன்க ளின்மேற் பழைய பயிற்சிவயத்தான் நினைவு செல்லுமன்றே; அந்நினைவும்பிறவிக்கு வித்தா மாதலின் அதனை இடைவிடாது மெய்ப் பொருளுணர்வான் அறுத்தல்" என்று ஒப்பு உயர்வு அற்றமுறையில் அதிகாரத்தொடர்பு காட்டி எழுதினார். இப்படிப்பட்ட பெரிய வர்களுடைய உரைகளைக் கண்டாலொழிய நம்மால் பேருண்மைகளைக் காணமுடியாது. அந்த உண்மையை வாங்கிக்கொண்டால், கல்வியின் பின்னர் - கேள்விகேட்டு அமைத லின் பின்னர் - கல்லாமையை வைத்ததன் சிறப்பை நாம் நன்கு அறிவோம். இன்று வரையில் என்ன நினைக்கின்றோம்? கல்வி சாதனமாகும் என்பதைவிட்டு அதனையே முடிந்தமுடிபாக நினைந்துவிடுகிற தவற்றை உலகம் செய்துவருகிறது.

இருபதாவது நூற்றாண்டு விஞ்ஞானி வருந்துகிறான். வழியை வைத்துக்கொண்டு, அதையே பயனாக நினைந்து உலகம் வாடுகிற அந்தத் தொல்லை நம்முடைய நாட்டிலே தோன்றுகிறது. கல்வியானது ஒரு வழியாக அமையுமே தவிர, கல்வியே பயன் ஆகாது. பலர் என்ன நினைத்துவிடுகிறார்கள்? கல்வியே பயனாகக் கருதிவிட்டார்கள். மாடியில் ஏற வேண்டும் என்றால், நாம் படிப்படியாக ஏறிச்செல்லவேண்டும். ஆனால், படியையே மாடியாகக் கருதக்கூடிய அளவுக்கு மனித னுடைய அறிவு வளர்ந்துவந்துவிடுமானால், நாம் வருத்தப்படவேண்டுமே அல்லாமல் வேறு ஒன்றுமில்லை. கல்வியானது அறிவு விளக்கம் தருவதற்கு அமைகின்ற வழியே தவிர, கல்வியே பயனாக இந்த நாட்டவர்கள் என்றைக்கும் கருதினதே இல்லை. ஒருசிலர் அங்ஙனம் நினைத்த காரணத்தால் நம் பெரிய வர்கள் உள்ளம் வருந்தி 'கற்றாரை யான் வேண்டேன்' என்று சொல்லிவிட்டார்கள். கல்வியால் ஏற்பட்ட அல்லலை நினைந்தார். அதை வழியாகக்கொண்டு மேலே செல்லு வதைவிட்டு அதையே பயனாகக் கருதிய அந்தச் சூழ்நிலையில் நம்முடைய பெரியவர் கள் தோன்றி, 'நீ நினைப்பது தவறு; முழு முதல் பொருளாகிய பயனை அடைவதற்கு ஒரு வழி இது' என்ற ஒரு பேருண்மையை உணர்த்தினார்கள். அந்த வரிசையில் முதல் படியிலே நிற்கின்றார் கண்ணப்பர். கல்வி வாசனை இல்லாத குடும்பத்தில் பிறந்தவர். கொல், எறி என்று சொல்லிப் பழகிய குடும் பத்தில் வந்தவர். ஆனால், நாம் இங்கே 'கண்ணப்பர்' என்று சொன்னவுடனேயே கல்வி வாசனை இல்லாதவர் என்ற நினைவு நமக்கு வரமுடியாது. பெரியவர் ஒருவர் 'கலை மலிந்த சீர்நம்பி' என்று - கல்வியின்

பயனாக இருக்கும் கலைஞானம் நிரம்பப் பெற்றவர் என்று அவருக்கு அடைமொழி தருகிறார். எனவே கல்வி, கலைஞானத்தைத் தருமானால் அது சிறந்த வழியாக, பயன் தருகிற வழியாக அமையுமேதவிர, வேறாக இருக்கமுடியாது. அப்படி இல்லாவிட்டால் அது முட்டுக்கட்டையாய்விடும். இந்தப் பேருண்மையை அறிவுறுத்துவதற்காகவே 'கல்வி' என்ற அதிகாரத்தை வைத்தபின், 'கேள்வி கேட்டு அமைதல்' என்ற அதிகாரத்தை வைத்து, அதன்பின் 'கல்லாமை' என்ற இந்த அதிகாரத்தை வைத்திருக்கிறார் திருமூலர். முதல் பாட்டில், முதல் அடியிலேயே இந்த ஒரு பேருண்மையைச் சொல்லிவிடுகிறார்.

கல்லாதவரும் கருத்தறி காட்சியை.

சாண் ஏட்டிலே கற்கும் கல்வி இருக்கிறதே; இது இல்லாதவர்கள்கூட கருத்தறி காட்சியைக் காணுதல் கூடும். கண்டார்களா? என்றால், கண்ணப்பர் வரலாறு நிற்கிறது. நாம் நினைக்கின்றோம், இந்தக் கல்வியை வைத்துக்கொண்டுதான் ஒருவன் இம்மை மட்டுமல்ல, இதற்கு அப்பாலிருக்கும் உண்மைப்பொருளையும் அறியமுடியும் என்று. இந்தவழி அல்லாமல் வேறு உண்டு. அதைத்தான் ஞானசம்பந்தப்பெருமானின் வரலாற்றில் வைத்துக்காட்டுகிறார். உணர்வரிய கலைஞானத்தை அறிய வேண்டும். அந்த இடத்தை அடையவேண்டியதுதான் முக்கியம். அடைவதற்கு வேண்டிய வழி முக்கியமானது அன்று. பொருளை அடைகின்றதாகிய பயனுக்குக் கல்வி ஒருசாதனம். இந்த வழியை விட்டுவிட்டு, கல்வியைக் கற்ற மாத்திரத்திலே தலை வீங்கிவிட்டால் - அறிவில் மேம்பட்டுவிட்டோம் என்ற எண்ணம் வந்துவிட்டால் கல்வியால் வரும்பயனை அடையாமல் போவதுமட்டும் அல்லாமல் அவன் ஏழேழு ஜன்மாக்களிலும் அடைய முடியாதபடி கல்வியே கட்டித் தொங்க விடப்பட்ட கல் ஆகும். "கல்வி என்னும் பல் கடல்" என்று சொல்லுவார்கள்.

கடலுக்குக் கடல் வேற்றுமை. கருங் கடல் என்னும் கடலில் யாதொரு கஷ்டமுமில்லாமல் நீந்திக்கொண்டு செல்லலாம். அந்தக்கடலில் நீந்தும்முறை வேறு. அது போல், பரந்துநிற்கும் உலகத்திலே இந்தக் கல்வி தேவையா? அந்தக்கல்வி தேவையா? என்று தேடி அலைந்து, ஏதோ ஒன்றைப் பெற்றுக்கொண்டு, அந்த இன்பத்திலேயே அமர்ந்துவிடுகிறார்கள் சிலர். அந்த இன்பத்திலே அமர்ந்துவிடுவதால் ஏற்படும் கஷ்டம் இரண்டு வகைப்படும். அதனை வழியாகக் கொண்டு அடையவேண்டியபயனை விட்டுவிட்டார்கள் என்பது ஒருபக்கம். கல்வி அழிந்து விட்டதே என்பது மறுபக்கம். ஆகவே, கல்லாமையிலே திருமூலர் சொல்ல வந்த மிகமிக முக்கியமான கருத்து என்னவென்றால் கற்கவேண்டியவற்றைக் கற்க வேண்டுமே தவிர, அல்லாதவற்றைக் கல்வி என்று கருதி, உமி குத்திக் கைநொந்தது போல் ஆக்கிக்கொள்ளவேண்டாமென்பது.

கற்றவன் என்னநினைக்கிறான் என்றால், என்னை அல்லாத யாரும் காணமுடியாது என்று இறுமாந்துநிற்கிறான். அது கூடாது. முழுமுதற் பொருளைக் காண, யான் எனது என்கின்ற செறுக்கை அழிக்க வேண்டும். ஆணவம் போவதற்குக் கல்வி தேவை. ஆணவத்தைப் போக்க, கல்விக்கடலிலே நீந்தத்தொடங்கினவன் ஆணவவடிவமாக ஆகிவிடுவானானால், குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்டவனாக ஆகிறான். ஆணவம் போக்கக் கல்வி கற்கப்போனவன் ஆணவ வடிவமாக ஆகிவிட்டால் என்ன பயன்? ஆகவேதான்,

கற்றோரும்
கல்லாதார் இன்பம் காணுகிலாரே

என்று கற்றோர்களுக்கு அடிகொடுக்கிறார். கல்லுதல் என்றால் தோண்டுதல் என்று பொருள். தோண்டுதலினால் வரும் பயன் நீரைப் பருகுதல். அதுபோல், கல்வியினால் வரும் பயன் கருத்தால் அறியவேண்டிய

காட்சியை அடைதல். நம் தமிழ் நாட்டில் கடவுள்பெயரால் அதைச்சொல்லிவைத்தார் கள். 'கற்பனை கடந்த ஜோதி' என்று கடவுளைப்பற்றிச் சொல்லி இருக்கிறார்கள். 'கடவுள்' என்றால் இதுதான் என்று வாக்கி னாலும் மனத்தினாலும் ஒரு பொருளைச் சுட்டிக்காட்டலாமே தவிர, அதனைக்கடந்து நிற்கின்ற பேரறிவு படைத்தவன் அவன் ஆகையால், முதல்பாட்டிலே முதலடியில்,

கல்லாதவரும் கருத்தறி காட்சியை

என்றார். கண்ணப்பருடைய வரலாற்றைப் பார்க்கின்றோம். அந்த வரலாறு முழுவதி லும் கல்விக்கு இடமே இல்லாததைப் பார்க் கிறோம். கல்வியின் வடிவமாகச் சிவகோ சரியார் நிற்கிறார். எல்லையில்லாத கல்வியை, காணமுடியாத காட்சியை, கல்வி என்ப தைக் கற்காத கண்ணப்பர் ஆறு நாட்களில் கற்றுவிட்டார். திருமூலர் காட்டிய இலக் கணத்திற்குக் கண்ணப்பருடைய வாழ்க்கை இலக்கியம் ஆகும். கலைஞான எல்லையை எட்டிய திருஞானசம்பந்தப் பெருமானைப் பற்றியும் திண்ணனுருடைய வாழ்க்கையை யும் சேக்கிழார் சுவாமிகள் ஒத்திட்டுப் பார்க்கிறார். இரண்டுபேர்களும் கலைஞான வடிவுகொண்டு இருக்கிறார்கள். இரண்டு காட்சியையும் பார்க்கின்றார் சேக்கிழார் சுவாமிகள், இரண்டையும் நமக்குக் காட்டு கிறார். கல்லாதவரும் கருத்தறிகாட்சியைக் காணுதல்கூடும் என்பதை நமக்கு அவர் காட்டுகிறார்.

இரண்டாவதாக, உணர்வில் திண்மை வேண்டும். இது கல்வியால் நிரம்பியவர்க்கு இல்லாமல்போய்விடுகிறது என்ற பேருண் மையைப் பலகாலம் உணர்ந்திருக்கிறோம். எவ்வளவோ பெரிய தத்துவத்தையெல்லாம் எடுத்து, தங்கள் திறம்கொண்டு விளக்கிய ஆதிசங்கரர் - உலகத்தையெல்லாம் உய்யச் செய்த ஆதிசங்கரர், கடைசியில் மனதைப் பார்த்துச் சொல்லுகின்றபோது, ஆராய்ச்சி யினாலே பயன் ஏற்படப்போவது இல்லை என்று பஜகோவிந்தம் பாடி முடித்தார். குவிகின்ற நிலைவேண்டும். குவியவேண்டு மானால், 'பஜகோவிந்தம்' செய்யவேண்டும் என்கிறார். அதை நினைந்துபார்க்கும்போது கல்லாதவருங்கூடக் கருத்தறி காட்சியைக் காணுதல்கூடும்.

கற்றவர்கள், 'கல்வி கற்றுவிட்டேன்; விடிவே கிடையாதா ?' என்று கேட்பது போல் தாயுமானசுவாமிகள் சொல்லுகிறார் திருமூலரும் அதைத்தான் சொல்லுகிறார். 'நான்' என்ற ஒன்றை அழித்துவிட்டேன்; எல்லாம் ஆண்டவனாகக்காணும் காட்சி ஏற்பட்டுவிட்டால் அப்பொழுது கவலையே கிடையாது என்பதாக இராமகிருஷ்ணர் சொல்லுகிறார். 'நான்' அழிந்த நிலையில் பார்க்கும்போது, எங்கும் சிதம்பரமாகக் காணும்காட்சியைக் காண்கிறோம். இங்கே கல்லாமையைப்பற்றிச் சொல்ல வந்தவர், ஏதோ ஒன்றைக் கல்வி என்று நினைத்துக் கொண்டு உலகம் திண்டாடுகிறதே என்று இதை அறிவுறுத்துகிறார் திருமூலர். மற்ற பகுதிகளைவிட கல்லாமை என்ற பகுதியை முக்கியமாக வைத்தார். உலகம் கல்வியினா லேதான் திண்டாடிக்கொண்டிருக்கிறது. அது உண்மையை அறியமுடியாதுபோவது மட்டுமல்ல; உண்மை அல்லாதவற்றைப் பொருள் என்று உணர்ந்துகொள்ளுகிறது. அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் கோபம் வருகிறது ;கல்லாதமூடரைவிடக் கல்லாதார் நல்லவர் என்று கூறுகிறார். உண்மையான கல்வியைக் கல்லாதவர்கள் மூடர்களே. இரண்டாவது 'கல்லாதவர்' எழுத்தறிவு இல்லாதவர்கள். கற்ற மூடர்கள் என்பவர் கள், கல்வி என்று நினைத்து 'நான்' என்று இறுமாந்து இருக்கும் மூடர்கள். இந்தத் தெய்வத்திற்கு என்னைக் காக்கும் சக்தி உண்டா ? என்பது போன்ற சந்தேகம் வந்துவிடும் இம்மூடர்களுக்கு. எத்தனையோ கோடி உயிர்கள் இருக்கும் இவ்வுலகத்தில் என்னைக் காக்க இந்த ஆண்டவனுக்கு நேரம் எங்கே இருக்கிறது ? என்றெல்லாம்

சந்தேகம் வந்துவிடக்கூடும். கல்லாதவனைப் பொறுத்தவரையில் இத்தகைய சந்தேகமே கிடையாது. அவன் உறுதியாக நம்புகிறான். ஆகவே ஆண்டவன் இருக்கிறான் என்பது நம்பிக்கையின் அடிப்படையிலே வந்தது. நம் ஆண்டவனுக்கு இலக்கணம் வகுத்த மணிவாசகப்பெருமான் குயிலைப் பார்த்துச் சொல்கிறார்; வண்டைப்பார்த்துச் சொல்லுகிறார். மனிதனைத் திருத்தமுடியாது என்ற முடிவுக்கு அவர் வந்துவிட்டார்போலும். அதனாலேதான் வண்டையும் குயிலையும் பார்த்துப் பாடுகிறார்போலும். ஆகவேதான், கல்லாத மூடரைக் காட்டிலும் கல்லாதவர்கள் நல்லவர்கள் என்று சொல்கிறார். கல்வி அல்லாத ஒன்றைக் கல்வி என்று நினைத்துக்கொண்டிருப்பவர்கள் சுட்டமண் போன்றவர்கள்.

'கற்பவை கற்க'. கற்பவை என்றால் என்ன? எந்தக் கல்வி? பிறவி நீங்குவதற்குப் பயன்படுகிற அந்தக் கல்வி. இந்தப் பிறவிப் பெருங்கடலை நீந்துவதற்குத் தடைப்படாத கல்வி எதுவோ அதுதான் கல்வி. ஆனால், கல்வி அல்லாத ஒன்றைக் கல்வி என்று நினைந்து உலகம் சென்றுகொண்டிருக்கிறது. திருமூலர் முதல்பாட்டிலே முதல்வரியிலே சொல்லியிருக்கிறார். கருத்தறி காட்சியைக் காணுவதுதான் கல்வி என்று. 'கல்லாமை' என்கிற அதிகாரத்தில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன. இந்தப் பத்துப்பாடல்களில் முதலாவது பாட்டிலே, முதல்வரியிலேயே வியாக்கியானம் செய்துவிடுகிறார். பயனை அடைவதற்கு வழி கல்வி. அதுதான் உண்மையான கல்வி என்று சொல்லப்படும். பயனைத் தராத ஒன்றைக் கல்வி என்று நினைந்து ஏமாந்து அகங்காரம் கொண்டிருக்கிற உலகை நோக்கி அந்தப் பெருமகன் கூறுகிறார். கருத்தால் அறிவொளிக் காட்சியைக் கல்லாதவர்களும் காணுதல் கூடும். கல்வி என்று சொல்லக்கூடியதன் பொருள் எது? எது அவனைப்பற்றி அறிவுறுத்துமோ அதுதான் கல்வி. முழுமுதற் கடவுளைப்பற்றிப் பேசுகிறது கல்வி; அல்லாதது கல்வியின்பாற்படாதது என்ற பேருண்மையை, கல்லாமை அதிகாரத்தில் பேசுகிறார்.

ஒரே வரியிலே ஒரு பேருண்மையை விளக்க முடியும். அதை அறிந்துகொள்வதற்கு ஆற்றல் உள்ளவர்கட்குக் கூறியிருக்கிறார். அல்லாதவர்கள் எத்தனை ஆண்டுகள் பழகினாலும் பயன் ஏற்படப்போவதில்லை. எங்கோ ஏதேதோ பணியில் ஈடுபட்டிருக்கும் என்னை இங்கேவந்து 'கல்லாமை' என்ற அதிகாரத்தைப்பற்றி நான் நினைத்துக்கொண்டிருந்த நினைவையெல்லாம் கூறும்படிச் செய்த குருமகாசந்நிதானம் அவர்களுக்கும் நமசிவாயமூர்த்தியின் திருவருளுக்கும் என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து*
*நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்*
*எல்லா வுயிர்க்கும் இறைவனே யாயினுங்*
*கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே.*

*— திருமூலர்.*

## 'நடுவுநிலைமை'

பேராசிரியர்,

**திரு. கோ. சுப்பிரமணியபிள்ளை அவர்கள்,** M.A., B.L.,

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

'நடுவுநிலைமை' என்ற இத்தலைப்பு சில சுவடிகளில் 'நடுவுநில்லாமை' என்று காணப் படுகிறது. இதற்குரிய செய்யுட்கள் நான்கு. முதற்செய்யுளை நோக்கின், நடுவுநில்லாமை என்ற தலைப்பே சாலும் என்பதுதெளிவாம். முதற் செய்யுளின் முதலில் 'நடுவு நின்றார்க் கன்றி ஞானமும் இல்லை' எனவந்துள்ளது.

திருக்குறளில் பன்னிரண்டாவது அதிகாரம் நடுவுநிலைமையைப்பற்றிக் கூறுகிறது. "பகை நொதுமல் நண்பென்னும் மூன்று பகுதியினும் அறத்தின் வழுவாது ஒப்ப நிற்கும் நிலைமை" என்று பரிமேலழகர் நடுவுநிலைமையை விளக்கி எழுதுகின்றார். அதாவது பகைவர், நொதுமலர் (அயலார்), நண்பர் ஆகிய மூவர்மாட்டும் விருப்பு வெறுப்பின்றி ஒப்பநிற்றலே நடுவுநிலைமை யாகும். இந்த அறம் உலகியல்நெறியை நோக்கியதாய் இல்லறத்தின் வழியில் ஒழுகுவார்க்குரிய பலவகையான அறங்களுள் ஒன்றும். இதனைத் தகுதி, செப்பம் என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார். இவ்வறம் உலக மக்கள் அனைவர்மாட்டும், சிறப்பாக உயர் அதிகாரிகளிடத்தும், அறங்கூறவையத்தாரிடத்தும், வணிகர்களிடத்தும் இருக்க வேண்டியதொன்று. ஆயினும் இந்த அறம் இப்பொழுது முயற்கொம்பாகவே இருக்கிறது. அதற்குக் காரணம் யாது எனில், ஒவ்வொருவரும் பிறரிடம் நடுவு நிலைமை திகழ்வதைக் காண விழைகின்றனரேயன்றி, அது தாங்களும் கையாளவேண்டிய அறம் என்பதை மட்டும் மறந்துவிடுகின்றனர். நடுவுநிற்றலைக் கனவிலும் தாங்கள் கருதுவதில்லை. பிறர் அவ்வாறு நடக்கவில்லையே என்று குறைபட்டுக் கொள்ளுகின்றனர். தகுதியுடன் நேர்மையாய் நின்று உள்ளதை உள்ளவாறு கூறுவதற்கும் செயற்படுத்துதற்கும் செம்மையான மனமும், உறுதிப்பாடும், அஞ்சாமையும், ஆசையின்மையும் வேண்டும்.

> சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
> உட்கோட்ட மின்மை பெறின்.

இது திருக்குறள். தனக்குக் கேடுவருவதாயிருந்தாலும், ஆக்கம் வருதாயிருந்தாலும் நடுவு நிலைமையினின்று ஒருவன் தவறக் கூடாது. நமது வாழ்க்கையில் நன்மையும் தீமையும் வருவது இயற்கை. அதை நாம் நேர் நின்று சரிக்கட்டவேண்டுமே தவிர, அதற்காகக் கோணல் வழிகளிலே செல்லலாகாது. நடுவுநிலைமையைக் கைவிடுதலுமாகாது.

> கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
> கோடாமை சான்றோர்க் கணி.

ஏறச்சொன்னால் எருதுக்குக் கோபம்; இறங்கச்சொன்னால் முடவனுக்குக்கோபம்; நமக்கென்ன? என்று நடுவு நிலைமையில் நில்லாது உலகம் எளிதில் மாறிவிடும். சிலர் பேச்சில் தெளிவும் நீதியும் இருக்கமாட்டா. சிலர் ஒருதலைப்பக்கமாகவே கோணிநின்று பேசுவர். பாம்பும் சாகக்கூடாது கோலும் முறியக்கூடாது என்று சிலர் மசமசப்பாய் இருந்துவிடுவார்கள்.

அறத்தின் படியான உண்மையைக் கூறுவதற்கு அஞ்சுவார்கள். இத்தகைய விளக்கெண்ணெய்க் கொள்கைகள் நடுவு நிலைமை ஆகாது. வாணிகத்துறையிலே நடக்கும் திருட்டுக்கள் எல்லாம் நடுவு நிலைமைக்கு மாறானவை.

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம்பேணிப்
பிறவும் தமபோற் செயின்.

ஒரு தராசில் படியைப் போட்டுப் பொருளை வைத்து நிறுப்பதற்கு முன்னர் வெறுந்தட்டுக்களைச் சமன்செய்து காட்டி, பின்னரே நிறுக்கத் தொடங்கவேண்டும் என்கிறார் திருவள்ளுவர். 'சமன் செய்து சீர் தூக்குங் கோல்' என்கிறார். சில தராசுகளின் முள் அங்குமிங்கும் அசையாது ஒரு படித்தாயே நின்று மக்களை ஏமாற்றிவிடும். அத்தகைய தராசுகளைவைத்து வியாபாரிகள் மக்களை ஏமாற்றக்கூடாது. கொள்வதூஉம் மிகைபடாது கொடுப்பதூஉம் குறைபடாது வாணிகம் செய்தாலே வாணிகர்கள் ஊதியம் அடைவார்கள் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். நடுவுநிலைமையைக்கடந்து பொருளீட்டினால் அப்பொருள் பின்வரும் சந்ததிகளுக்கு நன்மையைத் தராது ஒழிந்து விடும் என்று எச்சரிக்கிறார் திருவள்ளுவர்.

உலகில் மக்கள் தங்களுக்கு நல்லது ஒன்று நிகழவேண்டும் என்று எதிர்பார்த்து அது நிகழாதுபோனால், அது யாராவது பிறர் ஒருவருடைய கோடியசெயலால் நிகழ்ந்தது என்று நொந்துகொள்ளுவது வழக்கம். தம் வாழ்க்கையில் என்றும் தோல்வியையே கண்ட பலர் கடவுளையும் நடுவு நிலைமை இல்லாத கெடுநிலைக்காரன் என்று திட்டுவது உண்டு. புறநானூற்றிலே பக்குடுக்கை நன் கணியார் என்னும் புலவர் பாடிய பாடல் ஒன்றை இங்கே நினைந்து காணலாம்.

ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்
படைத்தோன் மன்ற அப் பண்பி லாளன்
இன்னு தம்ம இவ்வுலகம்
இனிய காண்கிந னியல்புணர்ந் தோரே.

திருப்பெருந்துறையில் அடியார்களோடு தம்மையும் கூட்டிச் செல்லாது இறைவன் விட்டுச் சென்றதை நினைத்து நினைத்து உருகியழுத மாணிக்கவாசகசுவாமிகள், அது இறைவனது நடுநிலையிகந்த செயல் என்றும், அவ்வாறு செய்தது நல்லதாகுமா என்றும் வருந்திப் பாடிய பாடல் கல்லையும் கரையச் செய்வதாகும்.

கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடிலாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவதெல்லா நான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே.

ஏழை பங்காளனாகிய சிவபெருமான் அம்பலத்தில் நின்று அருள்நடனம் புரிவது இன்னார் இனியார்க்கு என்று இல்லாமல் அனைத்துயிர்களும் பேரின்பம் பெறவேண்டியே நடுவுநிலையாய்ப் பொதுவாக நின்று ஆடுகின்றான் என்பர்.

ஆதியாய் நடுவுமாகி
யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித்
தோன்றிய பொருளுமாகிப்
பேதியா வேகமாகிப்
பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப்
பொதுநடம் போற்றி போற்றி.

திருமந்திரத்துள் வரும் நடுவு நிலைமை என்னும் அதிகாரமானது வீட்டுநெறியை நோக்கியதாய்த் துறவறத்தில் நின்று வீடுபேற்றை விழைபவற்குரிய சாதனங்கள் பல வற்றுள்ளும் யோகநெறியைப்பற்றியதாம். நம் உடம்பின்கண் உள்ள நாடிகள் 21,000. அவற்றுள் சிறந்தவை பத்து. தசநாடி என்ப. அவற்றுள்ளும் சிறந்தவை மூன்று. அவை யாவன: இடைநாடி, பிங்கலை நாடி, சுழுமுனை நாடி என்பன. இவற்றுள்ளும் சிறந்தது சுழுமுனை நாடியே. ஏனெனில், பேரின்பத்தைப் பெறுவதற்கு உரிய நாடி இதுவேயாகும். குண்டலிசத்தியின் விளக்கத்தையும், மணி கடல் சங்கு முதலாகிய தச நாதங்களையும், சிவானந்தத் தேனையும் அனுபவித்தற்கு இந்த நாடியின் பயிற்சி

இன்றியமையாதது: இடைநாடி பிங்கலை நாடிகள் உலக இன்பங்களாகிய சிற்றின்பத்திற்கே கருவியாகும். இடைநாடி சந்திர கலை; பிங்கலை நாடி சூரிய கலை; சுழுமுனை நாடி செந்தீக்கலை. இடை பிங்கலைகளின் வழியே இயல்பாய் இயங்கும் வளியை நிறுத்திச் சுழு முனையாகிய நடு நாடியூடே செலுத்திநின்றபின், பேரானந்தம் பெறலாம். அணிமாதி அட்டசித்திகளும் தாமே வந்து சேரும். இந்நிலையே ஈண்டு நடுவுநிலைமை எனப்பட்டது. நடுநாடியின்வழியே நிற்கும் நிலை நடுவுநிலைமையாம்.

எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
செல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே.

திருமூலதேவர் இந்நெறியில் நின்ற சிவ யோகியாவார். அவர் நான்மறை யோகிகளுள் ஒருவர்; அணிமாதிவரும் சித்தி பெற்றுடையார். 'சிவயோகம் தலைநின்று பூவலரும் இதயத்துப் பொருளோடும் உணர்ந்திருந்தார்' எனவரும் பெரியபுராணக் குறிப்பாலும் உணரலாம்.

நடுவுநின் றார்வழி நானும் நின்றேனே (320)

நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே (322)

என்பவற்றாலும் அறியலாம்.

இம்மந்திரங்களுக்குத் திருவைந்தெழுத்தின் வகையாயுள்ள இருதலை மாணிக்கம், சூக்கும பஞ்சாக்கரங்களின் முறைபற்றிப் பொருள் கோடலும் ஒன்று. இருதலை மாணிக்கம் என்பது சிவயவசி, சூக்கும பஞ்சாக்கரம்என்பது சிவயசிவ. இருபாலும் சிவமும் நடுவே அருளும் அமரத் தான் (உயிர்) அவற்றின் நடுவணிருத்தல் இருதலை மாணிக்கம். ஒருபால்சிவமும் மற்றொருபால் அருளும் இப்படி அமர, தான் அவற்றின் நடுவே இருத்தல் சூக்கும பஞ்சாக்கரம். இதனைத் திருவாசகப்பாடல் ஒன்றானும் அறியலாம்:-

உடையா ளுன்ற னடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரும்
இருப்ப தானால் அடியேனுன்
அடியார்நடுவு ளிருக்கும்அருளைப்
புரியாய் பொன்னம்பலத்துஎம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே.

துறவிகள் இடகலை பிங்கலை வழியாகச் செல்லும் மூச்சை நடுநாயகமாய் இருக்கும் சுழுமுனை வழியாகப் போகும்படி செய்து, அத்துடன் பஞ்சாட்சரத்தைச் சேர்த்துச் செபித்து, நிலையான இன்பத்தை அடைவதைத்தான் திருமூலர் இங்கு நடுவுநிலைமை என்கிறார். மேலும் சிவசத்தியிலிருந்துதான் அருட்சத்திதோன்றும் என்று கூறுகிறார். பஞ்சாட்சரத்தை வைத்துத்தான் தியானிக்க வேண்டும் என்கிறார். பஞ்சாட்சரத்தில் சிகரத்துக்கும் வகரத்துக்கும் நடுவில் யகரம் உள்ளது என்கிறார். யகரத்தைச் சிகரத்துக்கும் வகரத்துக்கும் நடுவில் வைத்து அதாவது, அதிசூக்கும பஞ்சாட்சரத்தை - சிவயவசி என்பதை – இடகலை பிங்கலை வழியாய் இயல்பாகச் செல்லும் வாயுவை அவ்வாறு போகாமல் தடுத்து நடுநாயகமாயுள்ள சுழுமுனைநாடி வழியாகச் செல்லும்படிச் செய்து, அதாவது குண்டலினி சத்தியை எழுப்பி, அத்துடன் அதிசூக்குமத் திருவைந்தெழுத்தை மனதில் கொண்டு தியானம்செய்து, நிலையான இன்பம் பெற வேண்டும் என்கிறார் திருமூலர். இதுவே திருமூலதேவர்கூறும் சிறப்புடைய ஒப்பற்ற நடுவுநிலைமை ஆகும் என்பதை யாவரும் அறிவோமாக.

'கள்ளுண்ணுமை'

ஆதீனவித்துவான்,
## திரு. தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்கள்,
கடலூர்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளைச் சிந்தித்து வந்திக்கின்றேன். முனிபுங்கவர்கட்கும் பெருமக்கட்கும்இங்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருமந்திர நூலில் 'கள்ளுண்ணுமை' என்னும் பொருள் நடுவுநிலைமைக்குப்பின் வைக்கப்பட்டுள்ளது. இன்றைய பேச்சில், கேள்வி, கல்லாமை, நடுவுநிலைமை இவைகளின் கடைசியில் அமைந்துள்ளது. கள்ளுண்ணுமையில் கள் என்பதைப்பற்றி அறியும்போது இது தற்போது ஏற்பட்டது அல்ல; கள்ளைக் குடிக்கும் பழக்கம் அநாதி காலம் தொட்டே இருந்து வந்திருக்கிறது. அதோடு அமையாது, மேலும் வளர்ந்து, சிலருக்கு அவசியமான பொருள்போலும் ஆகிவிட்டது. இது பற்றியவரை, எளிதில் விடுவதில்லை. இது, உண்டபின், உண்டவரைத் தன் நிலையை மறக்கச் செய்கிறது. அவரைக் கிடத்தலாகியநிலைக்குக் கொண்டு வருகிறது. கள் உண்ணப் பழகின் அது அவரை, தன்னைச் சதா நினைத்துக்கொண்டிருக்கும்படியும், நிலைத்த பற்று அடைந்திருக்கும்படியும் செய்கிறது. அதனுல் கள் அறிவினைக் கெடுத்துவிடுகிறது. அறிவினைக் கெடுக்கும் கள் நமக்குத் தேவை இல்லை. ஆனாலும் அதனை நாம் அவ்வளவு எளிதில் விடவும் முடியாது. சட்டத்தினுலுங்கூட அதனைப் போக்குவது கடினமாக உள்ளது. ஆனல் அதனை எப்படிப் போக்குவது? நாம் அதனினின்றும் எப்படி விடுதலைபெறுவது? என்பதை அறியவேண்டும். அதற்கு நமது திருமூலர் வழிவகுக்கிருர்.

அதாவது கள் உண்பதை நிறுத்த, அதற்கு மாற்றுப்பொருள்ஒன்று தருகிருர். நம்மிடை இறுகிப் பற்றிக்கொண்டிருக்கும் தீய பழக்கமாகிய கள்ளுண்டலை நம்மை விட்டு விலக்கவேண்டுமானுல், அதனை அவ்வளவு எளிதில் விடுவது முடியாதகாரியம். அதற்கு மாற்றுப்பொருளைக் கொடுத்து, நீக்கும்வழிதான் சிறந்தது. அதுதான் செயலாற்றுகின்ற வழி. இதற்குத்தான் நமது அரசாங்கத்தாரும் கள்ளுண்பதை நிறுத்தி அதற்கு மாற்றுக 'பதநீர்' உண்ணும்படிக் கூறுகிருர்கள் போலும்.

நம் திருமூலரோ ஒருசிறந்த மாற்றுப் பொருள் தருகிருர். மாற்றுப்பொருள் என்பதனுல் அதற்கு உள்ள தன்மை இதற்கு வேண்டும்; அதில் உள்ள குற்றம் இதில் நீக்கப்படவேண்டுல். அதனைவிட நல்லதாகவும் இருக்கவேண்டும். சுருங்கக் கூறின் மாற்று சரியாய் இருக்கவேண்டும். மாற்று' என்பதால் சிறிதளவு தரத்தில் குறைந்தும் இருக்கலாம். அதாவது 1 ரூபாய்க்கு 14 அணு என்பதுபோல. ஆனல் நம் திருமூலர் இவ்விடம் கொடுக்கும் மாற்று எப்படி?

மாற்றில் இலாபமிருப்பதால் - ரூபாயை உதாரணமாகக் கொண்டதால், கணக்குப் பார்க்கும்நிலை வருகிறது. ரூபாய்க்குத் திருமூலர் கொடுக்கும் மாற்று 17 அணு. ஒரு அணு கூடுதல். ரூபாய்க்கு ஒரு அணுதானே என்று எண்ண வேண்டாம். அதாவது லாபமுடையது என்ற பொருளில் கொள்ள வேண்டும். அதாவது மாற்றுப் பொருள் சிறப்புடையது. அதனுல் மயக்கம் தருவதும், அறிவைக் கெடுப்பதும், தன் நிலை இழக்கச்செய்வதுமாகிய கள்ளை உண்ணுது, சிறந்த கள்ளை உண்ணும்படிக் கூறுகிருர்; மாற்றுப் பொருளுக்கு அதே பெயரையும் தருகிருர் பெயரில்கூட நமக்கு அதிருப்தி

ஏற்படாமல் இருக்கும்பொருட்டு. சுவை யிலும் அதினில்குறைந்தது அல்ல. கள்ளுண் ணுமை அதிகாரத்தில் கள்ளின் மாற்றுப் பொருளுக்கு 13 பெயர்களைத் தருகிறார். உதாரணத்துக்கு ஒன்று பார்ப்போம்.

'தேறல்' என்று பெயர் கொடுக்கிறார். பெயர் ஒற்றுமை - சிறப்பு - மயக்கம்தராது தெளிவைத் தருதல். அதுதான் சிவானந்தத் தேறல். சிவானந்தபோதத்திலே திளைக்கச் செய்வது இது.

இரண்டாவது, சுவையும் பொருளும் கொண்ட பெயரைக் கொடுத்ததால்மட்டும் பூரண திருப்தி இராது என்று கருதி 'மது' என்றே பெயர் கொடுத்திருக்கிறார். ஆனால் இந்த மது சிறந்த மது என்பதால் 'சுத்தமது' என்று சுத்த என்ற சொல் கூட்டி இந்த மதுவிற்குள்ள புனிதத்தன்மையை விளக்கு கிறார். பெயர் மாற்றங்கூட இல்லை. அதனால் இப்பொழுதுகூடவா துன்பம் கொடுக்கக் கூடிய மதுவை விடுத்து இன்பந்தரக்கூடிய 'சுத்தமது'வை ஏற்கக்கூடாது என்று கேட் பதுபோல் கூறுகிறார். இதனால் திருமந்தி ரத்தில் மூலர் கூறும் கள் நாம் நினைக்கும் கள் அல்ல; அதுதான் சிவானந்தத்தேறல் என்பதை முதலில் அதாவது அடிப்படை யிலே உணரவேண்டியது முக்கியம்.

அடுத்து நாம் ஞானப்பால் உண்ண வேண்டும் என்கிறார் திருமூலர். இதனை ஓர் உபமானத்தினால் விளக்குகிறார். உதாரணத் திற்குப் பசுவை எடுத்துக்கொள்ளுகிறார். பசுவை உதாரணத்திற்கு எடுத்துக்கொள்வ தில் காரணம் பொதிந்திருக்கிறது. அதனை உணர்தல் வேண்டும். அதற்கு மூன்று காரணங்கள் உள. (1) இடம் (2) அவரது வாழ்க்கை (3) சிறப்புடையது என்பன ஆம். இடமென்பது எது? திருவாவடுதுறை. திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு "கோமுக்தீஸ்வரர்" என்று பெயர். அதாவது, பசு முக்திபெற்ற இடம். அடுத்து, வாழ்க்கை வரலாறு. மூலரது வாழ்க்கையில் "பசு" ஓர் சிறந்த இடத்தைப் பெற்றிருக்கிறது. பசுமட்டும் பெற்றிருக்க வில்லை. பசு பெற்ற வாய்ப்பு நாம் பெற்ற வாய்ப்பாகவே கருத வேண்டும். ஏனெனில் பசு அவரது வாழ்க்கையிலே வாய்ப்புப் பெறுவிடில், நாம் திருமந்திரத்தைப் பெறும் வாய்ப்புக் கிடைத்திருக்குமோ என்பதே சந்தேகம். பசுக்களை மூலன் மேய்க்க ஓட் டிச் சென்றகாலத்து இடையனை மூலன் இறந்துவிடவே அதுகாரணமாகப் பசுக்கள் கண்ணீர் விட, அதனைக் கண்டு இரக்கம் கொண்ட "மூலர்" அதாவது பின்பு மூலன் என அழைக்கப்பட்டவர், மூலனுடம்பில் "பாகாயப் பிரவேசம்" செய்து, பசுவின் துயரைப் போக்கினார்.

ஆகமத்திலே நமக்குப் "பசு "என்ற பெயர் உண்டு. அதாவது, சைவசித்தாந்தத் திலே உயிருக்கு "பசு" என்று பெயர் வழங்கி வருகிறது. பசுக்களின் துயரையே கருணை கொண்டு போக்கிய மூலர் உயிர்ப் பசுக்கள் துன்பத்தைப் போக்கக் கருதாமல் ஒருக்கா லும் இரார். அதனால், மூலருக்குப் பசுவின் ஞாபகம் வந்தது; பசுவை உதாரணமாக எடுத்துக்கொண்டார்.

பசு ஞாபகம் இருந்தது என்பதற்குப் பல சான்றுகள் கூறலாம். "பசு ஐந்து உண்டு" என்று ஒரு பாடலில் குறிப்பிடு கிறார். இவ்விடத்திலே நாற்கால்பசு மூலம் இருகாற்பசுவுக்கு உண்மை உணர்த்துகிறார்.

இதிலே இரண்டு வகை பசுக்களைக் கூறுகின்றார். அதிலே ஒரு பசு அயலாரின் மேய்ச்சல் நிலத்திலே திரிந்து, மேய்ந்து, வீட்டுக்கு வரவேண்டும் என்னும் நினைப்பே இல்லாமல் பசும்புல்லைத் தின்று ஆற்றுநீரை - சேற்றுநீரைக் குடித்தது. மற்றொன்றோ தன் வீட்டையே நினைந்துகொண்டு, மேயும் போது சரியாக மேயாமல், ஆற்றிலுள்ள நீரைக்குடிக்காமல், இடையன் அழைக்க,

வீட்டிற்குவரவேண்டும் என்ற அவாமிகுதியால் வீட்டுக்கு வரும் பசு. முன்னது பசும் புல்லையும், ஆற்றுநீரையும் உணவு என்று கருதி உண்டு, வயிறு புடைத்திருக்கிறது. இரண்டாவது, இவை சிறந்த உணவு அல்ல என்று தெரிந்து, வீட்டுக்கு வரவேண்டும் என்ற அவாவினுல் புல் உண்ணுது, நீர் குடியாது, வயிறு ஒட்டி, வீட்டுக்கு வந்து இடையன் வைத்திருக்கும் சத்து வாய்ந்த "கழுநீரை" - அமுதத்தைக் குடிக்கிறது. இதைத் திருமூலர் உதாரணவாயிலாகக் கூறி, முன்பசுப்போல் அயலார் நிலத்தில் மேய்ந்து திரிந்து, புல் தின்று, ஆற்றுநீரைக் குடித்து வீடு என்று ஒன்று இருப்பதாகவே நினையாமல் இருப்பது சரியில்லை; அதனுல், மற்றொரு பசுவைப்போல் நமக்கும் வீடு என்று ஒன்று உண்டு, அது மோட்ச வீடு ஆகும். ஆற்றுநீரைக் குடியாது கழுநீரை அமுதத்தைக் குடிப்பதுபோல் சிவானந்த அமுது உண்ணவேண்டும் என்கிருர். பசு எப்படிப் புல் உண்ணுது, நீர் குடியாது, வயிறு ஒட்டி வீட்டுக்கு வருகிறதோ அது போல் நாமும் ஆசையைச் சுருங்கவைக்க வேண்டும். அதாவது, பற்றை அறுக்க வேண்டும் என்கிருர். சுருங்கக்கூறுமிடத்து இரண்டாவது பசுவுக்கு இருப்பதுபோல் வீட்டுச் சிந்தனை, வீட்டுக்கு வரவேண்டும் என்ற அவா, வீட்டில் உள்ள கழுநீரை - அமுதத்தைப் பருகவேண்டுமென்ற அவா, அதற்காகப் புல் தின்னுது, நீர் குடியாது வயிற்றை ஒடுக்கிக்கொண்டுவந்து கழுநீர் குடிப்பதுபோல நாமும் மோட்சவீடு என்ற ஒன்று உள்ளது, அதனை அடையவேண்டும் என்ற அவாவினுல், மற்றைய ஆசைகளை அறுத்து, மோட்சஇன்பத்தைக் கொடுக்கும் சிவானந்த அமுதத்தைப் பருகவேண்டும் என்று கூறுகிருர் திருமூலர். மூலர் நம்மீது வைத்த பெருங்கருணையால் பசுவாகிய நமக்கு, பதியை உதாரணம் காட்டிச் சிவானந்தத்தேறல் உண்ணும்படி கூறுகிருர்.

அடுத்தபடியாக, சிவானந்தத் தேறல் எங்கு உள்ளது? அதற்கு வழி என்ன? எப்படி அடைவது என்பதைக் கூறுகிருர். ஆறு ஆதாரங்களில் முதல் ஆதாரமாகிய மூலாதாரத்தில் உள்ள குண்டலிசக்தியைச் சுழுமுனை நாடி வழியாய் மேலே உயர்த்தி, அதைப் புருவ மத்திய இடத்தில் உள்ள சந்திரமண்டலத்தை அடையச் செய்து, அதாவது சந்திரமண்டலத்தின் அமுதை உடல்முழுவதும் பரவச்செய்து சிவானந்தத் தேறலை உண்டு நிலையான இன்பத்தை அனுபவிக்கும்படிக் கூறுகிருர். இதைச் செய்வதற்கு உற்ற வழி குருதிருவடியை அடைவதே. அதுதான் சரியான, உண்மை வழி என்று கூறுகிருர்.

உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறர்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வுறர்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே.

—திருமூலர்.



திருமந்திரமாநாடு - மூன்றும் நாள்

# மூன்றும்நாள் பேருரைகள்

**தலைமையுரை :**

பேராசிரியர்,

## திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள்,

M. A., B. L., M. O. L.,

அண்ணுமலைப்பல்கலைக்கழகம்.

மகாசந்நிதானம் அவர்கள் பொன்னுர் திருவடிக்கமலங்களுக்கும், இங்கே குழுமியுள்ள பெரியோர்களது திருவடிகளுக்கும் என்னுடைய வணக்கம் உரித்தாகுக.

திருமந்திர மாநாட்டிலே அடியேனும் பங்குபெற்று உயரவேண்டுமென்ற கருணையுள்ளத்தினுலே ஆண்டுதோறும் குருமகாசந்நிதானம் அவர்கள் தடுத்தாட்கொள்ளுகிருர்கள். நான் பலமுறை இந்தப்பேரவையிலே, திருமந்திரத்திலே நான் ஒன்றுமே அறிவு பெருதவன் என்று சொல்லியிருக்கின்றேன். அத்தகைய ஒருநிலை, திகைப்பு எனக்கு ஏற்படுகின்றது. ஆனுல், திருமந்திரவித்தானது இப்போது உலகெங்கும் ஓங்கி வளரத் தொடங்கியிருக்கிறது. எல்லோரும் இப்போது இத்திருமந்திரத்திலே ஈடுபாடு செலுத்தி வருகிருர்கள். அதற்கு விளக்கம் இந்த ஆதீனத்திலிருந்துதான் வந்துகொண்டிருக்கிறது. என்போன்றவர்களுக்கும் திருமூலரது நீதிக்கருத்துக்களை விளங்கிக்கொள்ளக்கூடிய ஒருகாலம் அண்மையிலே வரும் என்றுதான் நான் எதிர்பார்க்கின்றேன்.

மக்கள் உலக இன்பங்களிலே ஈடுபட இதிலே உவர்ப்புக் கொண்டிருக்கிருர்கள். தமது வாழ்க்கையின் முடிவு இதுதான் என்று சொல்ல முடியாததை உணர்கிருர்கள். இதற்கும் மேலாக ஏதாவது இராதா என்று அவர்களுடைய உள்ளம் கீழ்நாட்டிலேயும் சரி, மேல்நாட்டிலேயும் சரி கேட்டுக்கொண்டிருக்கின்றது. ஆகையினுலே திருமூலர்போன்ற பெரியோர்களுடைய சொற்களிலே நம்பிக்கை வளர்ந்துகொண்டிருக்கிறது. அந்தப் பரம்பரையிலே வந்தவர்கள் நமக்கு அகப்படமாட்டார்களா? என்று தான் எங்கேபார்த்தாலும் நாட்டம். ஆனுல் இதிலே ஒரு ஏமாற்றமும் இருக்கிறது. பலர் திருமந்திரத்தின் உண்மையைத் தாங்கள் கண்டு, அந்த அளவிலே புதிதாகக் கடை வைத்திருக்கிருர்கள். அதிலே என்ன சரக்கு இருக்கிறதோ தெரியாது. எனக்கு அதே போன்ற சரக்குதான் விலையாகிறதோ என்ற அச்சமுங்கூட. அது என்ன அச்சம்? இவ்விதம் நம்புகிறவர்கள் ஏமாந்து எங்கே திருமந்திரம் என்ற மூலத்திற்கே உலைவைத்து விடுவார்களோ என்பதுதான்.

திருமூலர் ஒழுக்கத்தைப்பற்றிக் கூறுகின்ருர். அந்த ஒழுக்கத்தைப்பற்றிக் கூறுகின்றபோதும், ஆண்டவனை அடைகின்ற வழியை வற்புறுத்துவதுபோல் அந்த ஒழுக்கத்திலே கூறுகிருர். அந்த ஆழ்ந்தபொருளை விட்டுவிட்டு, மேலெழுந்த வாரியாக ஏதோ பார்ப்பதில் எவ்விதபயனுமில்லை. அதுபோல் இவர் யோகத்தைப்பற்றியெல்லாம் பேசுகின்ருர். மக்கள் என்ருல் ஏதோ வயிற்றுக்கு உண்பது, விலங்குபோல் கூடி வாழ்வது, அதுதான் யோகம் என்று சொல்லவில்லை. அந்தக் கீழான யோகத்திலே நாம் நன்ருகப் பழகியிருக்கிருேம்.

யோகம் என்பது சிலருக்கே கிட்டும் என்பது அல்ல. விலங்குகளுக்கும் ஒருவித

யோகம் உண்டு. அவைகள் கருத்தடை என்ற விதிவிலக்குகளுக்கு அப்பாற்பட்டுக் கூடி வாழ்கின்றன. இந்தக் கீழான யோகம் நம் மக்களிடத்திலேயும் உண்டு. ஆனால், அங்கிருந்து நாம் மேலே போயிருக்கிறோமா என்றால், சொல்லமுடியாது. ஆனால் யோகம் முதலிய இடம் தெரியாமற்போனாலுங்கூட, சிலர் அதையும் தாண்டிப் போய்க்கொண்டு இருக்கிறார்கள். அவர்களுடைய உள்ளத்திலே நாம் இவ்வுலகத்தில் பிறந்தது, ஏதோ வயிற்றுக்கு உண்பது, உறங்குவது, மற்றும் பிள்ளைபெறுவது என்ற அளவுக்குமட்டும் நம்பிக்கை இல்லாமல், அதற்கும் மேலாக ஒருண்மை இருக்கிறது என்று அவர்கள் உள்ளங்களிலே ஏற்பட்டு, அந்தவழியிலே அவர்கள் போய்க்கொண்டு இருக்கிறார்கள். அப்படிப் பார்க்கும்போது, நாமெல்லாம் இங்கே எப்படி வந்திருக்கமுடியும் என்று பார்த்தால், இன்று இந்த மண்ணிலே நாம் எல்லோரும் மிதித்தோம் என்றால், கீழான யோகத்திலிருந்து சற்று மேலான யோகத்திற்குச் செல்ல ஒரு இடத்தைத்தேடி நாம் வந்திருக்கிறோம் என்றுதான் சொல்லவேண்டும். அப்படி வந்ததிலே, எந்தெந்த நிலையில் நாம் இருக்கின்றோம் என்பதை என்னால் சொல்ல முடியாமற்போனாலும், கொஞ்சம் உயர்ந்த நிலைக்குத்தான் நாம் போய்க்கொண்டிருக்கின்றோம் என்று என்னால் சொல்ல முடியும். நெஞ்சுக்குக் கீழானநிலையில் இல்லாமல், உதயகமலத்தைத் தேடித்தான் நாம் போய்க்கொண்டிருக்கிறோம். நம்மில் சிலர் அதிலே சற்று அதிக தூரம்போய் இருக்கலாம். யோகநிலையை நாம் பண்ணுமற்போனாலும், சில இலக்கணங்களைத் தெரிந்து கொண்டு வருகிறோம். அவைகள் ஆற்றலுடையன. அந்த ஆற்றலை நமக்கு அடிமையாக்கிக்கொண்டால் நம்நிலைமை உயரும். உணர்ச்சிகளுக்கு அடிமையாகக் கூடாது. திருமந்திரத்திலே நரம்புமண்டல ஆராய்ச்சி பற்றிச் சொல்லி, அதற்கு மேலேயும் சில அறிவுவிளக்கங்களைக் கொடுத்திருக்கின்றார். மேலும் அறிஞர்கள் எல்லாருமே வெறும் உணர்ச்சிக்காக வாழ்கின்றவர்கள் அல்ல. சில அறிஞர்கள், விஞ்ஞானிகள் இவர்களைப் பார்த்தால் இது தெரியவரும்.

ஸர். சி. வி. ராமன் அவர்களுக்கு அவருடைய மனைவியார் வந்து நினைவூட்டி வற்புறுத்தி ஊட்டினால்தான் அவர் சாப்பிடுவாராம். காரணம், அவர்கள் உலகத்தைப் பற்றி நினைக்கிறார்கள். அதிலே உணவை மறந்து, உறக்கத்தை மறந்து, அதிலேயே நாட்டமான ஒருநிலையைப் பெறுகிறார்கள். இப்படி பல துறைகளிலே இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் மேலே போகாமல் போனாலுங்கூட. மிகவும் கீழான நிலைக்குப் போகாமல் கொஞ்சம் மேலாகவே போய்க்கொண்டிருக்கிறார்கள். இங்கே இருக்கின்ற யாரும் நெஞ்சுக்குக் கீழேயுள்ள அளவுக்கு யோக நிலைக்குப் போயிருக்க மாட்டார்கள் என்ற உறுதி எனக்கு இருக்கிறது. அந்த அளவுக்கு நம்முடையவுணர்ச்சிகளெல்லாம் கொஞ்சம்மேலோங்கி வளர்ந்திருக்கின்றன. நாம் இப்படிஎண்ணி, இன்னும்கொஞ்சம் உயர்ந்த ஒரு நிலைக்குச்சென்றால், அவர்கள் சொல்லுவது விளங்கும். இந்த மண்ணை நாம் மிதித்ததினாலேயே நமக்குக் கொஞ்சம் உயர்வு வந்திருக்கிறது என நினைக்கிறேன்.

யோகத்தைப்பற்றிச் சொல்லும்போது, சக்கரங்கள் போட்டு மந்திரங்களைப்பற்றிச் சொல்லுகிறார்கள். ஆனால் இவைகளிலே நமக்குப் பயிற்சியே கிடையாது. அவர்கள் எதையெதையோ சொல்லுகிறார்கள். ஒரு வேளை அவையெல்லாம் வந்தால் தெரியும். இந்த யோக சக்கரங்களெல்லாம் திரும்பத் திரும்ப வரவேண்டியனவே. அணுவைப் பிளக்க மனிதன் கற்றுக்கொண்டான். அதைப்போல் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் அருள்நோக்கம் இருக்குமானால், அது பண்படும் என்பதிலே எனக்கு ஒரு பெரிய நம்பிக்கை. ஆகவே, இப்படியே எல்லாரும் ஒருசேர எண்ணினால், அன்பு உருவான

நமது ஆண்டவன் நமக்கு அருள்விளக்கம் தருவான். ஆகவே, அவனே நோக்கி நாம் போகவேண்டும். அவன் நமக்காகக்காத்துக் கொண்டிருக்கிருன். ஒரு குழந்தை தன் தாயிடம் சண்டித்தனம் பண்ணுகின்றது. தாய் பாலே எடுத்துக்கொண்டுவந்தால், அது குடிக்கமாட்டேன் என்று ஓடுகின்றது. அப்படி ஓடுகின்ற குழந்தை கால் இடறிக் கீழேவிழுகிறது; உடனே அழுகிறது. தாய் மெதுவாகப் பாலே ஊட்டுகிருள். அதுபோல் நாமும் ஆண்டவனிடமிருந்து ஓடோடி வருகிருேம். நமது சண்டித்தனத்தால் ஓடி மறைகிருேம். அப்படி ஓடி ஆடி ஓய்ந்த பிறகு பின்னுலே அப்பா! அம்மா! என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லாமல் திகைக்கிருேம். தாயானவள் குழந்தையைக் காப்பதுபோல, அப்போதும் ஆண்டவன் அம்மாவாகவும், அப்பாவாகவும் வந்து காப்பாற்றுகிருர். அந்த உறுதியிலே, இன்று எனக்கு ஒன்றுமே தெரியவில்லே என்று சொன்னுலும், ஒருநாள் விளங்கும். இந்த நாட்டிலே பலபல கதைகள் வழங்கப்பட்டிருக்கின்றன. அவை எப்படித்தோன்றின? நமக்குத் தெரியாது. ஆனுல் புராணங்களிலே வந்திருக்கலாம். அல்லது நாட்டுக்கதையாக வந்திருக்கலாம். விஞ்ஞான ஆராய்ச்சியின் மூலமாகவும் அவை வந்திருக்கலாம். ஆனுல் அவைகளேச் சைவப்பெருமக்கள் கேட்ட போது, அவர்கள் அவைகளேத் தங்கள் அனுபவத்திலே ஏற்றினுர்கள். அக்கதைக்கு மெருகுகொடுத்து, இந்நாட்டிலே வளர்த்து வந்திருக்கிருர்கள்.

இரண்டாவது தந்திரத்திலே அகத்தியர் கதை சொல்லப்பட்டிருக்கிறது. அதுபற்றி நமது நண்பர் சோமு அவர்கள் பேச இருக்கிருர்கள். ஆகவே நான் ஒன்றும் தோற்றுவாயாகச் சொல்லக்கூடாது. அது போல் சிவனுடைய எட்டுவீரச்செயல்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. நம்முடைய திருமந்திர காலத்திலே இந்தக் கதைகளே மிக அழகாக விளக்கியிருக்கிருர்கள், அதில் ஒரு தமிழ்மணத்தைப் புகவைத்தார்கள். அட்டவீரட்டத்தைப்பற்றி அப்பர் தேவாரத்திலேதான் விரிவாக இருக்கிறது. பின்னே திருமந்திரக்காரர் அதைத் தமிழ் நாட்டுக் கதையாக - சைவமணம் கமழும்படியாகச் சொல்லியிருக்கின்ருர். அப்படியே அடுத்த படியாக இலிங்க புராணம்பற்றிப் பேசியிருக்கிருர். இதைப்பற்றி வடமொழியிலே அதிகமாக இருந்தாலும், தமிழ்நாடும் இதை அறிந்த கதைதான். எல்லாக் கோயிலிலும் மேற்குப்புறத்திலே இருக்கிற ஒருகதையே இது. ''அடி முடி தேடிய படலம்'' என்று சொல்லுவார்கள். இதிலே தமிழ்நாட்டிலே பெரிய ஈடுபாடு இருப்பதைக் காண்கிருேம். இதிலே ஒட்டக்கூத்தரும் ஈடுபட்டு ஒரு பெரிய பரணியே பாடியிருக்கிருர். தக்க யாகத்திலே தமிழ்நாடு ஈடுபட்டிருந்த ஒரு உண்மைக்கு, திருமூலர் விளக்கங்கொடுத்திருக்கிருர். அதுபற்றியெல்லாம் விளக்கம் தருவதற்குப் பெருமக்கள் வந்திருக்கிருர்கள். அதனேக் கேட்டு நாம் இன்புறுதல் வேண்டும்.

இன்றைக்கு, நம்முடைய குருமகா சந்நிதானத்தின் அருள் பழுத்துவருகின்றது என்பதைப் பார்க்க வேண்டும். சென்ற ஆண்டு நண்பர் சோமு அவர்கள் இங்கு கலந்துகொண்டார்கள். அவர்களேத் திருவருள் மேனுட்டுக்குக் கொண்டுசென்றது. அந்நாட்டிலுள்ள வானெலி சம்பந்தமான சில உண்மைகளேத் தெரிந்துவரலாம் என்று அவர்கள் போனுர்கள். ஆனுல், அங்கேயும் புதுமைகளே அவர்கள் கண்டார்கள். அங்கே வகைவகையான மதுக்கள் இருக்கலாம். ஆனுல், அதைப்பற்றி நமக்குத் தெரியும். அதைக் காணவில்லே. அதேபோல் அவர்கள் சமுதாயத்திலே பற்பல ஒழுக்கக்கேடுகளும் இருக்கலாம். ஆனுல், அதைக் காணவில்லே. மக்கள்சமுதாயத்திலே நாம் எப்படி வாழ வேண்டும் என்ற உண்மையை அவர்கள் கண்டுவந்ததாக என்னிடம் கூறிக்கொண்டிருந்தார்கள். கத்தரிக்காய் வாங்கத்தான்

நமக்குத் தெரியுமா? கத்தரிக்காய் தூக்கு என்ன விலை என்று நாம் கேட்போமானால், விற்பவன் இரண்டு ரூபாய் என்று சொல்லு வான். நாம் ஒரு அணுவிலே தொடங்கி விலை கேட்க ஆரம்பிப்போம். கடைசியில் அது எட்டணாவில் முடியும். கடைசியிலே அதிலேயும் நாம் பலவகைகளில் ஏமாற்றப் பட்டிருப்போம். பயன் ஒன்றுமில்லை. இது நம்முடைய அன்றாட வாழ்க்கை. அவன் நம்மை ஏமாற்றுவது, அவனை ஏமாற்றுவது நாம் இதுதான் நமதுவாழ்வாக இருக்கிறது. இந்த ஏமாற்றுதல் அங்கு இல்லை என்பதை அவர்கள் கண்டார்கள். ஒரு சிறுகுழந்தை போய் கடையிலே விலை கேட்டாலும் ஒரே விலைதான். இங்கு நம்முடைய குறிக்கோள் பை நிறைய வேண்டுமென்பதே. இவ்வாறு பற்பல துறைகளில் நாம் பார்க்கின்றோம். இவையெல்லாம் இருக்கக்கூடாது என்பதற் காகத்தான் சொல்கிறேன். இவையெல்லாம் ஒழிய வேண்டும்.

அதற்குமேல் ஆத்மவிசாரம். இவைகள் போனாலொழிய நம்முடைய வாழ்க்கை சிறக்க முடியாது. ஆகவே, நம்முடைய குழந்தைகள் வளரவேண்டுமானால் - எதிர் காலம் வளரவேண்டுமானால் அவர்களுக்கு நாம் ஒரு படிப்பினையாக இருக்கவேண்டும். தர்மம் செய்யவேண்டுமென்பதில்லை. நாம் அறவழியிலே நடந்து காட்டவேண்டும். நாம் ஏமாற்ற நினைத்தால், அது நம்முடைய குழந்தைகளையும் நாமே கெட்டவழியிலே நடக்கத் தூண்டுவதாகும். அந்த நினைப்பே அவர்களிடை ஏற்படக்கூடாது. நமது குழந்தைகள் மிகவும் நல்லவர்கள். ஆகவே, மேலே போவதற்கான யோகப் பயிற்சி இல்லாவிட்டாலும், நல்ல எண்ணத்திலே நாட்டம்கொண்டால் நாம் வளரமுடியும். இந்த உண்மையை அவர்கள் கண்டார்கள்.

கோயிலில்தான் ஆண்டவனைப் பார்க்க வேண்டுமென்பதில்லை. ஆண்டவன் கோயி லில் இருப்பார் என்ற கருத்து தவறில்லை. ஆனால், ஆண்டவனைக் கோயிலிலேதான் பார்க்கலாம் என்று சொல்கிற கருத்துதான் தவறு. இதற்கெல்லாம் நினைப்புதான் கார ணம். அந்தவகையிலே மனதை ஒரு வழி காட்டியாக வைத்து, "உடலுக்குள் உரு ஒன்று கண்டேன்" என்றபடி நினைத்துப் பார்த்தால் உண்மை விளங்கும். இந்த விளக்கத்தைத்தான் அவர்கள் கண்டுவந் தார்கள். இப்போது அவர்கள் தமது அனுப வத்தை எல்லாம் சொல்ல இருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம், அவர் சென்ற ஆண்டு இங்கே வந்ததுதான் என்று சொன் னால், அதற்கு நண்பர் சோமு அவர்கள் வருத்தப்பட மாட்டார்கள்; மறுக்கவும் மாட்டார்கள் என்று நம்புகிறேன். அது இந்த மண்ணின் வளம். இந்த மண்ணை மிதித்ததன் பலனைத்தான் அவர்கள் மேல் நாட்டிலே சென்றபோதும், அங்கும் இந்தத் திருமந்திர உண்மைகளைக்கண்டுவந்தார்கள். இது தமிழ்நாட்டுக்கும் பெருமை; கலைக்கும் பெருமை. நம் தத்துவத்திற்கும் பெருமை. அவர்கள் மேலும் இந்தத் திருமந்திர விளக்கை ஏற்றிவைப்பதற்கு, அமெரிக்கா விற்கும் போகவேண்டும். இப்படி குரு மகாசந்நிதானம் அவர்கள் அருள்கிடைத்த தற்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

'அகத்தியம்'

## திரு. மீ. பா. சோமு அவர்கள்,

சென்னை.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் தெய்வத் திருமரபுத் திருவடிகளில் என்னுடைய மிகப் பணிவான வணக்கத்தை முதற்கண் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். நமது தலைவர் உயர்திரு. மீனுட்சிசுந்தரனுர் அவர்களுக்கும் மற்றுமுள்ள பெரியோர்களுக்கும், சமய அன்பர்களுக்கும் என் வணக்கம். ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய பேரன்பும் வாழ்த்தும் இமயமலைபோன்று ஒருபுறம் இருக்கிறது. அது என்னுடைய பாக்கியம். அதோடு என்னுடைய அருமை நண்பர் தேசிகர் அவர்கள் என்னிடம் அன்பு காரணமாகப் பலமொழிகளை வாழ்த்துமூலமாகக்கொட்டினுர்கள். தலைமைவகிக்கின்ற நமது தமிழ்ப் பேரறிஞர் அவர்களும் அன்பினுல் என்னுடைய இதயத்தை உருக்கிவிட்டார்கள். இந்த உருக்கத்தின் மத்தியிலே உங்கள்முன் எழுந்து நிற்கிறேன். அன்பு என்ற ஒன்று வந்துவிட்டால் அதைத் தாங்குவது மிகவும் கஷ்டம்.

இப்படி வாழ்த்துக்களையும் அன்பையும் மழைபோல் என்மீது பொழிகின்றபோது எப்படித் தாங்குவேன் ? என்ருல் தாங்க முடியவில்லை என்று மீண்டும்சொல்கிறேன். ஆனுலும், கனிந்த அன்போடு வருகின்ற வாழ்த்து இருக்கிறதே அதைக் கூறுங்கள், கூறுங்கள்; உங்களுக்கு அடி பணிகிறேன் என்று கூறுகிறேன்.

குருமகாசந்நிதானம் அவர்களிடமிருந்து இத்திருமந்திரமாநாட்டிலே கலந்துகொள்ள வேண்டுமென்று, எனக்கு அந்த அன்புக் கட்டளை வந்ததும், எனக்குப் பேசுவதற்காகக் குறிப்பிடப்பட்டிருந்த பொருளைப் பார்த்தேன். அகத்தியம் என்பது எனக்குப் பேசுதற்குக் கொடுக்கப்பட்ட பொருள். குருமகாசந்நிதானம் அவர்களுடைய தீர்க்க தரிசனத்திற்கு அத்தலைப்பையே சான்ருகக் கருதினேன். திருமந்திரத்தில் 'அகத்தியம்' என்ற ஒரு பகுதியையும், அகத்திய முனிவருடைய கதையையும் எனக்கு நன்ருக நினைவுபடுத்திக்கொள்ளக்கூடிய சிலநிகழ்ச்சி மேல்நாட்டிலே நடந்தது. செந்தமிழும் சைவமுமாக இருப்பதுதான் அகத்தியம். அப்படிப்பட்ட பொருளைப்பற்றிப் பேச எனக்குக் கட்டளையிட்டிருப்பதால் அதையொட்டி இரண்டொரு நிகழ்ச்சிகளைச் சொல்லுகின்றேன். இங்கும் ஆதீனத்திலே எனக்கு வாழ்த்து அருளி என்னை வழியனுப்பியதோடு அல்லாமல் அவர்களுடைய வாழ்த்து அகத்தியராக இருந்து வழிகாட்டி, துணை செய்தது என்று இங்கே சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

லண்டன் நகரத்திலே இரண்டு பெரிய காட்சிச்சாலைகள் இருக்கின்றன. ஒன்றின் பெயர் 'ப்ரிட்டிஷ் ம்யூஸியம்' என்பது. இன்னென்றினது பெயர் 'விக்டோரியா ஆல்பர்ட் ம்யூஸியம்' என்பது. இப்படி இரண்டு விதமாக அருமையான காட்சிச் சாலைகள் லண்டன் நகரத்தில் இருக்கின்றன. பிரிட்டிஷ் மியூஸியத்தில் இந்தியப் பகுதி என்று இருக்கிறது. அங்கே நம்முடைய நாட்டிலிருந்து எடுத்துச் சென்ற அனேக சிற்பங்கள் இருக்கின்றன. எத்தனையோ நடராஜப்படிவங்களைக்கண்டு மனம் மகிழ்ந்தேன். பிறகு, விக்டோரியா ஆல்பர்ட் ம்யூஸியத்திற்கு வந்தபோது, பல பொருள்களைப் பார்த்துக்கொண்டு வந்தவன் ஒரு தனியறையிலே இரண்டு திரைச்சீலைகளைப் பார்த்தேன். திரைச்சீலைக்கு மேலே தமிழ்

எழுத்துக்கள் தெரிந்தன. இந்த ஆங்கில நாட்டிலே, இங்கிலாந்திலே, லண்டன் நகரத்திலே தமிழ் எழுத்துக்கள் எப்படி வந்தன என்ற ஆவல் உண்டாயிற்று. உடனே திரைச்சீலைகளுக்கு அருகில்சென்று பார்த்தேன். ஒரு திரைச் சீலையில் இராமாயணக் கதை நிகழ்ச்சிகளை நூலினால் பின்னியிருந்தனர். இன்னொரு திரைச்சீலையில் சிவ - பார்வதிகல்யாணக் காட்சியை வர்ண நூலில் பின்னியிருந்தார். இரண்டு திரைச்சீலைகளும் மதுரையிலிருந்து லண்டனுக்கு எடுத்துச் சென்றவை என்ற குறிப்பைப் பார்த்தேன். மீனாட்சி அம்மையாரின் திருமணத்தைக் கட்டம் கட்டமாகச் சித்தரிக்கும் படங்கள் அவை. அவற்றில் அகத்தியருக்குக் காட்சி கொடுக்கும் ஒரு கட்டத்தைக் கலைஞன் அழகாகத் திரையில் பின்னிவிட்டிருந்தான். அகத்தியருடைய உருவத்தைக் கண்டேன்.

திருமந்திரத்தில் அகத்தியத்திலே வரும் கதை தெரியும். சிவ - பார்வதி திருமணத்தைப் பார்க்க எல்லோரும் வடநாடு சென்றார்களாம்; அப்பொழுது வடக்கு தாழ்ந்து, தெற்கு உயர்ந்தது; உடனே சிவபெருமான் கட்டளைக்கு இணங்கி அகத்தியர் தென்னாடு வந்தார் என்பது புராணக்கதை. இந்தக் கதை ஒருபுறமிருக்க, அகத்தியர் தென்னாடு வந்தார்; அவரோடு தமிழ்வந்தது; அவரோடு சமயம் வந்தது; அவரோடு ஞானம் வந்தது. ஞானம் செல்வம். ஆங்கிலேய நாட்டிலே அகத்தியர் காட்சிதருகிறார்; இங்கும் தமிழ்ச் செல்வம்; தமிழ்ஞானம் இருக்கிறதே என்று எனது மனதிற்குள்ளே ஐயப்பாடு வந்தது. அகத்தியர் இருந்தால் தமிழும் இருக்கும்; சைவமும் இருக்கும்; இந்த இரண்டும் இங்கிலாந்து நாட்டிலே எங்கே இருக்கின்றன என்று தேடிப்பார்க்க ஆரம்பித்தேன். எப்பொழுது அகத்தியருடைய உருவத்தைக் கண்டேனோ, அங்கே தமிழும் இருக்கிறது; சைவமும் இருக்கிறது. இந்த இரண்டையும் கண்டு பிடித்துவிட்டுத்தான் நாம் செல்ல வேண்டுமென்று உறுதி கொண்டேன்.

சிலநாள் கழித்து ஆக்ஸ்போர்டு நகரம் செல்லவேண்டி நேர்ந்தது. இங்கிருக்கும் போது கேள்விப்பட்டேன்; திருவாசகத்தை ஆங்கிலத்திலே மொழிபெயர்த்து, அத்திருவாசகக் கருத்துகளை மேல்நாட்டில் பரப்பிய போப் அவர்கள் கல்லறை ஆக்ஸ்போர்டில் இருக்கிறது என்று. பல புத்தகங்களிலும் படித்திருக்கிறேன். அங்கே சென்றதும், ஜி. யு. போப் அவர்களின் கல்லறையைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று நினைத்தேன். ஆனால், ஆங்கிலநாட்டில் ஆங்கிலமொழிப் படித்தவர்கள், ஆங்கிலமொழியை நன்றாகக் கற்றுத் தேர்ந்த எழுத்தாளர்கள், இவர்களுடைய கல்லறைகளைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். போப்பினுடைய கல்லறையைப்பற்றி விசாரித்தும் எனக்குத் தகவல் கிடைக்கவில்லை. சில நாட்கள் கழித்து முதல் தடவையாக நான் ஆக்ஸ்போர்டுக்குச் சென்றபோது, போப்பினுடைய கல்லறை இங்கிருந்தும் கண்டுபிடிக்க முடியவில்லையே என்ற வருத்தத்தோடு திரும்பினேன்.

யார்க் என்னும் ஊரிலே ஒரு பெரிய நூல்நிலையம் இருக்கிறது. அதை மிகவும் உன்னதமானநிலையில் வைத்திருக்கிறார்கள். எந்தச்செய்தியையும் தெரிந்துகொள்ளலாம். அப்படிப்பட்ட ஒரு பெரிய நூல் நிலையம் யார்க்கில் இருக்கிறது. அதன் அதிபரிடம் கேட்டேன். 'உங்களுடைய நாட்டில் எங்களுடைய தமிழர், எங்களுடைய சைவர், போப் என்ற ஒரு பெரியார் அவர்களுடைய கல்லறை ஆக்ஸ்போர்டு நகரத்தில் இருக்கிறதென்று சொல்லுகிறார்களே; அது எங்கே இருக்கிறது? என்று கேட்டேன். அவர், 'பிரிட்டிஷ் நூல் நிலையத்தில் Who is who என்று இருக்கிறது; பிரிட்டிஷ் மக்களில் கற்றவர்கள், பண்டிதர்கள் இவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பு அச்சிடப்பட்டு அகர வரிசையில் இருக்கிறது; ஜி. யு. போப் என்பவரைப்பற்றிய குறிப்பைப் பார்த்தால் தெரியும்' என்று சொன்னார். அதைப் பார்த்ததில், ஆக்ஸ்போர்டு நகரத்தில் வால்டன்

தெருவில் அவருடைய கல்லறை இருக்கிறது. அங்கு செப்பல்கர் செமெட்ரி என்ற கிறிஸ்துவப் புதை இடத்தில் இருக்கிறது என்று தெரிந்தது. ஆக்ஸ்போர்டு சென்று, வால்டன் தெரு எங்கே இருக்கிறது என்று விசாரித்தேன். காட்டினர்கள். வால்டன் தெருவில் கல்லறைக்கூடத்தைத் தேடிச் சென்றேன். சென்றுல், அந்தக் கல்லறைக் கூடத்திற்கு எதிரே ஒரு புகையிலைக் கடையில் ஒரு மாது இருந்தாள். அவளிடம் சென்று, 'அம்மா! இதுதான் செமிட்ரியா?' என்று கேட்டேன். அவள், 'ஆமாம்; ஆனால், இந்த செமிட்ரியை அடைத்து ஐந்து ஆண்டுகள் ஆகின்றன; இங்கே 1500 கல்லறைகள் இருக்கின்றன; 3000 பேர்கள் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள்; இனி இடமில்லை என்று கதவைப் பூட்டிவிட்டார்கள்; ஒருவரும் நுழைய முடியாது' என்று சொன்னாள். எனக்கு வருத்தமாக இருந்தது. நாம் இங்கிலாந்துக்கு வந்து, ஆக்ஸ்போர்டு நகரத்திற்குச் சென்றுவிட்டு, போப்பினுடைய சமாதியை நாம் சரிவரக் காண முடியவில்லையே; காணுமல் தமிழ் நாட்டிலே எந்த முகத்தோடு செல்வேன் என்று வருந்தினேன். நான் சுத்தமான ஆங்கிலத்தில் பேசினதைக்கேட்ட அந்த மாது, உண்மையாகவே மிகவும் அனுதாபப் பட்டு, உன்னுடைய மூதாதையர் யாரோ ஒருவருடைய சமாதி இருக்கிறுப்போல் இருக்கிறது; நீ கல்லறைக் கூடங்களின் பாதுகாவலரிடத்தில் இப்பொழுதேசென்று, 'என்னுடைய மூதாதையர் ஒருவருடைய சமாதி இங்கே இருக்கிறது; அதைக் காண்பதற்காக வந்திருக்கிறேன்' என்று சொல்லுங்கள்; ஒருவேளை கதவைத் திறந்தாலும் திறக்கலாம்' என்றுள்.

'ஆம்; என்னுடைய மூதாதையருக்கு மூதாதையர்தான் அவர்; தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு தமிழனுக்கும் மூதாதையர்தான் என்று நான் சொல்லிவிட்டு, அந்தப் பாதுகாவலரிடம் சென்று, 'என்னுடைய மூதாதையருடைய கல்லறை இங்கே இருக்கின்றது என்று கேள்விப்பட்டேன்; அதைப்பார்க்க வந்திருக்கிறேன்' என்று சொன்னேன். அந்தப்பாதுகாவலர் கதவைத் திறந்தார். நானும் அப்பொழுது என்னுடன் வந்திருந்த நண்பரும் உள்ளே சென்றோம்.

அங்கே 1500 கல்லறைகள் இருக்கின்றன. அவைகளில் ஜி. யு. போப் அவர்களுடைய கல்லறையைக் கண்டுபிடிப்பது எப்படி? நண்பரும் நானுமாகத் தேடிக் கொண்டிருந்தோம். நான்படும்கஷ்டத்தைப் பார்த்துவிட்டு, அந்தப்பாதுகாவலர் மிகவும் மனம் இளகி, ஐயா! உங்களுடைய மூதாதையர் இறந்துபோய் எத்தனை ஆண்டுகள் ஆகின்றன? என்று கேட்டார். நான் சொன்னேன்; ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் கிழக்குக் கலைகளின் தலைவராக இருந்து, தெலுங்கு, தமிழ்ப்பண்டிதராகவும் பேராசிரியராகவும் இருந்தார்' என்று பதில் சொன்னேன். 'அப்படியானல் இந்த இடத்தில்தேடுங்கள்' என்று ஒருபகுதியைக் காட்டினர். அந்தப் பகுதியில் தேடினேன் தேடினேன்; அப்படித் தேடினேன். ஒரு மணி நேரமாகத் தேடியும் அகப்படவில்லை. பிறகு, சிவபெருமான் திருவருள் என்று நினைக்கிறேன்; அந்தப் பாதுகாவலர் ஒரு இடத்தில் தேடிக்கொண்டிருக்கும்போது, முட்செடிகளிருந்த இடத்தில் கைவைத்து விலக்கிக்கொண்டு, 'உங்கள் மூதாதையருடையபெயர் போப் என்று இருக்கிறதா?' என்று கேட்டார். 'ஆமாம்' என்று நான் பதில் சொன்னேன். உடனே, 'இருக்கிறது' என்று காண்பித்தார். போய்ப்பார்த்தால் அங்கே ஒரேசெடியும் கொடியுமாக இருந்த பகுதியில், நம்முடைய திருவாசகத்தை மொழிபெயர்த்த அந்தத் தமிழ்மகனுடைய நித்திரை நடந்துகொண்டிருந்தது. ஆக்ஸ்போர்டு நகரத்திலே என்னுடன்கூட வந்த இளைஞருடைய தமிழ்ப்பற்றைப்பாருங்கள்; வாளியில் தண்ணீரைக் கொண்டுவந்தார். அதைக்கொண்டு அந்தக் கல்லறைமேலே

இருந்த மாசுகளை அகற்றிவிட்டுப் பார்த்தோம். போப் பெருமகனாரின் கல்லறைமீது ஒரு சிறு குறிப்பு எழுதப்பட்டு இருந்தது. 'இந்தக் கல்லறையானது தென்னிந்தியாவிலிருந்து, அன்பர்கள் அனுப்பிய பணத்தைக் கொண்டு கட்டப்பட்ட கல்லறை' என்ற குறிப்பு இன்றும் அக்கல்லறைமீதிருக்கிறது.

அதைப் பார்த்ததும் எனக்கு ஆனந்தம் ஏற்பட்டது. அந்தப் பாதுகாவலரிடத்தில் நான் சொன்னேன்; 'எங்களுடைய மூதாதையர் இங்கு அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்; நாங்கள் எல்லாம் அனுப்பியுள்ள பணத்தைக் கொண்டு இந்தக் கல்லறை கட்டப்பட்டிருக்கிறது: இனிமேல் இங்கு முட்செடிகள் கொடிகள் வளர்ந்து இந்தக் கல்லறையை மூடிவிடாமல் பார்த்துக் கொள்' என்று சொல்லி, சிறிது பணம் கொடுத்துவிட்டு வந்தேன். 'எப்போதாவது தமிழ்நாட்டிலிருந்தோ இந்தியாவிலிருந்தோ யார் வந்தாலும் உங்களுடைய பெரியார் ஒருவரின் கல்லறை இங்கே இருக்கிறது என்று சொல்' என்று சொன்னேன்.

திரு. போப் அவர்களின் கல்லறைக்குப் பக்கத்தில் அவருடைய மனைவியாருடைய கல்லறை இருக்கிறது. அதிலேயும் குறிப்பு எழுதியிருக்கிறார்கள்: 'அந்த அம்மாளுக்கு சைவத்திலும் தமிழிலும் ஆழ்ந்த பற்று இருக்கிறது' என்று. நமது அகத்தியம் எங்கெல்லாம் புகழ் பரப்பிக்கொண்டிருக்கிறதென்பதற்குச் சான்றாக இப்படிப்பட்ட கல்லறைகள் இருக்கின்றன.

'அகத்தியம்' என்றால் தமிழ் ; சைவம். அந்தக் கல்லறையைக் கண்டு மெய் புளகித்தேன். அகத்தியரின் உருவத்தை அந்தத் திரைச்சீலையில் பார்த்தேன். அங்கே தமிழ் இருக்கிறது என்ற உறுதி பிறந்தது. அந்த உறுதியையும் மிஞ்சக்கூடிய விதத்திலே அகத்தியருடைய அருள் மீண்டும் எனக்கு உணர்த்தியது யார்க் நகரத்தில். ஸ்காட்லந்து பகுதியிலே யார்க் என்ற ஒரு நகரத்திற்குச் சென்றேன். அங்கே காஸில் ம்யூஸியம் என்ற கண்காட்சிச்சாலை இருக்கின்றது. அதைப்பற்றி அனேக புத்தகங்கள் படித்திருக்கிறேன். பலநாடுகளிலிருந்து திரட்டி வைக்கப்பட்ட பொருள்கள் அங்கே இருக்கின்றன என்ற குறிப்பைப் படித்தேன். சமய சம்பந்தமான காட்சிப் பொருள்கள் இருக்கின்றன என்று கேள்விப்பட்டேன். உடனே சென்று பார்க்கவேண்டும் என்று நினைத்துப்போனேன். காஸில் ம்யூஸியம் என்ற இடத்தில் பல சிலைகள், படிவங்கள் இருப்பதைப் பார்த்துக் கொண்டே வந்த பொழுது, ஒரு ஓரத்தில் ஒரு கண்ணாடிப் பெட்டிக்குள்ளே ஐம்பத்துநான்கு சண்முக ருத்திராட்சங்கள் கொண்ட மாலை வைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு ருத்திராட்சமும் ஆறுமுகங்களோடு அழகாக இருந்தது. பார்த்தபோது எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. இதை யார் அளித்திருப்பார்கள் என்று ஆராய்ந்தேன். ருத்திராட்சமணிக்குக் கீழே தங்கத்தால் செய்த ஒரு சிலுவைக் குறி தொங்கவிடப்பட்டிருந்ததைக் கண்டேன். அந்தப் பெட்டிக்குள்ளே ஒரு சிறு குறிப்பு இருந்தது. 'இதை அணியும்போது பேய்ப் பிசாசு அணுகாது' என்று குறிப்பு அது. எனக்குத் தூக்கிவாரிப்போட்டது: இப்படிப்பட்ட ஒரு சைவன் இருந்திருக்கிறானே என்று. ருத்திராட்ச மகிமை தெரிந்த ஒருவர், இப்படி அதிலே தம்முடைய சமயத்திற்கேற்ப சிலுவையை ஏற்றிவைத்திருக்கிறார். காஸில் மியூஸியத்தில் Who is who என்னும் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தேன். யார்க் நகரத்தின் பழைய மேயர் ஒருவர், கிழக்கிந்தியக் கம்பெனி டைரக்டர் ஒருவர் நம் தமிழ்நாட்டுக்கு வந்திருக்கின்றார்; யாரோ ஒரு பெரியவரிடத்திலிருந்து ருத்திராட்சமணியைப் பெற்றிருக்கிறார் என்று தெரியவந்தது.

அன்று மாலை யார்க் மேயர் நடத்தும் விருந்து ஒன்று இருந்தது. யார்க் மேயருக்கு ஒரு பெரிய கௌரவம் உண்டு. இங்கிலாந்து

நாட்டிலேயே இரண்டு மேயர்களுக்குத்தான் விசேஷ கௌரவம் உண்டு. ஒன்று லண்டன் மேயருக்கு; மற்றொன்று யார்க் மேயருக்கு. அவர்கள் எப்படி எப்படியோ சம்பிரதாயம் வைத்திருக்கிறார்களென்பதற்கு ஒரு சான்று சொல்கிறேன். மேயருடைய ஆளுகைக்கு உட்பட்ட எல்லைக்குள்ளே ஈ வருவதாக இருந்தாலுங்கூட, மேயரின் அனுமதிபெற்றிருந்தால்தான் உள்ளே நுழையலாம் என்று சட்டம் இருக்கிறது. மேயர் வந்து, 'யூ ஆர் பர்மிட்டெட் டு கம்' அதாவது 'நீங்கள் இங்கே வர அனுமதிக்கப்படுகின்றீர்கள்' என்று சொன்ன பிறகுதான் யாரும் வரக்கூடும். அரசியாக இருந்தாலுங்கூட மேயருடைய அனுமதி பெற்றுத்தான் வரவேண்டும். இப்படிப்பட்ட சம்பிரதாயம் நெடுங்காலமாக இருந்துவருகின்றது. நான் அந்த மேயரோடு ஒருநாள் விருந்துக்குச் சென்றேன். அப்போது 'உங்களுடைய காட்சிச்சாலையில் ருத்திராட்சமணியைப் பார்த்தேன்' என்று சொல்லியதோடு சிவமதத்தின் புனிதச் சின்னமாக இருக்கும் ருத்திராட்சம் ஒரு மரத்தினுடைய பழம் என்று அதனது அமைப்புப்பற்றியும், ருத்திராட்சங்கட்கும் சைவத் திருமடங்களுக்கும், குறிப்பாக இத் திருவாவடுதுறை மடத்திற்கும் உள்ள ஒரு தொடர்பு என்ன என்பதையும் நான் கூறி, சண்முக ருத்திராட்சத்தைப்பற்றியும் நன்கு விவரமாக எடுத்துச் சொன்னேன்.

"அப்படியானால், தமிழ்நாட்டில் இம் மாதிரி ருத்திராட்சத்தை வளர்க்க மடங்கள் இருக்கின்றனவா? அதன் விவரம் என்ன?" என்று கேட்டார். நான் ஆங்கிலத்திலே விவரம் சொல்லிக்கொண்டு வந்தேன்; அதை அவர் தன்னுடைய சுருக்கெழுத்தாளரைக் கொண்டு குறிப்பு எடுத்துக்கொண்டார்.

மறுநாள் லீட்ஸ் நகரத்திற்குப் போவதாக இருந்தது. மேயரிடத்திலிருந்து ஆள் வந்தான். 'உங்களை மேயர் லீட்ஸுக்குப் புறப்படுவதற்கு முன்னால் கூப்பிட்டார்' என்றான்.

'மாலை வருகிறேன்' என்று சொல்லி அனுப்பிவிட்டு, அன்று மாலை மேயரிடம் போனேன்.

"வாருங்கள், பழையபடி காளில் மியூசியத்திற்குச் செல்வோம்" என்றார்.

"நேற்றே பார்த்துவிட்டேன்; திரும்பவும் எதற்காக அழைக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"இன்னொரு காட்சிப்பொருள் இருக்கிறது" என்றார். என்னுடைய பெருமையைச் சொல்லவில்லை; நான் அவருடைய ஆர்வத்தைச் சொல்கிறேன். அங்கு சென்றதும் கண்ணாடிப்பெட்டியில் நான்கொடுத்த குறிப்பை, டைப்செய்துவைத்திருந்தார்கள். இன்றும் யார்க் மியூஸியத்தில் அந்தக்குறிப்பு இருக்கிறது. சைவ மடங்களின் வரலாறு, ருத்திராட்சத்திற்கும் சைவ மடங்களுக்கும் உள்ள தொடர்பு இவைகளைப்பற்றி நான் கொடுத்திருந்த விவரங்களை அங்கே வைத்து இருக்கிறார்கள். டைப்செய்த படி ஒன்றை அங்கே ஒட்டிவைத்ததோடு, ஒரு படியை 'யார்க் டைம்ஸ்' என்னும் பத்திரிகையில் வெளியிட்டு, என்னைப் பேட்டி கண்ட விவரத்தையும் வெளியிட்டிருக்கின்றார்கள். ஒருபடியை பிரிட்டிஷ் மியூஸியத்திற்கும் கொடுத்தார். அப்பொழுது எனக்கு வேறு ஒன்றும் சொல்லத்தோன்றவில்லை. 'தென்னாடுடைய சிவனே போற்றி; எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்று சொல்லி வணங்கினேன்.

இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் எதற்காகக் குறிப்பிடுகிறேன் என்றால், அகத்தியருடைய உருவத்தைப் பார்த்தேன். தமிழும் சைவமும் சென்ற இடமெல்லாம் இருப்பதைக் கண்டேன். அதனுக்குச் சான்றாக அங்கே போப் பெருமகனாருடைய கல்லறையும், ருத்திராட்ச மணிகளும், அதுபற்றிய விவரங்களும் உள்ளன. அகத்தியருடைய திருவுருவமும் அந்நாட்டில் இருக்கிறது.

அகத்தியம் இருப்பதற்கு அறிகுறியாக இந்த இரண்டு நிகழ்ச்சிகளையும் சொல்லலாம்.

திருமந்திரத்தில் 'அகத்தியம்' என்னும் பகுதியில் இரண்டு பாட்டுக்கள் உண்டு. நீங்களெல்லாம் திருமந்திரத்தை நன்ருகக் கற்றவர்கள். அப்பாடல்களை நினைவுபடுத்த வேண்டிய அவசியம் இல்லை. சிவ-பார்வதி திருமணத்திற்குத் தெற்கிலிருந்து வடக்கே ஏராளமானவர்கள் சென்றிருந்த காரணத்தால் வடக்கு உயர்ந்து தெற்கு தாழ்ந்தது. உடனே ஈசன் அகத்தியரைக் கூப்பிட்டு, தென்னுட்டுக்குப் போகும்படி பணித்தான். அதன்படி அகத்தியர் தென்னுடுவந்தார். நடு என்ற சொல்லும் அங்கி என்ற சொல்லும் யோகமுறையின் அனுபவத்திலே தெரிந்து கொள்ள வேண்டியவை. பகிரங்கமாகச் சொல்லுவதற்கு என் ஆச்சாரியர் அனுமதி கொடுப்பது இல்லை. நடுநிலைமை என்ருல் என்ன? அங்கி என்ருல் என்ன? என்பதை எப்படி வெளியிட முடியும்? குரு தொட்டு காண்பித்தால் நாம் உணர்ந்து, அக்கினியை வளர்த்துக்கொள்ளவேண்டிய ஒருவிஷயம். அது குருவின் அருளால் காட்டவேண்டிய விஷயம். அகத்தியர் ஞானத்தின் சின்னம். அவர் எங்கு இருக்கிருரோ அங்கு ஞானம் இருக்கிறது. அங்கே தமிழ் இருக்கிறது. சைவம் இருக்கிறது.

திருமந்திரத்திற்கு மூலகாரணமே அகத்தியந்தான். அப்படிப்பட்ட முனிவரின் நினைவை மீண்டும் கொண்டுவரும்வண்ணம் இவ்வளவு புனிதமான பொருளைப்பற்றிப் பேசுமாறு சிறியேனுகிய எனக்குப் பணித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களது அருட்கருணைக்கு என்னுடைய வணக்கத்தையும் நன்றியையும் மறுபடியும் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். அவர்களுடைய ஆசி எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலும் எனக்கு வழிகாட்டியுதவியது. இன்னும் வழிகாட்டும் என்ற நம்பிக்கை உண்டு என்று சொல்லி, மீண்டும் எனது அஞ்சலியைத்தெரிவித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

நடுவு நில்லாது இவ்வுலகம் சரிந்து
கெடுகின்றது எம்பெருமான் என்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீ போய்
முடுகிய வையத்து முன்னிர் என்ருனே.

— திருமூலர்.

## 'பதிவலியில் வீரட்டம் எட்டு'

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், M. A.,
சென்னை.

இங்கே ஞானச்செங்கோல் செலுத்தி வரும் அருள் உருவாகிய மகாசந்நிதானம் அவர்களுக்கும், தலைவர் அவர்களுக்கும், நண்பர்களுக்கும் என்னுடைய வணக்கம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

திருமூலர் திருமந்திரத்தில், இரண்டாந் தந்திரத்தில், இரண்டாவது அதிகாரமாகிய "பதிவலியில் வீரட்டம் எட்டு" என்பது பற்றிப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. முன்னாலே என்னை அறிமுகப் படுத்திய தலைவர் அவர்கள், எங்களுடைய ஆசிரியப்பிரானின் திருநாமத்தைச் சொன்னார்கள். திருவாவடுதுறையோடு தொடர்பு பெற்று, அதனை எல்லாக் காலத்தும், தாம் நினைப்பது மாத்திரமின்றி, பிறரும் நினைக்கும் வண்ணம் செய்தவர்கள் அந்தப் பெரியார் ஆவார்கள். அவர்கள் எந்தப் பேரவையில் பேசினாலும், எந்தப் பொருள்பற்றிப் பேசினாலும், திருவாவடுதுறை மடம் அவர்கள் கண்முன் வந்து நிற்கும். அதை, அவர்கள் பேச்சைக் கேட்டவர்கள் நன்கு அறிவர். அத்தகைய பெரியாருடைய திருவடியின்கீழ் இருந்து படிக்கின்ற பாக்கியம் எனக்குக் கிடைத்திருந்தது. அதனாலேயேதான் இந்த ஆதீனத்தின் ஒரு தொடர்பு எளியேனுக்குக் கிடைத்தது. இது இறைவனது திருவருள் விளைவு என்றே நான் கருதுகிறேன். தலைவர் அவர்கள் மிக அருமையான ஒரு கருத்தை 'தமிழிலக்கியத்தில் எட்டுத் தொகையை நிலைநிறுத்திய பெரியாரிடம் இருந்து பாடம் கேட்டவருக்கு அட்டவீரட்டத்தைப்பற்றி, பேசும் வாய்ப்புக் கிடைத்தது பொருத்தம்' என்று சொன்னார்கள். பொருத்தமான பொருள்கள் அறிவுடைப் பெருமக்களுக்கு நன்றாகப் புலனாகும் என்பதற்கு இது ஒரு சிறந்த சான்றாகும்.

'அட்ட வீரட்டம்' என்றால், இறைவன் செய்த வீரச்செயல்களைப் புலப்படுத்துகின்ற எட்டு ஸ்தலங்கள் என்று பெயர். 'வீர ஸ்தானம்' என்ற வடமொழித் தொடர் 'வீரட்டானம்' என்று தமிழிலே மாறியது; மூலஸ்தானம் என்பது மூலட்டானம் என்று மாறியதுபோல. பின்னும் குறுகி 'வீரட்டம்' என்று வந்தது. எட்டு ஸ்தலங்களிலே இறைவன்செய்த எட்டுவகையான வீரச் செயல்களைக் குறிக்கும் முறையிலே அந்த வரலாறுகளை விளக்குவதனால் 'அட்ட வீரட்டம்' என்று இந்நாட்டிலே எட்டு ஸ்தலங் களைச்சொல்வார்கள். எட்டு ஸ்தலங்களிலே ஏழு ஸ்தலங்கள் தேவார ஆசிரியர்களால் பாடல் பெற்றன. வழுவூர் என்ற ஸ்தலம் மாத்திரம் வைப்பு ஸ்தலமாக இருக்கிறது. ஞானசம்பந்தர் பாடிய பாடல்கள் கிடைக்க வில்லை. திருமூலர் ஒவ்வொரு வீரட்டத்திற்கு ஒவ்வொரு பாடலாகப் பாடியிருக்கின்றார். அதைமாத்திரம் கொஞ்சம் சுட்டிக்காட்ட லாம் என்று நினைக்கிறேன்.

முதலிலே திருக்கோவலூரைப்பற்றிப் பேசுகிறார். அந்தகாசுரன் என்பவன் தேவர் கட்குத் துன்பம் செய்துகொண்டிருந்தான். அதுகண்ட தேவர்கள் இறைவனிடத்திலே முறையிட்டார்கள். அந்தகாசுரனை ஆண் டவன் சூலத்தால் கொன்று அழித்தான். அந்த வரலாறுதான் அந்தகாசுரனுடைய சங்கார வரலாறு. அதை நினைவுறுத்துகிற ஸ்தலம் திருக்கோவலூர் என்று வழங்கப் படுகின்ற கோவல் வீரட்டம்.

கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர்வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன்றானே.

எமனைப் போன்றிருந்த அந்தகாசுரன், ஆண்டவனிடம் தான் பெற்ற வரத்தின் சிறப்பால் பிறருக்குத் துன்பம் தருவதையே தன்னுடைய செயலாகக்கொண்டிருந்தான். அவனுடைய அந்தச் செயல்களால் நலிந்த வானவர்கள் இறைவனைப்பார்த்து வேண்ட, ஆண்டவன் மூன்று கொழுந்தாக இருக்கும் சூலத்தால் அவனைக் குத்திச் சங்கரித்தார்.

அடுத்த பாட்டிலே திருப்பறியலூரில் நிகழ்ந்த தக்க யாக சங்காரத்தை நமக்கு நினைவூட்டுகிறார்.

*கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்*
*தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு*
*நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்*
*தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே.*

கதை இங்குள்ளவர்களுக்குத் தெரியும். தக்கன் சிவபெருமானிடத்தில் ஏற்பட்ட கோபத்தினால் யாகம் செய்தபோது, ஏனைய தேவர்களை அழைத்தான். மகாதேவனை அழைக்கவில்லை. அப்பொழுது நமது சிவ பொருமான் வீரபத்திரர் உருவத்தில் எழுந் தருளி, தக்கயாகத்தைச் சிதைத்து, அந்த யாகத்திற்கு வந்த தேவர்கட்குத் தண்டனை அளித்து, தக்கனுடைய தலையை அரிந்து, அந்தத் தலைக்குப்பதிலாக ஆட்டின்தலையை வைத்தார் என்று சொல்லுகிறார்.

பிரமாவுக்குத் துணையாக இருக்கும் தக்கனை நினைக்கிறார் திருமூலர். தக்கன் என்ன தவறு செய்தான்? கொலையினாலே பிழைசெய்தான் தக்கன். மிக நுட்பமாகச் சொல்லவேண்டுமானால், கொலையால் பிழை செய்தான். யாகம் செய்வதாகப்புகுந்தான். யாகத்திற்கு - யக்ஞத்திற்குத் தலைவனாக இருப்பவன் பரமேசுவரன்; யக்ஞேசுவரன். தலைவன் இல்லாமல் யாகம்செய்யமுடியுமா? ஒரு கல்யாணத்திற்குப் புரோகிதர் வந்தார்; கொட்டு மேளம் வந்தது; எல்லோரும் நிரம்பியிருக்கிறார்கள். ஆனால் கல்யாணம் பண்ணிக்கொள்கிற மாப்பிள்ளை வரவில்லை. மாப்பிள்ளை ஒருவன்தான் கல்யாணத்திற்கு உயிர் போன்றவன். மாப்பிள்ளை இல்லா விட்டால் என்ன? எல்லோரும் வந்து விட்டார்களே என்று யாராவது சொல்வார் களானால், அது திருமணத்தினுடைய ஒரு தத்துவத்தைத் தெரியாதவர்கள் சொல்லும் வார்த்தையாகும்.

அதுபோல், தக்கன்செய்யும் யாகத்திற்கு எல்லாத் தேவர்களுமே வந்துவிட்டார்கள். யாகத்திற்கு வேண்டிய பசு வந்துவிட்டது; ஆடுவந்துவிட்டது. ஆனால் மகாதேவனுக்கு அவிர்ப்பாகம் கொடுக்கவில்லை. கல்யாண மாப்பிள்ளை வராவிட்டாலும், வந்திருந்த வர்கள் விருந்துண்டார்கள் என்றால், அது கல்யாணவிருந்து ஆகாது. அதுபோலவே யாகத்திற்குப் பசு ஆடு இவை வந்திருந் தாலும், அது வேள்வி ஆகாது. மகா தேவனுக்கு அவிஸ் கொடுக்காமல், அவனை மறந்து செய்வதனால், அது வேள்வி ஆக வில்லை; கசாப்புக்கடையாகவே ஆயிற்று. தக்கன் கொலை செய்தான். தேவர்கள் சாப்பிட்டபொழுது தாங்கள் மிக நன்றாக வாழலாம் என்றுதான் நினைத்தார்கள். அது என்ன ஆயிற்று? அவர்களையெல்லாம் வீர பத்திரர் தாக்கும்படி ஆயிற்று.

யாகப்பசு என்று சொல்வது வழக்கம். ஆனால், வேத முறைப்படி செய்த வேள்வி யாக அதைச்சொல்லமுடியாது. ஆட்டைக் கொலைசெய்தான். மகாதேவனுக்கு அவிஸ் தரவில்லை; அதனால் வேள்வி ஆகவில்லை; அதனால் அது சிறந்த நிலையைப் பெறவில்லை என்ற குறிப்பை மணிவாசகர் சொல்கிறார். தேவர்கள் பெற்றது யாக அவிஸ் இல்லாத தால், அவர்கள் தண்டனை பெற்றார்கள்.

இறைவனுக்குக் கொடுக்க வேண்டிய அவிசை மறந்துவிட்டதால், அது கொலை ஆயிற்று. ஆகவே, தக்கனுடைய தலையை வெட்டிவிட்டு, அதை அக்கினியில்போட்டு, நம்மை நினைக்க மறந்தவனுக்கு இன்ன தண்டனை என்பதை உலகம் தெரிந்கொள்ள

வேண்டும் என்பதற்காக, 'இவன் இருக்கட்டும்' என்று, அவனுடைய தலைக்குப் பதிலாக ஆட்டுத்தலையை வைத்துச் சந்தி செய்தான் என்று தக்கயாக சங்காரத்தை இரண்டாவது பாட்டிலே சொல்லுகிறுர்.

மூன்றுவது பாட்டிலே, பிரமதேவனுக்கு ஏற்பட்ட அகங்காரம் காரணமாக, அவனுடைய தலையைக் கிள்ளி, அதனைக் கபாலமாக ஆண்டவன் கையில் எடுத்து வீரச்செயல் புரிந்தான் என்று சொல்கிறுர்.

எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியும்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்குஅச் சுதனை உதிரங்கொண் டானே.

அயனுக்கும் ஐந்து தலை; ஆண்டவனுக்கும் ஐந்து தலை. இதனுல் அயன் அகங்காரம் அடைந்தான். அதை அடக்குவதற்காக அயனுடைய ஒரு தலையை ஆண்டவன் கிள்ளி, அதை உலகம் காணவேண்டும் என்று கருதி, அதைப் பிரும்ம கபாலமாகக் கையிலே கொண்டார்.

அடுத்தது சலந்தராசுரன் கதை. அதை நினைப்பூட்டுகிற இடம் திருவிற்குடி ஸ்தலம்.

சலந்தராசுரன் யாவருக்கும் இடுக்கண் செய்துகொண்டிருந்தான். அவனைச்சங்காரம் செய்யவேண்டுமென்று ஆண்டவன் நினைத்தான். வேதியர் வடிவில் வந்து, 'நான் இவர்களையெல்லாம் அடக்கப்போகிறேன்' என்று சொன்னுர். அவர் தன் விரலால் தரையில் ஒரு சக்கரத்தை அமைத்தார். சலந்தராசுரனைப் பார்த்து, 'இச்சக்கரத்தை எடு; உன்னுடைய ஆற்றலைப் பார்க்கலாம்' என்று சொன்னுர். அவன் அதை எடுத்துத் தலையில் வைத்த உடனே, அந்தச் சக்கரம் சலந்தராசுரனுடைய தலையைக் கரகர என்று அறுத்து விட்டது. அந்தப் பாட்டைச் சொல்லும்போது, திருமூலர் உள்ளுருகிச் சொல்கிறுர்.

எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோதிபால்
பொங்கும் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித்து ஆழிசெய் தானே.

சாஸ்திரங்கட்கெல்லாம் தலைவனென்று சொல்லப்படுகிற பெருமான் என்று சொல்கிறவர் தன்னேடு தொடர்புபடுத்திச் சொல்கிறுர். 'எங்கும் கலந்தும்' என்றுல், அவன் இல்லாத இடம் ஒன்றுமில்லை. பார்க்குமிடமெங்கும் இருக்கிறுன். ஆனுல், என் மாட்டு எப்படி இருக்கிறுன்? என் உள்ளத்தில் எழுகின்ற தலைவன் என்கின்றுர். என்னுடைய உள்ளத்திலே எழுகின்றுன் அவன் என்று சொல்லுகிறுர். அடியார்களுடைய உள்ளத்திலே கோயில் கொண்டிருக்கிறுன் என்று சொல்வது வழக்கம். அவன் நினைப்பவர் மனத்தைக் கோயிலாக்கொண்டவன். அதை நாம் பார்க்கும்போது, ஆண்டவன் அடியார்களுடைய திருவுள்ளத்தில்தானு இருக்கிறுன் என்ற கேள்வியும் எழுகிறது. இறைவன் எங்கும் இருக்கிறுன் என்று சொல்கிறுர். அடியார் உள்ளத்தில்மாத்திரம் இருக்கின்றுன் என்று சொன்னுல், ஏனைய இடத்தில் இல்லை என்பது தெரிகிறது. அது உண்மையானுல், அவன் எங்குமிருக்கிறுனு என்ற ஐயம் ஏற்படும். அப்பர் சுவாமிகள், 'நினைப்பவர்மனம் கோயிலாக்கொண்டவன்' என்று சொல்லியதுசரியா இல்லையா என்று ஐயப்பாடு கூடவே எழுகிறது.

இறைவன் எங்கும் இருக்கின்றுன்; உண்மைதான், இப்பொழுது நம்முடைய தலைவர் இங்கே இருக்கிறுர். அவர் தமது பல்கலைக்கழகத்திலும் இருக்கிறுர். இன்னும் பல இடங்களிலும் இருக்கிறுர். ஆனுல் அவருடைய மனம் போனபோக்கிலே சுதந்தரமாக இருக்கும் ஒரு இடம் வீடு ஆகும். இன்னெரு உதாரணம் பார்ப்போம்.

ஒருவன் அலுவலகத்தில் வேலை செய்கிறுன். அங்கே மின்சார விசிறி இருக்கிறது; மணி அடித்தால் ஆள் வருகிறுன்; எல்லா வகையான ஆணையையும் நடத்திக்கொண்

டிருக்கிறன். ஆனாலும், மாலையில் மணி அடித்தவுனே வீடுபோக ஆசைப்படுகிறன். வீடு அத்தனை வசதி உடையதாக இல்லை. இல்லாவிட்டாலும், அங்குப் போக ஆசைப் படுகிறன். காரணம் என்ன? அலுவலகத்தில் ஒரு வரையறைக்குள்ளே அடங்கி வேலை செய்யவேண்டி இருக்கிறது. சிறந்த ஆணை யாளனுக இருந்தாலும் ஒரு கட்டுப்பாட்டுக் குள்ளே வேலை செய்கிறன். ஆனல், தன் மனம்போனபடி, எதை வேண்டுமானுலும் எடுத்துப் பார்ப்போம் என்ற உரிமை தன் வீட்டில் இருக்கிறது. அதனுல் வீட்டுக்குப் போக ஆசைப்படுகின்றன். அங்குப் போய் தனது சொந்த சொருபத்தில் இருப்பான்; தன் சக்தியைக் காட்டுவான். அதுபோல், இறைவன் எங்கும் இருக்கிருர்; எல்லோ ருடைய உள்ளத்திலும் இருக்கின்றர்; என்றுலும் சில இடங்களில் அவசரமாக வந்துபோகிறன் ; சில இடங்களில் அலுவ லாகக் கடமைக்காக இருக்கிறவன்போல் இருக்கின்றன். சில இடங்களில் நடந்து கொண்டே இருக்கிறன். ஆனல், சில இடத்தில், தன்சொந்த இடத்தில் இருக்கிற மாதிரி இருக்கின்றன் ; தனது சைதன்யம் அத்தனையையும் வெளிப்படுத்திக் கொண்டு, மிக ஈடுபாடாக இருக்கின்ற இடம் எது என்றல் அதுதான் நினைப்பவரின் மனம். தானுக விரும்பி, தன் சொந்த இடமாகக் கொண்டு, தன் அருள்முழுவதும் நிரம்பிக் கிடக்கிறது என்று சொல்லும்படி அவன் இருப்பது நினைப்பவர் மனம்.

ஆகையினுல், ஆண்டவனை உளம் கனிந்து, உள்ளன்பினுல் யார் யார் வழிபடு கிறர்களோ அவர்களைப் பார்த்தால், ஆண் டவன் ஒருவன்இருக்கிறன் என்று நமக்குத் தெரியும். ஆண்டவன் இல்லை என்று சொல் கிறவர்களுக்கும் தெரியும். தன்னை நினைக் கிறவர்களிடத்திலே சைதன்யத்தை மிகுதி யாக ஆண்டவன் காட்டிக்கொண்டு இருக் கிறன். ஆண்டவன் திருவருள் இவர்கள் மூலமாகத் தோன்றும்படியாக இருக்கிறன்.

ஆகையால், எங்கும் கலந்து இருக்கும் ஆண்டவன் என் உள்ளத்து எழுகிறன்; எங்கும் இயங்குகிறன்;- சைதன்யத்தைக் காட்டுகிறன் என்ற உயர்ந்த உண்மையை இந்தப் பாட்டில் சொல்கிருர்.

எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோகிபால்
பொங்கும் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித்து ஆழிசெய் தானே.

இப்படி திருவிற்குடியில் ஜலந்தராசுரன் வதத்தை நினைக்கும்போது உள்ளத்திலே ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் கிளர்ச்சி பெற்றதைக் குறிப்பிடுகிருர்.

அடுத்து முப்புரம் செற்ற கருத்தைப் பாடுகிருர். இந்தஊரிலேதான் முப்புரத்தைச் சங்காரம் செய்த வீரச்செயல் நிகழ்ந்தது என்று சொல்லிக்கொண்டு அதோடுமட்டும் நின்றுவிடுகின்றர்கள் மக்கள் என்று கூறு கின்றர். ''முப்புரம் செற்றனர் என்பர்கள் மூடர்கள்''. அதாவது சொல்வதோடு நிற்ப வர்கள் மூடர்கள். மெய்ப்பொருளைக் காண விரும்பாமல், கிளிப்பிள்ளைபோல் சொல்லிக் கொண்டே இருப்பவர்கள் அறிவு இல்லாத வர்கள். உட்கருத்தை அறியாமல் வீணுகச் சொல்கிருர்களே என்று இரங்குகிருர்.

ஆண்டவன் குளிருக்குக் குளிர்ச்சி; தீக்குத் தீ; தலையிலே கங்கையை வைத்த சடையுடையவன். கையிலே தீ இருக்கிறது. ஆண்டவன் தண்மைக்கும் இருப்பிடம்; வெம்மைக்கும் இருப்பிடம். தண்மையைக் காட்டவேண்டுமிடத்தில் தண்மையையும், வெம்மையைக் காட்டவேண்டிய இடத்தில் வெம்மையையும் காட்டுவான்; மின்சாரத் தினுல் ரிப்ரிஜிரேட்டரும் இயங்குகிறது. மின்சாரத்தினுல் ஸ்டவ்வும் இயங்குகிறது. பட்டிக்காட்டான் - விவரம் தெரியாதவன் வேண்டுமானுல் அவன்சொல்லலாம்; ரிப்ரிஜி ரேட்டரைத்தான் மின்சாரம் இயக்கமுடியும் என்று; அல்லது மின்சாரம் ஸ்டவ்வைத் தான் இயக்க முடியும் என்று. இரண்டும்

உண்மை; இரண்டும் பொய். நெருப்பை உண்டாக்குகிறது என்பது சரி; நெருப்பைத் தான் உண்டாக்குகிறது என்பது பொய். இரண்டும் ஒரே இடத்தில்தான் உண்டாகிறது. கருவிக்குத் தக்கபடி குளிர்ச்சியும், தீயும் பிறக்கிறது. இரண்டுக்கும் மூலமாக இருப்பது மின்சாரம். இப்படி விஞ்ஞானம் காட்டுகிறது ஆண்டவன் திருவுருவத்தை.

இறைவன் புரத்தை எரித்தான்; கங்கையையும் தலையில் வைத்திருக்கிறான். கங்கை தண்மையானது அல்லவா? அங்கே எப்படி வெம்மை உண்டாகும் என்று கேட்டால், அதை மின்சாரம் நன்றாகப் புலப்படுத்தும்.

“முப்புரம் செற்றனர்” என்று மாத்திரம் சொன்னவர் அறிவு இல்லாதவர்கள். மும்மலங்கள் போகவேண்டுமானால், அந்த மும்மலத்தையும் அழிக்கக்கூடிய ஆண்டவன் திருவருள் வேண்டும். மலத்திலிருந்து நீங்கி, இன்பம் காணவேண்டும் என்பது திரிபுரம் எரித்த வரலாறு புலப்படுத்தும். மும்மலங்கள் அழியவேண்டும் என்பது மிகவும் அவசியம் என்பதைத் திருமூலர் நினைவூட்டுகிறார்.

முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மலகாரியம்.

திருக்கடவூரில் ஆண்டவன் காலனை உதைத்துக் கொன்றான். இதற்கு யோக முறையிலே ஒரு பொருள் சொல்கிறார்கள். ஆண்டவன் கால சம்ஹாரம் செய்ததுபோல் நாமும் செய்ய வேண்டும். ஆண்டவன் கடவூரில் செய்தான். நாம் இந்தக் கடவூரில் அதாவது இந்த உடலில் செய்யவேண்டும். ஆண்டவன் காலால் உதைத்தான். நாம் நம்முடைய நாடிவழியாக் ஓடும் காற்றைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதையும் புலப்படுத்துகிறார். இறைவன் அன்று செய்த காரியத்தை நாம் ஏதோ ஒரு கதையென்று நினைக்காமல், யோகப் பயிற்சியிலேசெய்து, என்றும் மாறா இளமை உடையவர்களாக நாம் இருக்கவேண்டும்.

காமசம்ஹாரம். இது திருக்குறுக்கை நிகழ்ச்சியைப் புலப்படுத்துகிறது. மனம் பல வழிகளில் படர்ந்து, ஆசை உண்டாக்கும். காமம் என்றால் மையல். ஆயிரமாயிரம் கிளைகளாகப் படர்ந்து செல்லும் மனத்தின் ஆசையை அடியோடு அழிக்க முடியாது. பரவி இருக்கும் மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும். முதலிலே வட்டமாக ஆக்கி, அப்புறம் மையமாக்கவேண்டும். சண்டி மாட்டை வசப்படுத்த முளையிலே கட்ட வேண்டும். கயிறு சுற்றச் சுற்ற அது முளை அருகே வந்துவிடும். அதுபோல், மனத்து ஆசையைத் திடீரென்று அறுக்க முடியாது. இறைவன் என்ற முளையைச் சுற்றிச் சுற்றி வரச்செய்தால் படர்ந்திருக்கும் மனம் ஒன்றி விடும். இப்படி மனோலயம் வரும்.

மனோலயம் உண்டாகி, பிறகு தியானம் உண்டாகும். அப்பொழுது மனம் நாசம் ஆகும். செயல் மாண்டுவிடும். ஒருமைப்பட்ட மனம் இருந்தால் காமச்செயலை அழிக்கலாம். அதைத்தான் திருக்குறுக்கைச் சம்பவம் உணர்த்துகிறதாகத் திருமூலர் சொல்லுகிறார்.

ஆகையால், திருமூலர் சொல்கிற அட்ட வீரட்டம், ஆண்டவன் அட்ட வீரட்டத்தில் செய்த எட்டுவிதமான வீரச்செயல்களைப் பற்றிச் சொல்லி; கும்பிடுபோட்டால்மட்டும் போதாது, நாமும் அட்ட வீரட்டத்தைச் செய்யவேண்டும் அதாவது எட்டுவிதமான வீரம் காட்டவேண்டும்; அறியாமையாகிய அந்தகனைக் கொல்லவேண்டும்; ஆண்டவனுக்கு நிவேதனம் செய்யாதது பொருள் அல்ல; ஆண்டவனுக்கு நிவேதனம் செய்ய வேண்டும்; மும்மலங்களை அழிப்பதற்குப் பயில வேண்டும்; யோகப் பயிற்சி செய்து, பெருவாழ்வு பெற வேண்டும்; படருகிற மனத்தை ஒருமுகப்படுத்தி, ஆசையை நீக்க வேண்டும்; ஆண்டவன் செய்த எட்டு வீரச்செயல்களை நாமும் செய்யவேண்டும் என்று வற்புறுத்துகிறது.

---

‘இலிங்க புராணம்’

## திருப்புகழ் திரு. தா. ப. வேங்கடசுப்பிரமணியம் அவர்கள்,

*திருவாவடுதுறை.*

கருணையே வடிவாக விளங்குகின்ற ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிப்போதுகளுக்கு அடியேனது மனமார்ந்த வணக்கம் உரித்தாகுக, இவண் எழுந்தருளியிராகின்ற முனிபுங்கவர்கட்கும், தலைவரவர்கட்கும், ஏனைய அன்பர்கட்கும் எனது மனமார்ந்த வணக்கம்.

திருமந்திரத்தில் இரண்டாம் தந்திரம் “அகத்தியம்” முதல் “பெரியாரைத்துணைக் கோடல்” வரை இருபத்தைந்து பொருள்களைத் தன்னகத்தே கொண்டொளிர்வது. அதில் மூன்றாவது பொருள் “இலிங்க புராணம்” ஆகும். அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமான் அநாதிமலபந்தராகிய ஆன்மாக்கள் இடர்க்கடலினின்றும் நீங்கி இன்பத்துறையெய்தி இளைப்பாறுவதற்கு இன்றியமையாத மரக்கலமாக ஈசான முகத்தினின்று சிவபேத ருத்திரபேதமாகத் திருவாய்மலர்ந்தருளிய இருபத்தெட்டு சிவாகமங்களில் முதலாவதாகிய காமிகாகமசாரமாகும் இரண்டாந்தந்திரம்.

சிவாகமங்களைக் காமிகம் முதலாக வாதுளம் ஈறாக இருபத்தெட்டென்று கூறுவது மரபாக இருக்க, நமது திருமூலதேவர் தாம் எடுத்துக்கூறப் புகுந்த ஒன்பதாகமங்களில் அம்மரபு கொள்ளாது “பெற்றநல் ஆகமம் காரணம் காமிகம், உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம், மற்றவ் வியாமளமாகுங் காலோத்தரம், துற்றநற் சுப்பிரஞ் சொல்லும் மகுடமே” என்பதை நோக்குமிடத்து மகுடாகமத்தில் கூறப்படும் நடன காரியத்திற்குக் காரணமாகியதாகக் காரண ஆகமத்தை முதற்கண்ணே கூறியிருக்கக் கூடுமோ? என்று உன்னுகிறேன்.

இம்மையில் ஏற்படுகிற துன்பங்களைத் துடைத்து இம்மையின்பத்தை அடையச் செய்விப்பது ஸ்ரீ அகோர மந்திரமாகையால் அவ்வகோரமந்திர ஸ்ரீ உருத்திரமூர்த்தியின் நிலையினை விரிவான விபரமாகச் சொல்லும் காரணாகமம்தொடங்கி முடிவிலின்பங் கூட்டும் ஸ்ரீ ஞானக்கூத்தரின் நிலையினை அல்லது கூத்து நிலையினை விரிவாம் விளக்கம் கூறுகின்ற மகுடாகமத்தையும் முடிவாகத் தன்னுட்கொண்டு திருமந்திரம் ஒளிர்வதை உற்று நோக்கின் ஆன்மாக்கட்கு இம்மை நலன்கிட்ட ஒழுகலாறுகளையும் இம்மையே அம்மை நலன்கிட்ட ஞானபாதீத ஆற்றையும் ஒருங்கே காட்ட காரணம்தொடங்கி மகுடத்தில் முடித்து, இவ்விதம் கூறியிருக்கின்றாரெனக் கொள்ளவும் கிடக்கின்றது.

இலிங்கபுராணம்: இலிங்கம் புராணம் என்னும் இருசொல்லாலாகிய ஒரு சொற்றொடர். இலிங்கமென்பதன் தாது அர்த்தம். மகாசங்கார காலத்தின்போது சகலசேதனாசேதனப் பிரபஞ்சங்களும் லயம் அடைந்து பின் சிருஷ்டி காலத்திலே அங்ஙனம் உற்பத்தியாகிறமையான் ‘லிங்கம்’ எனப்படும் எனச் சுப்பிரபேதாகமம் கூறுகிறது. இலிங்கம் பஞ்ச கிருத்தியத்தை விளக்குவது. தோன்றிய பொருள்கள் அழிந்து போகாமல் சிலகாலம் நிலைத்து அழிகின்றமையான் ஒவ்வொன்றினும் தோற்றம் திதி சங்காரம் என்னும் மூவகைத் தொழிலும் நிகழ்கின்றன. மகாசிருஷ்டி காலத்தில் எய்தும் படைத்தல் முதலிய கிருத்தியங்களுள் திதியில் திரோபவமும் சங்காரத்தில் அநுக்கிரகமும் அடங்குவன என்று பெரியோர்கள் கூறுகின்றனர். ஆன்மதத்துவத்தின்பாற்பட்ட அசுத்தப்பிரபஞ்சம், வித்தியாதத்துவத்தின்

பாற்பட்ட சுத்தாசுத்தப் பிரபஞ்சம், சிவ தத்துவத்தின் பாற்பட்ட சுத்தப்பிரபஞ்சம் ஆகிய முத்திறப் பிரபஞ்சத்தினும் சிருட்டி யாதி ஐந்தொழிலும் சித்தரிக்கப்பட்டிருத்த லாகவிளங்குதலின் வருணபத்ததியுடையார், லிங்கம் என்னும் பதமானது, சித்தரித்தல் எனும் பொருள்படுகின்ற 'லிகி' என்னும் தாதுவினின்றும் பிறந்தமையால் சிவபிரான் சிருஷ்டியாதி ஐந்தொழில்களால் பிரபஞ்சத் தைச் சித்தரிக்கின்றார் எனப்பொருள்கொள் ளுகின்றார்.

இங்ஙனம் பஞ்சகிருத்யப் பிரபாவத்தை விளக்கும் லிங்கசப்தமானது இலிங்கத்தின் வியத்தி ஸ்தானமாகிய சைலம் ஸ்படிகம் க்ஷணிகம் லோஹஜம் முதலியவற்றிற்கும் உபசார மாத்திரத்தினால் வழங்கப்படுகிறது. சிவலிங்கத்தின் மேற்புறமாகிய நாதம் லிங்கமெனவும், கீழ்ப்புறமாகிய விந்து பீட மெனவும்படும் என்று ஆகமம் கூறுகின் றது. இப்பிரபஞ்சமுழுமையும் நாத பிந்து மயமேயாம். அதாவது சிவசத்தி மயமாம். ஏழாந்தந்திரத்தில் ஆருதாரத்தைச் சொல்லி, பின்னர் அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆத்மலிங்கம், ஞானலிங்கம் சிவலிங்கம் என ஆறு லிங்கங்கள் கூறப்படு கின்றன. இரண்டாந்தந்திரத்தில் மூன்றுவது பொருளாகிய லிங்கபுராணமென்பதில் லிங் கத்தின் விரிவான விபரத்தை அங்கு பரக்கக் காணக்கிடக்கிறது. குறியைக் குறியாது குறித்தறியும் நெறியில் ஒளிர்வது இலிங்கம் எனப்படும். யாவும் எதனிடம் ஒடுங்கிப் பின்பு ஐந்தொழில் நடாத்துதற்கு மூலப் பொருளோ அதுவே இலிங்கம்.

புராணம் - ஒளி, பழமை எனப்பொருள் படும். எனவே, ஆதி முடிவற்றது; முன்னைப் பழம் பொருட்கு முன்னைப்பழம் பொருளா யுள்ளது; ஒளி மயமாயது. எதனிடத்தில் சகலமும் ஒடுங்கி, மறுபடியும் சிருஷ்டியாதி தொழில் செய்கின்றதோ? அதுதானே பழ மைப் பொருளாகும். ஆதலால், இலிங்கம் என்பதும், புராணமென்பதும் இருபெய ரொட்டுப் பண்பத்தொகையாகக்கொண்டு அப்பழம் பொருளைத் தன்னகத்தேகொண்டு விளங்கி விளக்குவிப்பது எனப் பொருள் காணக்கிடக்கின்றது.

ஆகாயம் ப்ரும்மம் (சிவம்) அதில் இலிங்கம் உண்மையின். இப்பூதமனைத்தும் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் அடங்கிய மலினப்பிரபஞ்சமும், வித்தியா தத்துவம் ஏழும் அடங்கிய மிசிரப்பிரபஞ்ச மும், சிவதத்துவம் ஐந்தும் அடங்கிய சுத்தப் பிரபஞ்சமும் ஆகாயத்திலிருந்தே உற்பத்தி யாகின்றன. ஆகாயத்தைத் தன் சரீரமாக உடையவர் பரம்பொருள். "ஆகாயத்துக்கு மேலேயுள்ள ஜோதி" என "அனைத்துக்கும் மேலாய்க் கூறப்பட்ட பரஞ்சோதி சிவபரம் பொருளே". அவரேதான் இலிங்க புராண சப்தார்த்தர்.

இதற்குமுன்பு பதிவலியில் வீரட்டம் எட்டு எனும் பேச்சில் ஒன்பதாவது பாட லில், "மூலத்துவாரத்து மூளும் ஒருவனை, மேலைத் துவாரத்தின் மேலுற நோக்கிமுன், காலூற்றுக்காலனைக் காய்ந்தங்கி யோகமாய்" என்பதும், பத்தாவது பாடலில் "இருந்த மனத்தை இசைய இருத்திப், பொருந்திய லிங்க வெளியது போக்கி" எனும் பாடல் அடிகளும் இலிங்க புராணம் என்னும் இத் தலைப்பிற்குத் தோற்றுவாயாக இருக்கிறது. "சேணம், கடிவாளம் முதலியவை இல்லாத தும், கட்டாததுமாகிய ஒரு குதிரை. அது பெருங்காயக் கடை வழியாக எட்டுடன் நாலதாய் ஓடுகிறது; அதை ஓடிப் பிடித்துக் கட்ட இயலாது; அதைத் தொடர்ந்து நெருங்கி, ஓடி மறித்து உள்ளே வரச்செய்ய வாசிநாடி நிலைக்கவேண்டும்; அது நிலைக்கச் செய்ய சுகமாம்" என்பதைக் கொங்கணர் கடைக்காண்டத்தில் "கட்டாகக் குதிரை பெருங்காயக் கடைவழியே. எட்டுடனே நாலதா யேகுதே - ஒட்டி, ஓடி மறியடா உள்ளே வரவாசி, நாடி நிலைக்கச் சுகம்"

எனக் கூறப்படுகின்றது. சித் என்ருல் ஞானம், சித்தர் - ஞானிகள். அவர்கள் நூலைத் துணைக்கொண்டுதான் ஒருவாறு பொருளை நிர்ணயிக்க வேண்டியிருக்கிறது.

*அடிசேர்வம் என்னஎம் ஆதியை நோக்கி*
*முடிசேர் மலைமகனர் மகளாகித்*
*திடமார் தவம்செய்து தேவர் அறியப்*
*படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே.*

இதில், பக்திநெறி கூறப்படுகின்றது. எப்பயனையும் கருதாது திருவடிப்பேற்றைக் கருதிப் புரியும் பக்தியே சிறந்ததாகும். அந்த நெறியை உலகத்தார் அறிந்து, நன்னிலை பெறக் காட்டுவிக்கும் முறையில் தலைவன் தலைவியர் ஒழுகலாறே சிறந்த எடுத்துக் காட்டாகக் காட்டுவான்வேண்டி, சிவபரம் பொருள் தம் பிரியாநாயகியாரைத் தம்மைப் பத்தியுடன் பூசித்து அடையும் நெறிகாட்டுமாறு திருவுளங்கொண்டு பருவதராஜகுமாரியாக அவதரிக்கச்செய்தார். உமாதேவியார் நமக்கெல்லாம் ஒருமை அன்புகொண்டு எப்படிப் பூசிக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்கவேண்டி, பருவத ராஜகுமாரியாக இருந்து பூசித்த வரலாற்றை இத்திருமந்திரப் பாடல் கூறுகிறது.

*திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை*
*அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா*
*புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்*
*பரிவொடு நின்று பரிசறி வானே.*

கடவுள் தன்னை விரும்புவார்க்கும், பூசிப்பார்க்கும், தனது கீர்த்தியைப் படிப்பவர்க்கும் மிகமிக எளிமையானவன். கசிந்து உருகும் நெஞ்சத்தே கட்டுப்பட்டொளிரும் இயல்பினன். இதனுல்தான் அடியார்கட்கு எளியான் எனக் கூறப்படுகின்றதாகும். பெருமான் முப்புரதகனம் செய்தவனுயிற்றே என்று நாம் பயப்படவேண்டியதில்லை. முப்புரம் எங்கும் திரிந்து பலரை நலியச்செய்யும் நாட்டம் உடையதாயிருந்தது. கடவுளின் வலிமையை முப்புரர் மதித்திலர். இக்காரணங்களால் முப்புரம் அழிக்கப்பட்டது. அவ்விதம் நம்முயிரும் ஆணவாதிகொண்ட நிலையில் அலையலுற்ருல் அவ்வாணவாதியை இறைவன் போக்கியே தீருவன் என்ற ஒரு உண்மையையும் மற்றும் பல தத்துவக் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு மிளிர்வது இப்பாடல்.

*ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்*
*ஊழி வலம்செய்ய ஒண்சுட ராதியும்*
*ஆழி கொடுத்தனன் அச்சுதற்கு அவ்வழி*
*வாழிப் பிரமற்கும் வாள்கொடுத் தானே.*

அதிகாரமல வல்லபம் உடையவரான பிரமனும், திருமாலும் தேயுலிங்க வழிபாடு செய்து நன்மைபெற்ற விஷயம் கூறப்படுகின்றது. பிரமனும் மாலும் தநயனும் தந்தையுமாக இருந்தும் ஒருவரோடொருவர் உண்மை அறியமாட்டாது ஒருசமயம் வாதாடலாயினர். இருவர்களும் தம்மைத் தாமே முதற்கடவுளாவோமெனக் கருதிப் போரிட்டனர். இவர்கட்கு உண்மையை உணர்த்தி நன்மைசெய்ய உன்னி, சிவ பரம் பொருள் இவர்களிடையே ஒளிப்பிழம்பாகத் தோன்றி, செருக்கு அடங்குமாறு செய்து' காட்டிய திருவண்ணுமலை வரலாற்றையும் மற்றும் பல உண்மைகளையும் தெரிவிப்பதாகும் இத்திருமந்திரம்.

*தாங்கி இருபது தோளும் தடவரை*
*ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி*
*ஆங்கு நெரித்து அமராவென் றழைத்தபின்*
*நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே.*

எவ்வளவுதான் வரத்தாலும் பலத்தாலும் சிரத்தாலும் கைகளினுலும் மிக்கோராயிருந்தாலும், அவ்வரபலம் முதலியவை பயன்படாது. அத்தகையோரும், ஆன்மாவினுள் பொருந்தியிருக்கும் ஆத்மலிங்க சொரூபனை வேத கீதமோதிப் பரவித்தான் பயனடைவர் என்பது முதலான பற்பல தத்துவ நுட்பங்களைக் கொண்டது இது. இராவணனுனவன் கயிலையங்கிரியைத்தூக்க முயன்று அடைந்த நிலையின் வரலாறுகளைத் தன்னகத்தே கொண்டொளிர்கின்றது.

உறுவது அறிதண்டி ஒண்மணல் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் ருரே.

ஸ்ரீ சண்டேசுரநாயனுர் முற்பிறப்பில் வேதாகமங்களை ஓதி உணர்ந்து சிவபூசை விதிவழுவாது செய்தமையால் இப்பிறப்பில் மிகுந்த இளமைப்பிராயதிற்றனே சகல சாத்திரப்பொருள்களையும் எளிதிலுணர்ந்து சிவனே எம்மையுடையவனென்னும் மெய் யுணர்விஞல் சிவன்மாட்டு இடையருது மேன்மேலும் பெருகிவளரும் அத்தியற்புத மாகிய மெய்யன்பே வடிவமாயினர். அவர் செய்யும் பூசை பிறருக்கு விளையாட்டாகத் தோன்றியதாயினும், இடையருத மெய் யன்பிஞலே செய்யப்பட்டமையாலன்றே உயிர்க்குயிராகிய சிவபிரானுக்கு மிக உவப் பாயிற்று. இந்நாயனுர் சிவபிரானுடைய உண்மையை நினைத்தல் கேட்டல் காண்டல் செய்தபொழுதே கரையழிந்து அன்பிஞலே ஒரு பயனும் கருதாது அவ்வன்புதானே தமக்கு இன்பமாகத் தம்மைமறந்துநின்ருர்.

இவர் சிவபூசைசெய்யும்போது தந்தை யாகிய எச்சதத்தன் இவர் முதுகில் பல முறை அடித்துக் கொடு மொழிகளைக் கூறவும், தாம் அவற்றைச் சிறிதும் அறிந் திலாது, அவன் பாற்குடத்தைக் காலால் இடறிச் சிந்தக்கண்டபொழுது தமது பரம பிதாவாகிய சிவபிரானுக்கு அபராதஞ் செய் தமைபற்றி அவன் கால்களைத் துணித்து முன்போலவே பூசிக்கத்துணிந்தமையானும் இவர் தம்மை மறந்து அன்பே மயமாக இருந்தாரென்பது பெறப்படுகின்றது.

இப்பக்தியோகத்தாலன்றே உடனே கருணுநிதியாகிய சிவபெருமான் இடபா ரூடராய் வெளிப்பட்டுத் தமது அருமைத் திருக்கரங்களால் எடுத்து 'நீ நம்பொருட்டு உன்னைப் பெற்ற பிதாவை வெட்டிஞய்; உனக்கு நாமே பிதா' என்றருளிச்செய்து, இவரை அணைத்து இவரது உடலைத்தடவி உச்சிமோந்து இவருக்கு அந்தச் சரீரத்திலே தானே தமது சாருப்பியத்தைக் கொடுத்துத் தொண்டர்களுக்கெல்லாம் தலைமையாகிய சண்டேசுரபதத்திலே இருத்தியருளினமை யையும் அனைத்தும் நாம் உண்கலமும்உடுப் பனவும் சூடுவனவும் பெறுக என்றருளிச் செய்தமையையும் அன்பு முதிர்ச்சியிஞல் தம்மை மறந்து பூசிப்பார்க்குச் சிவனருள் கிட்டும் என்பதையும் காட்டுகின்றது இத் திருமந்திரப்பாடல்.

ஓடிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடிமுகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் ருனே.

மக்களும் தேவர்களும் ஒரோரு சமயம் தெய்வசிந்தனையில்லாமல் தாமே நித்தியமாக வாழவேண்டுமென எண்ணுவர்; அவ்வெண் ணம் வந்த காலத்து இறைவனுடைய நித்தி யத் தன்மையை மறந்துவிடுவது இயல்பு. மக்கள் காயகல்பந்தேடி உழல்பவர்; தேவர் கள் அமுதுண்டு வாழ முயல்பவர்; அமுதம் கடைந்த காலத்து உண்டான ஆலாலவிஷத் தின் கொடுமைதாங்காது ஓடியும் வாடியும் நாடியும் இறைவனைக் காணமாட்டாமல் அலமந்த அமரர்கள் இறுதியாக, எங்கும் நிறைந்தும் அகத்தும் புறத்தும் நிலைத்தும் ஒளிர்பவன் இறைவன் என்பதையும் அவ ஞெருவனே சரணம் புகத்தக்க இடம் என் பதையும் உணர்ந்து, இறைவா நம என்று ஓலமிட இறைவன் அவ்வாலால விஷத்தை உண்டு தனது கண்டத்தடக்கிக் காத்தருளி னமை இப்பாடலில் காணக் கிடக்கிறது.

*உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.*

## 'தக்கன் வேள்வி'

ஆதீன மகாவித்துவான்,
திரு. கே. ஆறுமுகநாவலர் அவர்கள்,
நாகர்கோவில்.

குரு மகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளுக்கும், இங்கு வீற்றிருக்கும் முனி புங்கவர்களுக்கும், தமிழ்ப்பேராசிரியராய் வீற்றிருக்கின்ற தலைவர் அவர்களுக்கும் அடியேனுடைய வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டு, எனக்குக் கொடுத்துள்ள பொருள்பற்றி, குறுகியகாலத்திற்குள் பேசி முடிக்கலாம் என்று நினைக்கிறேன். பேசப் போகின்ற பொருள், திருமந்திரத்திலுள்ள தக்கன்வேள்வி என்பதாகும். இது தக்கன் செய்த வேள்வியைக் குறிக்கும். வேள்வி என்பது விரும்பிச் செய்யப்படுவது. யாதேனும் ஒன்றை விரும்பிச் செய்வார்களானால், அது வேள்வி என்று பொருள்படும். அதைத் தனக்காகவும் செய்யலாம்; பிறருக்காகவும் செய்யலாம்; அல்லது லௌகீகத்திற்காகவும் செய்யலாம்.

தக்கன் ஒரு வேள்வி செய்தான். அந்த வேள்வியின் நோக்கம் என்னவாயிருந்தது. தக்கனுக்குப் பெரிய ஆணவம் ஏற்பட்டது. அதிலே ஒரு ஆர்வம் ஏற்பட்டது. அதாவது உலகத்திலேயுள்ள தேவர்களை எல்லாம் அடக்கவேணுமென்றும், தனக்கு அவர்கள் எல்லோரும் கீழ்ப்படியவேண்டும் என்றும் எண்ணுகிறான். அந்த அளவில் அவனுடைய வேட்கை நிற்கவில்லை. எல்லாம் வல்ல பரம் பொருளாகிய பரமேஸ்வரனே தனக்குக் கீழ்ப்படியவேண்டும் என்றும் எண்ணம் கொண்டான். ஆகவே, சிவபெருமானையே நோக்கித் தவம் செய்தான். சிவபெருமானை அடக்குவது என்பது முடியாது என்ற ஒரு காரணத்தினால், அதற்கு அவன் ஒரு தந்திரம் செய்தான். தவிர, அவரை நேரடியாகத் தனக்கு அடங்கி நடக்கவேண்டும் என்று சொல்வதும் முறையல்ல. ஆகவே, சிவபெருமானை நோக்கி வரம் கேட்கும்போது, 'உம்முடைய மனைவியாகிய பார்வதி என் மகளாகப் பிறக்கவேண்டும்' என்று கேட்டான். அப்படியே பிறக்கட்டும் என்று சிவபெருமான் சிறிதும் யோசிக்காமல் வரம் கொடுத்தார்.

தக்கன் அதோடுமட்டும் நின்றானா? இல்லை. மேலும், 'நீரே என் மாப்பிள்ளையாக வந்து கல்யாணமும் செய்துகொள்ளவேண்டும்' என்றும் கேட்டான். அதற்கும் அவர் ஒப்புக்கொண்டார். அவனுக்கு என்ன நினைப்பு என்றால், இப்படி பார்வதிதேவியார் தனக்கு மகளாகப் பிறந்து, சிவபெருமான் தன் மாப்பிள்ளையாக வந்துவிட்டால், தான் அவ்விதத்திலே சிவபெருமானைக்காட்டிலும் உயர்ந்தவனாக ஆகிவிடலாமே என்பது. ஆனால், எல்லாம் வல்லவரான பரம்பொருளாகிய நமது சிவபெருமானை அடக்குவது என்பது முடியக்கூடிய காரியமா? நாமாக இருந்தால், இப்படிப்பட்ட ஒரு வரம் கேட்கும்பொழுதே, யோசித்துக் கொடுக்கிறோம் என்று சொல்வோம். பெருமானோ எல்லாம்வல்லவனாக இருப்பதால், யோசிக்காமல் எல்லா வரங்களையும் கொடுத்தார். ஆனால், தக்கனுக்கோ இப்படிப்பட்ட ஒரு வரம் கிடைத்துவிட்டதால், அவனிடத்தில் ஒரு அகந்தையானது ஏற்பட்டு விட்டது. அவன் கேட்ட வரத்தின்படி உமாதேவியார் அவனுக்கு மகளாகப் பிறந்தாள். அதிலே அவனுக்கு ஒரு தனிப்பெருமை. அப்படிப் பிறந்தமகளுக்குக் கல்யாணவயதும் வந்தது.

இந்தக் கதை நம்முடைய புராணத்திலே வருகின்றது. இனி, திருமூலர்தரும் பாடலைப் பார்ப்போம்.

தந்தைபிரான் வெகுண்டான் தக்கன் வேள்வி
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர் [யை
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே.

'தந்தைபிரான் வெகுண்டார்' என்பதால் கோபம் உள்ளதுபோல் சிவபெருமானைக் காட்டுகிறுரே தவிர, அது இயற்கையான கோபம் அல்ல. இயற்கையான கோபம் வந்துவிட்டால், அதை உலகம் தாங்குமா? சிவபெருமானுக்கு ஏற்பட்ட கோபத்தினுல் திரிபுரமே எரிந்தது அல்லவா? ஆகவே, இங்கே அவர் சினம் கொள்ளவில்லை. சினம் கொள்வதுபோல் ஒரு நடிப்பு. எதற்காக அந்தச் சினம்? இந்த உலகத்தைத் திருத்து வதற்காக. அதற்குஅச்சினம் வேண்டியதே. இல்லாவிட்டால் இந்த ஒரு பெரிய உலகம் நல்ல நிலைமை அடைய முடியாது. இது எப்படி இருக்கிறது என்றுல், நம்பெற்றுேர் கள் குழந்தைக்கு வியாதி வந்துவிட்டால், தக்கமுறையிலே சிகிச்சை செய்வதற்காக வைத்தியரிடத்தில் சென்றுகாட்டுகிறுர்கள். டாக்டர் அறுவைசிகிச்சை செய்யவேண்டு மென்று சொன்னுல், அதற்கும் சம்மதித்து சிகிச்சை செய்கின்றுர்கள். அப்பொழுது அந்தச் சிகிச்சையை நாம் ஆர்வத்தோடு டாக்டரைச் செய்யச் சொல்லுகின்றேம்.

இதைப்போலவேதான் இந்தவுலகத்தில் நடக்கின்ற பலவகையான விஷயங்களைக் கேள்விப்பட்டு, மற்றவர்கள்பால் தமக்கு உள்ள அன்பால் இந்த உலகத்தை உய்விக்க அவர் சில காரியங்களைச் செய்யவேண்டி யிருக்கிறது. ஆகவே, தக்கனது வேள்வி தோல்வியடையவேண்டும். அதற்காகவே, தன் மனைவி அவனுக்கு மகளாகப் பிறக்க வேண்டும் என்று கேட்டதற்கும் சினம் கொள்ளாமல் ஒப்புக்கொண்டார். தன்னை அவன் மாப்பிள்ளையாக வரவேண்டுமென்று சொன்னதற்கும் ஒப்புக்கொண்டார். அதன் பிறகு என்ன செய்தார்? தன் மனைவியை அவனுக்கு மகளாகப் பிறக்கும்படி செய்து, அந்த மகளை யாருமறியாதபடி அழைத்துக் கொண்டுசென்று தாம் திருமணம் செய்து கொண்டார். அதனுல் மாமனுருக்கு ஒரு அவமதிப்பு ஏற்பட்டது. தனக்குச் சிவ பெருமான் தக்க கவுரவம் கொடுக்காமல் போய்விட்டாரே என்று கோபம் ஏற்பட்டு விட்டது தக்கனுக்கு. அதனுல், அவரைநீக்கி நாராயணமூர்த்தியைக் கூப்பிட்டு, தனது வேள்விக்குத் தலைமை தாங்கும்படியாகச் செய்தான்.

இந்தவகையிலேயுங்கூட அவன் சிவ பெருமானை நிந்திக்கும்படியான ஒருசூழ்நிலை ஏற்பட்டது. தவிர, உமாதேவியாரையும் அழைக்கவே இல்லை. சிவபெருமானுக்கும் அவன் அழைப்புக் கொடுக்கவில்லை. ஆகவே அந்தவகையிலேயும் சிவபெருமானை இவன் அவமதித்ததாக ஆயிற்று. ஆகவே, இந்தச் சமயத்தில் உமாதேவி சிவனிடத்திலே சென்று முறையிடுகிறுள். இவ்வளவு அவ மதிப்பு ஏற்பட்டும், நீங்கள் சும்மா இருக்கி றீர்களே; ஏன்? உங்களுக்குக் கோபம் வர வேண்டாமா என்று கேட்கிறுள். கேட்டும் அவருக்குக்கோபம் ஏற்படவில்லை. அதற்கு மாருக அன்புதான் ஏற்படுகிறது. அதுதான் இந்த உலகத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக ஆகும். அப்படித்தான் பெற்றுேர்களும் தங்கள் குழந்தைகளிடத்திலே அன்புகாட்டு கிறுர்கள். குழந்தை தப்புசெய்தாலும் தாயா னவளுக்கு அதன்மேல் கோபம் ஏற்படுவது இல்லை. ஆகவே, பெருமான் தன்னுடைய இடத்திலே இருந்துகொண்டு, வீரபத்திரனை யும், பத்திரகாளியையும் அழைத்து அவர் களைஅனுப்பி அந்தயாகத்தை அழித்துவரச் செய்கிறுர்.

